பாருங்கள்! ஒரு அரை வில்லை ஸன்லைட் தான்

இவ்வளவு சலவையும் செய்து

முடித்தது!

அதன் அதிகப்படியான நுரையே

இதை நிறைவேற்றியது!



பளிச்சென்று வெண்மையாக

வெளுப்பது ஸன்லைட் சோப்

S. 243-50 TM

## கல்கி பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள் ; சம்பவங்களும் கற்பனையே.



மலர் 16
இதழ் 45

தமிழ்த்திரு நாடு தன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - *பாரதியார்*

ஹேவிளம்பி
வைகாசி 27

# மக்கள் ஆட்சியா?

"மக்களாட்சி நடைபெறுகிறது! மக்களின் விருப்பப்படியே எல்லாம் நடைபெறுகின்றன!" என்று மேற்கத்திய வல்லரசுகள் பிரமாதமாகப் பேசிக் கொள்கின்றன. ஆனால் உலகத்தில் நடைபெறும் காரியங்களைப் பார்த்தால் நமக்குச் சற்றும் நம்பிக்கை ஏற்படவில்லை.

அணுகுண்டுகளினால் ஏற்படும் தீமைகள் எவ்வளவு என்பது உலகறிந்த விஷயம். அணுகுண்டு யுத்தத்தைவிட அணுகுண்டு, ஜலஜ குண்டு சோதனைகளினால் மக்கட் சமுதாயத்துக்கு ஏற்பட்டு வரும் தீமைகள் பலப் பல என்று பலவாறாக எடுத்துக் கூறப்பட்டிருக்கிறது.

அணுகுண்டு ஜலஜகுண்டு சோதனைகளினால் எழும் புகையும் விஷமும், வான வெளியிலுள்ள காற்றையும் சமுத்திர நீரையும் பாழ்படுத்தி விடுகின்றன!

விஷகுண்டு வெடிப்பினால் வெளிப்படும் விஷம் மழை மூலமாக மக்கள் வாழும் பிரதேசங்களில் விழுந்து காய்கறிகளிலும், பாலிலும் சேர்ந்து விடுகின்றன என்று பெரும் ஆராய்ச்சியாளர்கள் எல்லாம் சந்தேகத்துக் கிடமின்றிக் கூறி விட்டார்கள்.

இந்த அணுசோதனைகளினால் வருங்கால சந்ததிகள் கூனாகவும், குருடாகவும் நொண்டியாகவும் பிறக்க ஏதுவுண்டு என்று கூறி வருகிறார்கள். யார்? உலகப் புகழ் பெற்ற விஞ்ஞானிகள் எல்லாம் அழுத்தம் திருத்தமாகக் கூறிவருகிறார்கள்.

இதுவரை ருஷ்யா, அமெரிக்கா, பிரிட்டன் வெடித்த வெடிகளினால் வான மண்டலமும் நீர் மண்டலமும் போதிய அளவு விஷ மயமாகி விட்டது. இன்னும் சோதனைகளைச் செய்து கொண்டு போனால் காற்றும் நீரும் தாங்காது என்று விஞ்ஞானிகள் சொல்லி வருகிறார்கள்.

மதத் தலைவர்கள் இது அக்கிரமம் என்று சொல்லி வருகிறார்கள். ஒரு பாவமும் அறியாத ஏழை ஆசிய மக்களை இத்தகைய கொடுமைகளுக்கு உள்ளாக்குவது கொடிய பாவத்திலும் பாவம் என்று சொல்லி வருகிறார்கள்.

ஏன், பிரிட்டனில் பெரும்பான்மையான மக்கள், தங்கள் அரசாங்கம் நடத்திய அணு சோதனைகளை நிறுத்த வேண்டும் என்று பெரும் கிளர்ச்சியே நடத்தினார்கள். தெருவில் ஊர்வலமாகச் சென்றார்கள். பிரதம மந்திரி மாக்மில்லன் மீது தங்களது அருவருப்பைக் காட்டிக் கொள்ளும் காரியங்கள் செய்தார்கள்.

ஒருவர் இந்த அக்கிரமத்தை என்னால் சகிக்க முடியாது என்று உயிர்த் தியாகம் செய்து கொள்ளக் கூடப் புறப்பட்டார்!

இருந்தாலும் அந்தந்த அரசாங்கங்கள் பொதுஜன அபிப்பிராயத்தைச் சற்றும் பொருட்படுத்தியதாகத் தெரியவில்லை.

சமீபத்தில் பிரிட்டன் இரண்டு தடவை பொதுஜன அபிப்பிராயத்துக்கு மாறாக கிறிஸ்துமஸ் தீவுகளில் ஜலஜ குண்டுகளை வெடித்துவிட்டன.

இதைப் பார்த்த மான்செஸ்டர் நகரத்தின் கிறிஸ்துவத் தலைவர் மிக உருக்கமாகச் சென்ற ஜூன் மாதம் முதல் தேதி பிரிட்டனுக்கு ஒரு வேண்டுகோள் விடுத்திருக்கிறார்.

'ஜலஜ குண்டுகளை வீசி யுத்தம் நடத்தி வெற்றி பெறுவதைவிட யுத்தத்தில் தோல்வியடைவது எவ்வளவோ மேல். பயங்கர பிளேக் நோயை விட மிகக் கொடியது இந்த ஜலஜகுண்டு. ஆகவே இந்த குண்டுகளை யாராவது ஒருவர் விட்

டொழித்து உலகுக்கு வழிகாட்ட வேண்டும். 'நம்புவதே மறை!' என்று நம்பிக்கை கொண்டு காரியம் செய்யவேண்டும். அந்தப் புனிதப் பணியைச் செய்யும் வாய்ப்பு பிரிட்டனுக்குக் கிடைப்பதாக!'' என்று நெஞ்சுருகப் பேசியிருக்கிறார்.

பாதிரியாரின் இந்த மொழிகளைப் படித்து ஆசிய மக்கள் ஒவ்வொருவரும் சந்தோஷப்படுவார்கள். சந்தோஷம் என்றால் திருப்தி. இப்படியொரு ஆங்கில கிறிஸ்துவப் பாதிரியாராவது தங்களுக்குப் பரிந்து பேசியிருக்கிறாரே என்று திருப்தி அடையலாம்; அவ்வளவு தான். பொதுவாக பிரிட்டனில் பிஷப்புகளுக்குச் செல்வாக்குண்டு. அவர்களுடைய வார்த்தைகளுக்கு மக்கள் மதிப்பளிப்பார்கள். அவர்களுடைய சொல்லுக்கு மதிப்புக் கொடுப்பது தான் உண்மையான ஜனநாயகத்தின் லட்சணம். ஆனால் மான்செஸ்டர் பிஷப் என்ன, சாட்சாத் கடவுளே வந்து கதறினால்கூட அணுகுண்டு வெடிக்கும் ராட்சஸர்கள் காதில் அந்த அன்பு மொழி ஏறும் என்று நம்புவதற்கில்லை. ஏதோ மான்செஸ்டர் பிஷப் ஜலஜ குண்டுகளை வெடிப்பது உலக மக்களுக்கு இழைக்கும் கொடுமை என்று கூறினாரே என்று மீண்டும் மீண்டும் திருப்தி யடைவதைத் தவிர இதற்குமேல் ஒரு பயனும் ஏற்பட்டுவிடாது.

ஏனெனில் உலகில் எங்குமே உண்மையான மக்களாட்சி நடைபெறவில்லை.

மக்கள் அனைவரும் சேர்ந்து ஜனநாயகம் என்ற பெயரில் ஓர் ஏதேச்சாதிகாரியை நியமிக்கிறார்கள். நியமிக்கப்பட்ட பிறகு 'அவர் இட்டது சட்டம்!' என்று மக்கள் வாய்மூடி ஊமைகளாக நடந்து கொண்டு வருகிறார்கள். ஆம், அமெரிக்க மக்களின் போக்கைப் பார்க்கும்போது நாம் இப்படித்தான் எண்ண வேண்டியிருக்கிறது.

குடும்ப வைத்தியர் என்று ஒருவர் இருப்பார். அவர் மருந்து கொடுப்பார். 'அது நல்ல மருந்தா, இல்லையா' என்றுகூட யோசியாமல் 'வந்தது வரட்டும்' என்று சாப்பிடுவார்கள். அதுபோல ஒவ்வொரு நாட்டிலும் மக்கள், தங்களை ஆள்பவர்கள் சொல்வதை ஊமைகளாக ஒப்புக் கொண்டு வருகிறார்கள். அமெரிக்க ஜனாதிபதி 'அணுகுண்டு சோதனை கம்யூனிஸம் பரவாமல் தடுப்பதற்கு அவசியம்!' என்று சொன்னால் ''ஆமாம், ததாஸ்து!'' என்று அமெரிக்க மக்கள் பாட்டுப் பாடி ஒப்புக்கொண்டு வருகிறார்கள். அவர்கள் உள்ளத்துக்குள் அணுகுண்டு சோதனைகளால் ஏற்படும் தீங்குகளை உணர்ந்தாலும் வெளியில் சொல்லாமல் கஷ்டப்பட்டுக்கொண்டு அடங்கியிருக்கிறார்கள்.

ஒரு பக்கம் மான்செஸ்டர் பிஷப் ஜலஜ குண்டு வெடிப்பது பாவம், மக்களுக்கு இழைக்கும் கொடிய துரோகம் என்று கண்ணீர் விட்டுக் கதறியிருக்கிறார். மற்றொரு பக்கம் பிரதமர் மாக்மில்லன் ''ஆகா! என்ன நல்ல வெடிகுண்டு! இனி மிகப் பெரிய ராணுவம் வேண்டியதில்லை. வாலிபர்களைப் போருக்கு அனுப்ப வேண்டியதில்லை. இந்த குண்டுகளைக் கொண்டு எந்த யுத்தத்தையும் சமாளித்துக் கொள்ளலாம்!'' என்று அதிகார வெறியில் பிதற்றுகிறார்.

இந்த நிலைமையில் என்ன செய்வதென்று தெரியாமல் உலகம் ஏங்கி நிற்கிறது!

# காங்கிரஸ் சீர்திருத்தம்

காந்தி மகான் வளர்த்த காங்கிரஸ் இன்று மிகவும் சீர்கெட்டுப் போய்விட்டது என்று காங்கிரஸ் பெரியோர்கள் எல்லாம் புது தில்லியில் கூடி யோசனை செய்தார்கள் அல்லவா? அந்தக் கூட்டத்தில் ஸ்ரீமான் காட்கில் ஒரு போடு போட்டார். ''பையனுடைய கையெழுத்து நன்றாக இல்லை என்றால் புது பௌவுண்டன் பேனா வாங்கித் தருகிறேன் என்று கூறினாராம் தகப்பனார். அதனால் பையனுடைய கையெழுத்துத் திருந்தி விடுமா?'' என்று கேட்டார்.

அதாவது யாரால் காங்கிரஸ் சீர்குலைந்து போய் வருகிறதோ அதே காங்கிரஸ்காரர்களையே வைத்துக்கொண்டு அவர்களிடம் காங்கிரஸ் சீர்திருத்தக் கொள்கைகளைப் புகுத்துவதில் என்ன பிரயோஜனம் என்பதை மிகத் தெளிவாக எடுத்துக் காட்டினார்.

காங்கிரஸைச் சீர்திருத்த, குறைகளை நீக்க காங்கிரஸ் தலைவர் தேபர் அவர்கள் ஏதோ ஒரு யோசனை கூறினார். ஆனால் 'காங்கிரஸ் ஜமீன்தார்கள்' அதை ஒப்புக் கொள்ளவில்லை.

நாமும்தான் பார்த்திருக்கிறோம். எந்த ஜமீன்தார் மனமார சீர்திருத்தத்தை ஒப்புக் கொண்டு வரவேற்றிருக்கிறார்? அதுபோலவே காங்கிரஸ் ஜமீன்தார்களும் சீர்திருத்தத்துக்கான யோசனைகளை ஏற்க மறுத்து விட்டதில் வியப்பில்லை. எனினும் காங்கிரஸ் தலைவர்கள் ஒரு கமிட்டி ஏற்பாடு செய்திருக்கிறார்கள். பலநாள் கழித்து காங்கிரஸ் சீர்திருத்தத்துக்கான பல யோசனைகளை வெளியிடுவார்கள். அதைப் பற்றிக் கவலை வேண்டியதில்லை.

'காங்கிரஸ் சீர்திருத்தப் படவேண்டும். காங்கிரஸில் புது வேகம் ஊட்டவேண்டும்!' என்றெல்லாம் கூறப்படுவதற்குக் காரணம் என்ன தெரியுமா? சென்ற தேர்தலில் காங்கிரஸ் சில இடங்களில் தோல்வி யடைந்திருக்கிறது. இதை வைத்துத்தான் மேற்கண்டவாறெல்லாம் யோசனைகள் செய்து வருகிறார்கள். ஆனால் நாம் வேறொரு யோசனை கூற விரும்புகிறோம், அதாவது தேர்தலில் காங்கிரஸ் வெற்றி பெற்ற இடங்களிலும் சென்று விசாரித்தால் காங்கிரஸிலுள்ள குற்றங்குறைகள் வெளியாகும். காங்கிரஸ் அபேட்சகர்கள் வெற்றி பெற்ற ஊர்களுக்கும் சென்று பட்சபாத மற்ற முறையில் விசாரணை நடத்த வேண்டும். அப்படி நடத்தினால் எந்த முறையில் காங்கிரசுக்கு வெற்றி கிடைத்தது என்பது புலனாகும். தேர்தலுக்கு எவ்வளவு பணம் செலவழிந்தது? யார் யார் செலவழித்தார்கள்? எந்த வகையில் செலவழிந்தது என்பதைப் பற்றியெல்லாம் காங்கிரஸ் தலைவர்கள் சிறிதும் கூச்சமின்றி விசாரிக்க வேண்டும்!

# பிரதமர் படும் பாடு!

டி. டி. கே. பட்ஜெட்டுக்குச் சப்பைக்கட்டுக் கட்டிப் பேச வேண்டிய சங்கடமான நிலைமை இப்போது பிரதம மந்திரி நேருஜிக்கு ஏற்பட்டிருக்கிறது.

நிதிமந்திரி டி. டி. கே. தம்முடைய பட்ஜெட்டின் அருமை பெருமைகளை ''மக்களுக்கு'' முன்னால் அற்புதமாக எடுத்துச் சொல்லுகிறார்.

# தமிழ்மறை முனிவர் திருநாள்

ஒரு நாட்டின் சிறந்த பண்பாட்டையும் உயர்வையும் தெரிந்து கொள்ள வேண்டுமாயின், அந்த நாடு அதன் தலைசிறந்த கவிஞர்களையும் கலைஞர்களையும் மறவாமல் போற்றி வணங்குகிறதா என்பதை முதலில் அறிந்துகொள்ள வேண்டும் என்று ஒரு பேரறிஞர் கூறியுள்ளார். இந்த அளவு கோலைக் கொண்டு பார்த்தால் தமிழ் நாட்டின் பண்பாட்டிலும் உயர்விலும் யாருக்கும் எவ்வித ஐயமும் இருக்க இடமில்லை. ஆம், தமிழ் நாட்டிலும், தமிழ் கூறும் நல்லுலகம் எங்கும் வள்ளுவர் விழாவும் கம்பர் விழாவும் நடைபெறுவதில் தமிழ் மக்கள் காட்டும் பக்தியிலிருந்தும் உற்சாகத்திலிருந்தும் மேற்படி உண்மையை அறிந்து கொள்ளலாம்.

ஆதி கவியும் அருள் கவியுமான வள்ளுவரின் திருநாளைக் கொண்டாடுவது பற்றி இருந்த கருத்து வேற்றுமை இப்போது தீர்ந்து விட்டது. அத் திருநாளைத் தமிழ் மக்கள் யாவரும் ஒரே தினத்தில் கொண்டாட வேண்டும் என்ற அருமையான யோசனையை எல்லோரும் அங்கீகரித்து விட்டார்கள் எனலாம். ஏனெனில் அத்திருநாளை இப்போது பெரும்பாலான இடங்களில் வைகாசி அனுடத்திலே கொண்டாடத் தொடங்கியிருக்கிறார்கள்.

இந்த நற்பண்புக்கு வழிகாட்டிய பெருமை ஈழ நாட்டுத் தமிழன்பர்களைச் சார்ந்ததாகும். அவர்கள்தான் தமிழறிஞர்களின் கருத்தைச் சேகரித்து, திருவள்ளுவர் திருவிழா வைகாசி அனுடத்தில்தான் நடைபெற வேண்டும் என்ற முடிவுக்கு வந்தார்கள். அந்த முடிவைக் காலஞ் சென்ற மறைமலை அடிகள் போன்ற தமிழ்ப் பேரறிஞர்களும் அங்கீகரித்தார்கள். அதன் பயனாக வைகாசி அனுடத்தையே தமிழர்கள் வாழும் இடங்களில் எல்லாம் வள்ளுவ முனிவரின் விழாவாகக் கொண்டாட வேண்டும் என்ற எண்ணம் வேரூன்றி விட்டது.

* * *

இந்த ஆண்டிலே தமிழ் மறை முனிவரின் திருவிழாவைத் தமிழ் மக்கள் தனிச் சிறப்புடன் கொண்டாடத் திட்டமிட்டிருக்கிறார்கள். இந்தத் திருப்பணியிலும் இலங்கைத் தமிழர்களுக்குத்தான் முதல் ஸ்தானம் கொடுக்க வேண்டும்.

ஆண்டுதோறும் திருவள்ளுவர் திருவிழாவின்போது கொழும்பு தமிழ் மறைக் கழகம் நடத்தும் திருக்குறள் மகாநாடு, இந்த ஆண்டிலும் நாலு நாட்கள் அமோகமாக நடைபெறுகிறது. ஜூன் மாதம் 8-ந் தேதியிலிருந்து 11-ந் தேதி வரையில் கொழும்பு நகரில் உள்ள விவேகானந்தர் சபை மண்டபத்தில் நடைபெறும் அந்த மகாநாட்டில் கலந்து கொள்வதற்காகத் தமிழ் நாட்டிலிருந்தும் பல அறிஞர்கள் சென்றிருக்கிறார்கள். ஊர்வலம், இசைவிருந்து, நாடகம், ஈழத் தமிழ் அறிஞர்கள், தமிழ் நாட்டுப் பேரறிஞர்களின் சொற்பொழிவுகள் முதலியவை கண்களுக்கும் கருத்துக்கும் விருந்தாக அமையும் வகையில் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளன.

அம் மகாநாட்டில் திருக்குறள் நூற்காட்சியும், தமிழ் மறைத் தேர்வு, தமிழ் மறைக் கட்டுரைப் போட்டிப் பரிசளிப்பு விழாவும் நடைபெற ஏற்பாடாகியிருக்கிறது.

* * *

மேல் நாடுகளில் ஈடு இணையற்று விளங்கும் சாஸர், ஷேக்ஸ்பியர் போன்ற கவிகளின் சிருஷ்டிகளால் கூடக் கால வெள்ளத்தை எதிர்த்து நிற்க முடியவில்லை. அவை பழைமையாகி வருகின்றன. அவற்றிலுள்ள சொற்களும், நடையும், இலக்கணமும் இன்று பொருத்த மற்றவையாகி விட்டன.

ஆனால், இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் சிருஷ்டிக்கப்பட்ட திருவள்ளுவரின் தமிழ் மறை புது மெருகிட்டதுபோல் இன்றும் பொலிவுடன் விளங்கி வருகிறது. அந்தக் காலத்துக்குப் பொருத்தமாக இருந்த அவரது வாக்கு, இன்றைய வாழ்க்கைக்கு முற்றிலும் பொருத்தமாக இருக்கிறது. இனி எக்காலத்துக்கும் எந்த நாட்டுக்கும் எந்த மக்களுக்கும் பொருத்தமாக இருக்கும் சிரஞ்சீவித் தன்மை பெற்றிருக்கிறது.

விஞ்ஞான வளர்ச்சி காரணமாக வாழ்க்கை முறைகள் மாறி வருகின்றன. பழக்க வழக்கங்களும் நாகரிகமும் மாறி வருகின்றன. எங்கு பார்த்தாலும் 'பழையன கழிதலும் புதியன புகுதலும்' என்ற நியதி நிலை பெற்று வருகிறது. கால வெள்ளத்தினால் ஏற்பட்டுள்ள மாறுதல்கள் கணக்கில் அடங்கா. ஆனால், இடம், காலம் எதற்கும் வள்ளுவரின் அருள் வாக்கை எதிர்த்து நிற்கும் சக்தி இல்லை. அந்த மகானின் வாக்கு இலக்கிய வானில் அமர தீபமாகக் காட்சியளித்து வருகிறது. வாழ்க்கையின் எந்தத் துறையிலும் அந்தகாரத்தை அகற்றும் அருள் ஒளியாகத் திகழ்ந்து வருகிறது.

வள்ளுவமா முனிவரை உலக மகா கவி என்று கூறுவதற்கு இந்த அம்சம் ஒன்றே போதுமானது. திருக்குறளில் பொதிந்துள்ள கருத்துக்கள் உலக மக்களின், மானிட வர்க்கத்தின் உயர்வுக்கு வழிகாட்டுவதாக அமைந்திருக்கின்றன. அதனால்தான் பல நாடுகளிலும் வள்ளுவரின் பொன் மொழிகள் அந்தந்த நாட்டு பாஷைகளில் ஆர்வத்துடன் மொழி பெயர்க்கப்பட்டு வருகின்றன.

**பெற்ருற் பெறிற் பெறுவர் பெண்டிர் பெருஞ் சிறப்புப் புத்தேளிர் வாழு முலகு**

கற்புள்ள பெண்மணியை மனைவியாக அடைந்த கணவன் இந்த உலகத்திலேயே தேவலோக இன்பத்தை அடைகிறான் என்பது வள்ளுவர் வாக்கு. அந்த மகோன்னதமான கருத்தை இவ்வாறு அட்டைப் படத்தில் வண்ண ஓவியமாக வடித்துக் கொடுத்துள்ளார் நமது சைத்திரிகர். கற்பரசியின் கணவனுடைய முகத்தில் மகிழ்ச்சியும் இன்ப உணர்ச்சியும் ததும்புவதைப் பாருங்கள்!

தமிழ்மறை வாழ்க! வள்ளுவர் நாமம் வாழ்க!

ஒரு இன்ஷ்யூரன்ஸ் ஏஜெண்டின் டயரியிலிருந்து

# அவள் அட்டிகையை அடகு வைத்தாள்...

தேசாய் குடும்பத்தினர் பணக்கஷ்டத்தினால் மிகவும் சிரமப்பட்டனர். மனோஹரின் வியாபாரம் மந்தமாகி, அவர்களுடைய சேமிப்புகள் கரைந்து விட்டன அவர்களுடைய பையனின் வைத்தியக் கல்லூரி படிப்பைத் தொடர்ந்து நடத்துவதற்குப் போதிய பணம் இல்லை. இப்பொழுது அவர்களிடம் மிஞ்சியது ரூ. 19,000/- லைப் இன்ஷ்யூரன்ஸ் மட்டுமே. ஆனால் அடுத்த பிரீமியம் கட்டுவதற்குள்ள பணம் அவனிடம் இல்லை. *

தேசாய் குடும்பத்தினரின் நண்பனும், இன்ஷ்யூரன்ஸ் ஏஜெண்டுமான நான் அவர்களைக் கண்டு பேசிவர தீர்மானித்தேன். ''மனோஹர், சீக்கிரமே உங்கள் பிரீமியம் கட்டப்படவில்லையென்றால், உங்கள் பாலிஸி காலாவதியாகி விடும். அதாவது உங்களுக்கு யாதொரு இன்ஷ்யூரன்ஸ் பாதுகாப்பும் கிடையாது. ஆகவே பிரீமியம் கட்ட வழியொன்றுமில்லையா?'' பாவம்! மனோஹர் இதற்கு என்ன சொல்லுவான்! பிறகு, ஸ்ரீமதி தேசாய் சொன்னாள்: ''என்னிடம் ஒரு தங்க அட்டிகையுள்ளது...''



அவளுடைய அட்டிகையை அடகு வைத்து, அதற்கு ஈடாகக் கிடைத்த பணத்தைக் கொண்டு பிரீமியம் கட்டினோம். ஆனால் விதி யாரை விட்டது! எட்டு மாதங்களிற்குப் பிறகு மனோஹர் ஓடிக்கொண்டிருக்கும் ஒரு மோட்டார் டிரக்கினால் மோதப்பட்டு விழுந்தான். மீண்டும் அவனுக்கு பிரஞ்ஞை வரவில்லை.

இளைஞன் அருண் தேசாய் இன்று ஒரு பட்டம் பெற்ற டாக்டர். கடைசி நிமிஷத்தில், மீட்கப்பட்ட மனோஹரின் இன்ஷ்யூரன்ஸ் பாலிஸி, அருணுக்கும் அவன் தாய்க்கும் வயற்றில் பாலைவார்த்தது. சுயநலமற்ற ஒரு தாயும் மற்றும் பெண்மணியின் நீடித்த கால பரிச்சியத்தைப்பெற்றுள்ளதில் எனக்கு மிகுந்த திருப்தி.

* சில காரணங்களினால், பாலிஸியின் மீது அவனால் கடன் வாங்க முடியவில்லை

★ இந்த சம்பவத்தில் சம்பந்த பட்டவர்களின் பெயர்கள் யாவும் கற்பனைப் பெயர்களே. ஆனால் இந்த சம்பவம் உண்மையில் நடந்தது.

**லைப் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பொரேஷன் ஆப் இந்தியா**

ASP/LIC-15

# வம்புச் சாவடி

வெங்கு

நமது நிதிமந்திரி டி. டி. கே. அவர்கள் வரிவிதிப்பு முறையில் சில சலுகைகள் காட்டி, பிரமாதமான நல்ல பெயர் தட்டிக் கொண்டு போக முயன்றிருக்கிறார். காப்பி, தேயிலை மீது அவர் விதித்திருந்த வரிகளை வாபஸ் பெற்று விட்டார். காப்பிப் பிரியர்களான தென்னிந்தியர்கள் பெரும் திருப்தியடைந்து விட்டாற்போல் காணப்படுகின்றனர். ஆனால் இந்தச் சலுகைகளினால் மொத்தத்தில் சர்க்கார் வருமானத்தில் ஐந்து கோடிதான் குறையும் என்பதை நினைத்துப் பார்க்கும் போது பாக்கி 100 கோடி ரூபாய் வரியும் நாம்தானே சுமந்து ஆகவேண்டும் என்ற கவலை மக்கள் மனத்தில் இல்லாமல் இல்லை!

திரு டி. டி. கே. அவர்கள் கார்டுமீது விதித்திருந்த வரியை ரத்து செய்து விட்டு கவர்மீது உயர்த்தி விட்டார். அதாவது இதுவரை 13 நயா பைசா என்றிருந்த கவரின் விலையை 15 நயா பைசாவாக உயர்த்திவிட்டார்!

பதினைந்து நயா பைசாவாக உயர்த்தினாலும் கணிசமான ஒரு சலுகை வேறு அளித்திருக்கிறார். அதாவது இதுவரை ஒரு தோலா எடைதான் அனுமதிக்கப்பட்டிருந்தது. இனி ஒன்றரை தோலா எடைவரை அனுப்பலாம் என்று கூறியிருக்கிறார். இந்தச் சலுகையினால் பயன் அடைபவர்கள் வியாபாரத் துறையிலும் தொழில் துறையிலும் இருப்பவர்கள் தான். அவர்கள் வியாபார சம்பந்தமாக எழுதும் கடிதங்களுடன் தங்கள் விளம்பரக் காகிதங்களையும் வைத்து அனுப்பலாம்!

★

அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்தில் நமது பிரதமர் நேரு அவர்கள் தமது சொந்த வருமானத்தைப் பற்றியும் செலவுகளைப் பற்றியும், குடும்பக் கஷ்ட சௌகரியங்களைப் பற்றியும் மிகத் தெளிவாகவும் சற்றும் கூச்சமின்றியும் எடுத்துக் கூறினார். நமது நாட்டிலுள்ள மத்தியதர குடும்பத்தினர் அனைவரும் ஏறக்குறைய இதே நிலையில் தான் வாழ்ந்து வருகின்றனர். நேருஜி பெரிய பங்களாவில் வசிக்கிறார் என்றால், இவர்கள் சிறிய வீடுகளில் வசிக்கின்றனர். மாதம் ரூ.1,600க்குப் பதில் ரூ.160 பெற்று, குடும்பம் நடத்துகின்றனர். இதை ஆளும் கட்சியினர் மனத்தில் கொண்டால் மத்தியதர வகுப்பாரின் கஷ்டம் நன்கு புலனாகும். ஒரு கணம் மத்தியதர வகுப்பினரின் நிலைமையைக் கற்பனை செய்து பார்த்தால், வரிகளைப் பற்றியும் ஐந்தாண்டு திட்டங்களைப் பற்றியும் இவ்வளவு தீவிரமாகப் பேசத் தோன்றாது. ஆனால் 'நாம் முன்னேற வேண்டாமா? நாடு முன்னேற வேண்டாமா?' என்று கேட்கலாம். உண்மை; முன்னேறத்தான் வேண்டும். ஆனால் அதுவரையில் மக்கள் பிழைத்திருக்கவும் வேண்டும் அல்லவா? இது அல்லவா திட்டத்தைவிட மிகவும் அவசியம்!

★

கேரள மந்திரிகள் மற்றுமொரு முறை நல்ல பெயர் தட்டிக்கொண்டு விட்டார்கள்!

ஜனாதிபதி ஆட்சி நடைபெற்று வந்தபோது கேரள சர்க்கார் ஒரு தொழிற்கூடத்தை விலை பேசி வாங்க முடிவு செய்திருந்தார்கள். அதற்கான தஸ்தாவேஜுகளும் தயாராகிப் பணம் கொடுக்க வேண்டியதுதான் பாக்கியாக இருந்தது. இந்த நிலையில் கம்யூனிஸ்டு சர்க்கார் பதவிக்கு வந்தார்கள். அவர்கள் அந்தத் தொழிற்கூடத்தை மீண்டும் மதிப்புப் போட ஏற்பாடு செய்தார்கள். இரண்டாவது முறை மதிப்புப் போட்டபோது, முதல் தடவை போட்ட மதிப்பில் பெரும்பகுதியைக் குறைக்க வேண்டியிருந்தது.

புதிய மதிப்பீட்டின்படி பணம் கொடுப்பதா, அல்லது பழைய மதிப்பீட்டின்படி பணம் கொடுப்பதா என்ற பிரச்னை எழுந்தது. பழைய சர்க்கார் செய்த முடிவை மாற்றுவதா வேண்டாமா என்ற பிரச்னை. இத்தகைய பிரச்னையில், இன்றைய சர்க்கார் பழைய சர்க்கார் செய்த முடிவை அப்படியே நிறைவேற்றுவது என்று தீர்மானித்திருக்கிறார்கள். அதைக் கேட்டபோது 'கம்யூனிஸ்டுகளா இப்படிச் செய்தார்கள்?' என்று நீங்கள் வியக்கலாம். கம்யூனிஸ்ட்டுகள்தான் அப்படிச் செய்தார்கள். பழைய சர்க்கார் செய்துள்ள முடிவுகளைக் காப்பாற்றுவது தனி நபர்களின் பண விஷயத்தில் மிக அவசியம். அப்பொழுதுதான் ஜனநாயகம் செழித்தோங்கும். எந்தக் கட்சி ஆட்சிபீடத்துக்கு வந்தாலும் முந்தைய சர்க்கார் மக்களுடன் செய்து கொண்டுள்ள உடன்படிக்கைகளைக் காப்பாற்றும் என்ற நம்பிக்கை மக்களுக்கு இருக்கவேண்டும். அந்த நம்பிக்கையைக் கம்யூனிஸ்டுகள் பெற்றுவிட்டார்கள். அவர்கள் ஜனநாயக ரீதியில் வேலை செய்ய முடிவு செய்திருக்கிறார்கள் என்பதற்கு இந்த நிகழ்ச்சியும் சாட்சியம் கூறுகிறது.

மே மாதச் சிறுகதைப் போட்டியில் நூறு ரூபாய் பரிசு பெற்ற

'நொண்டிக் குழந்தை'

என்னும் கதை ஜூன் 23-ந் தேதி கல்கி இதழில் பிரசுரமாகிறது

பரிசு பெற்றவர்: ஐ. சாமிநாதன்

'காந்தமலை', நார்ட்டன் முதல் சந்து, சென்னை - 28

# நன்றியறிவிப்பு

ஸ்ரீ பாபு ஐயர் என்ற ஸ்ரீ N. M. R. வெங்கடகிருஷ்ண ஐயர் அவர்கள் சென்ற 27-5-1957 அன்று காலமானதைக் குறித்து அனுதாபச் செய்திகள் அனுப்பியும், நேரில் வந்து அனுதாபம் தெரிவித்த அன்பர்கள், நண்பர்கள், உறவினர்கள் முதலிய அனைவர்களுக்கும் எங்கள் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.



N. M. R. சுப்பராமன்
N. M. R. கிருஷ்ணமூர்த்தி
N. M. R. V. மஹாதேவன்
N. M. R. V. சிவப்பிரசாத்

மதுரை
31-5-57

இலக்கியச் செல்வம் 30



# காதற் பாட்டு

பேராசிரியர்: அ. சீநிவாசராகவன்

பழங்காலத்து நாடக மேடையில் 'ராஜ பார்ட்' பாடுகின்ற பாட்டு ஒன்று உண்டு. அவன் எந்த தேசத்து ராஜாவானால் என்ன, எந்த நாடகத்துக்குத் தலைவன் — ஆனால் என்ன, 'ராஜ பார்ட்' என்றால் எல்லா நாடகங்களிலும் ஒரே மாதிரியான நடை, உடை, பாவனை, ஒரே மாதிரியான ஒட்டு மீசை, வெட்டுப் பேச்சு, ஒரே மாதிரியான பாட்டு (ஆமாம், பாடாத ராஜா அந்தக் காலத்தில் கிடையாது.)—இப்படியாக இருந்த காலம் அது. காதல் சீன் வரும் - அதாவது, காட்டிலே வேட்டையாடிக் களைத்து, தேட்டமாகத் தண்ணீர் தேடி, பாட்டையிலே ராஜ பார்ட் வரும்போது, அந்தம்மிகு பாங்கியரோடு பந்தடிக்கும் சுந்தரி ஒருத்தி எதிர்ப்படுவாள் - அப்போது தொடங்கும் காதல் சீன் என்ற காதற் காட்சி. காதலின் தாக்குதலைச் சமாளிப்பதற்கு, 'ராஜ பார்ட்' கையாளும் கருவிகளில் ஒன்று, 'சிங்காரி, ஒய்யாரி' என்ற பாட்டு. இது, 'மானே, மயங்காதே தேனே', 'மனமோகன மாமயிலே மாமரக்குயிலே' முதலிய பல வடிவங்களிலே தோன்றுவதும் உண்டு. எந்த வடிவத்திலே தோன்றிய போதிலும் விஷயம் ஒன்றுதான்; அதாவது, ராஜபார்ட் ஐயா, சிங்காரி ஒய்யாரியிடம் தமது மனத்தைப் பறிகொடுத்து விட்டார் என்பதுதான். இந்த விஷயத்தை ஒட்டி, இதை அந்த மாமரக் குயிலுக்குத் தெரிவிக்கின்ற முறையில் பல செய்திகள் அடுக்கு அடுக்காக வரும். அவள் சிங்காரி, ஒய்யாரி; அவள் நெற்றி பாதிமதி; அவள் கூந்தல் மழைமேகம், புருவம் வில், உதடு கொவ்வைப் பழம், இடை உடுக்கு, முகம் தாமரை, விழி அம்பு, கயல், நீலோற்பலம், கை மூங்கில், ஆம், மூங்கில்தான்- இப்படிப் பல செய்திகளைச் சரமாரியாக அந்த ராஜபார்ட் வீசும்போது, அந்த அப்பாவி ஸ்திரீபார்ட் என்ன செய்யும்? ஓடவோ முடியாது. நாடகம் நடக்க வேண்டுமே! ஆகவே, அந்த ஒய்யாரி, ராஜ பார்ட்டைத் தனது 'பிராண நாத'ராக ஏற்றுக் கொள்ள இசைந்து, அந்த இசைவை ஒரு பாட்டாக இசைத்து விடுவாள். பிறகு சில பாடல்கள், மாறி மாறி, அதன் பின்னர், பாடல்கள் நிற்கும், காதல் சீனும் காதலைக் காட்டாமலேயே முடிவுபெறும்.

அர்த்தமில்லாத இந்தப் பாதாதிகேச வருணனைப் பாடல்களின் அபத்தத்திற்கும் காதலுக்கும் சம்பந்தமில்லை. இவற்றை எந்தக் காதலனாவது, நிஜ வாழ்க்கையில் பாடத் தொடங்கினால், எந்தப் பெண்ணும் ஓடி விடுவாள். அது நிச்சயம். அல்லது தன் காதலனுக்குப் பைத்தியம் பிடித்து விட்டது என்று ஒப்பாரி வைக்கத் தொடங்கி விடுவாள். காரணம் என்ன? இத்தகைய பாடல்களிலே உவமைகளும் அணிகளும் இருக்கின்றன, உண்மை இல்லை, அதுதான் காரணம். அதனால்தான், அவற்றைக் கேட்கும்போது, கனிவு உண்டாவதில்லை, அதற்குப் பதிலாகச் சிரிப்பே வருகிறது.

காதலன் உள்ளத்தின் வழியாகப் பார்த்தால், எந்தப் பெண்ணும் எப்படிப் பெண்ணியல் தீபமாக, தெய்வப் பிறவியாகத் தோன்றுகிறாள் என்பதைக் கவிஞர்கள் காட்டுவது உண்டு. அப்போது, உண்மையும் கனிவும் அவர்கள் சொற்களில் வடிவானால், காதல் என்ற நிலையின் பல்வேறு விசித்திர கதிகளை நாமும் உணர முடியும். பாருங்களேன்:

கட்டும் விழிச் சுடர்தான் — கண்ணம்மா
சூரிய சந்திரரோ ?
வட்டக் கரிய விழி — கண்ணம்மா
வானக் கருமை கொல்லோ ?
பட்டுக் கருநீலப் — புடவை
பதித்த நல் வயிரம்
நட்ட நடு நிசியில் — தெரியும்
நட்சத்திரங்களடி

என்று பாரதியார் பாடும்போது, 'இந்த அற்புதந்தான் நடைபெறுகிறது. இந்தப் பாட்டும், 'சிங்காரி ஒய்யாரி' என்ற பழங்கால நாடக மேடைப் பாட்டும், பெண்ணின் இலட்சிய அழகு என்பதைத் தான் சொல்ல வருகின்றன. ஆனால், ஒன்றிலே உண்மையும் காதல் உள்ளத் துடிப்பின் சாயலும் இருக்கின்றன, அது கவிதையாகிறது. மற்றொன்றிலே, பகட்டும், சொல்லடுக்கும், அர்த்தமற்ற ஆரவாரமும் விஞ்சி, காதல் என்ற உன்னத உணர்ச்சியைக் கேலிக் கூத்தாகச் செய்து விடுகின்றன.

காதலின் பரவசத்தில், இப்படி ஒரு பெண்ணின் அழகை, இலட்சிய அழகாக, எல்லையற்றதாக, பேசுகின்ற கவிதை எந்த மொழியிலும் உண்டு. 'ஆனால் இது அவசியமா' என்று கேட்கிறான் ஆங்கில மகா கவிஞன் ஷேக்ஸ்பியர். 'அவள் அவளாக இருப்பதால் அல்லவா நான் அவளைக் காதலிக்கிறேன்'. எதற்காக அவள் விழி சூரிய சந்திரராக இருக்க வேண்டும் ? அப்படி இருக்கின்றனவா ? அதுவும் இல்லையே ! எந்தப் பெண்ணின் விழி—என்னுடைய காதலியின் அழகு விழி கூடத்தான்—சூரியனைப் போல அவ்வளவு பிரகாசமாய் இருக்கும்? இராது. இல்லாவிட்டால் என்ன ? அவளுடைய விழி என்பது போதாதா?' என்று கேட்கிறான் இந்தக் கவிஞன். அவன் சொல்வதைக் கேட்போம் :

என் காதலியின் ஒளி விழி,
உண்மையைச் சொல்லப் போனால்,
சூரியனைப் போல் சுடர் விட வில்லை.
அவள் இதழ்கள் சிவந்தவை தாம்.
ஆனால் பவளம் அவற்றை விடச் சிவந்தது.
வெண்மை, வெண்மை,
பனிதான் வெண்மை என்கிறீர்களோ,
அப்படியானால், இருங்கள்,
அவள் மேனி சாம்பல் வண்ணம்,
பனியின் அருகிலே கூட வரமுடியாது.
கூந்தலா ? கூந்தலைக் கம்பி என்று சொல்ல
வேண்டும் !
அவள் கூந்தல் கம்பிதான், இரும்புக் கம்பி.
ரோஜா மலர்களைக் கண்டிருக்கிறேன்,
சிவந்த மலர்கள், வெண் மலர்கள்,
ஆனால், அவள் கன்னத்திலே அவற்றைக்
கண்டதில்லை.
அவள் மூச்சு, மனிதப் பெண் ஒருத்தியின் மூச்சு.
அதனினும் மணமுள்ள ஆயிரம் வாசனைப்
பொருள்களைக்
கண்டிருக்கிறேன், கண்டு களித்திருக்கிறேன்,
அவள் குரலைக் கேட்பதில் எனக்கு இன்பம்
உண்டு,
ஆனாலும், உண்மையில்,
அதை விட இனிமையானது இசை, என்ன
செய்வது ?
தெய்வ மகள் ஒருத்தியை நான் இங்கே
கண்டதில்லை,
என் காதலி தரையிலேதான் நடக்கிறாள்,
ஆனாலும் என்ன, அவள், அவள்,
பொய்யான உவமைகள் புகல்வதை விட,
எனக்கு அருமையானவள், ஒப்பற்றவள்; ஏன்?
அவள் என் காதலி.

இங்கே, காதலின் குரல் மிக மிக அடக்கமாகப் பேசுகிறது ; உவமைகளைப் பொய் என்று ஒதுக்குகிறது ; உவமைப் பொருள்களின் தனித்தனிப் பண்புகளை விட, அவற்றோடு ஒப்பிடப்படும் காதலியின் பண்புகள் அளவிலும், தரத்திலும் குறைந்தவை என்பதைக் கூசாமல் ஏற்றுக் கொள்கிறது. 'இதனால் அவள் எப்படிக் குறைந்தவள் ஆவாள் ? அவள் அவளாக இருக்கிறாள். அது போதுமே எனக்கு ? போதுமென்று சொல்கிறேன்? தவறு : அப்படி அவள் இருப்பதால் தான் என் காதலி, அதை மாற்ற முடியுமா ?' என்று பெருமைப்படுகிறது.

பாரதியார் பாடலும், ஷேக்ஸ்பியரின் பாடலும் வெவ்வேறு முறையிலே வெற்றி பெறுகின்றன. காதலின் பரவசத்தைக் காட்டுவது கவிஞரின் நோக்கம். இதை எம்முறையில் காட்டினால் என்ன, காட்டுகிறார்களா என்பதுதானே கேள்வி.

தேவியின் கடிதம்

# இளைஞர்கள் கடமை

வசுமதி ராமசாமி

அன்புக்குரிய சுஜாதா,

ஒரு அம்மாள் கடிதம் எழுதியிருக்கிறார். தம் பிள்ளை கல்யாணம் செய்து கொள்ள மறுப்பதாகவும், எவ்வளவோ பேர்கள் பெண் கொடுக்கப் போட்டி போடுகிறார்களென்றும் அதில் தெரிவித்திருக்கிறார். இந்தப் பிள்ளைகள் கல்யாணத்தைப் பற்றி உங்கள் அபிப்பிராயம் என்னவென்று கேட்டு எழுதி இருக்கிறார்.

தற்காலத்து இளைஞர்களைப் பற்றி எனக்கு நல்ல அபிப்பிராயம் தான். மிகச் சிலரைத் தவிர எல்லா இளைஞரும் பொறுப்புள்ளவர்களாகத்தான் இருக்கிறார்கள். வாழ்க்கைத் தரம் உயர வேணுமென்ற மேலான கொள்கை உள்ளவர்களாகத்தான் இருக்கிறார்கள்.

கல்யாணம் செய்து கொள்ள ஒரு சில இளைஞர்கள் மறுப்பதற்கு நான் சிந்தித்துப் பார்த்ததிலும், அநுபவத்திலும் சில காரணங்கள் முக்கியமாக இருக்கின்றன.

நிறையச் சம்பாதித்துச் சேர்த்துக் கொண்ட பிறகுதான் கல்யாணம் செய்து கொள்ள வேண்டும் என்று அவர்கள் நினைக்கிறார்கள். அப்படி அவசியமில்லை. தன் கால்களால் நிற்க முடியுமென்ற நிலை ஏற்பட்டால் கல்யாணத்தைத் தள்ளிப்போடுவானேன்? வாழ்க்கைக்குத் தயார் செய்து கொள்வதிலேயே அநேக வருஷங்கள் ஆகி விட்டால் வாழ்க்கை ஆரம்பிப்பது அலுப்பாகி விடும். நாள் முழுதும் சமையல் செய்தால் சாப்பிடுவது எப்பொழுது? அதை இளைஞர்கள் உணரத்தான் வேண்டும்.

இரண்டாவது காரணம் செலவாளியான மனைவியைப் பற்றிய கிலி. தன் சுதந்திரம் பறி போய் விடுமோ என்ற பயம். 'ஒருதரம் மணம் செய்து கொள்ளப் பயப்படுகிறவன் கோழை' என்று ஆங்கிலப் பழமொழி ஒன்று உண்டல்லவா? மேல் நாடுகளில் மனைவியைப் பற்றிப் பயங்கரம் இருக்கிறது. நம் நாட்டுப் பெண்களின் நிலை அப்படி இல்லையே. அப்படி மாறவும் மாட்டார்களென்ற நம்பிக்கையும் நீண்ட கால அநுபவமும் இருக்கின்றன.

சில இளைஞர்கள் அழகான மனைவியைத் தேர்ந்தெடுப்பதில் கால தாமதம் செய்கிறார்கள். அதனால் கல்யாண காலத்தைத் தள்ளுவது மூன்றாவது காரணம்.

ஒருபேரறிஞர் மாணவர் கல்லூரி விழாவில் "நீங்களெல்லோரும் கூடிய வரையில் கறுப்புப்பெண்களையே மணந்து கொள்ளுங்கள்" என்றார். கட்டடம் அசையும்படியாக மாணவர்கள் சிரித்தார்கள். அதுவெறும் நகைச்சுவைக்கான வார்த்தைகள் மட்டுமல்ல, அர்த்தம் பொருந்திய ஆழ்ந்த அநுபவச் சொற்கள்.



இளைஞர்கள் வரதட்சணையை எதிர்த்துச் சங்கம் நடத்துகிறார்கள். எவ்வளவோ முன்னேற்றம் அடைந்து வருகிறார்கள். கறுப்புப் பெண்களையே மணப்பது என்பது சங்கத்தின் கொள்கையாக இருக்கலாமல்லவா? குடும்பத்துக்கு, ஸ்ரீ லக்ஷ்மியாக விளங்கும் பெண்ணின் நிறம் கறுப்பு, சிவப்பு என்று பாகுபாடு செய்வது அறிஞர்களான, இளைஞர்களுக்கு அழகாகுமா? நிற வேற்றுமை காட்டும் சாம்ராஜ்யங்களை எதிர்த்தோம். ஆனால் நமக்குள்ளேயே மனைவியைப் பொறுக்குவதில் நிற வேற்றுமை காட்டுவது கேவலம் அல்லவா?

வரதக்ஷிணையை எதிர்ப்பான் பிள்ளை. ஆனால் அதை லட்சியம் செய்யாமல் இருக்கும் பெற்றோர்கள் தங்கள் பிள்ளையின் படிப்புக்கு இவ்வளவு செலவு ஆகி விட்டதென்று கணக்குப் போடுகிறார்கள். அந்தத் தொகையை முழுவதுமோ, அல்லது ஒரு பாகமோ பெண்ணின் பெற்றோர்கள் கொடுக்க வேண்டுமென்று கணக்குப் போடுகிறார்கள். வாங்கிக் கொள்ளச் சங்கோசமாக இருந்தால் சொல்லியாவது காட்டுகிறார்கள். நம் சக்திக்கு ஏற்பக் குழந்தைகளுக்குச்செலவுசெய்வதில் பிறரிடம் பேரம் பேச வேண்டுமா? புத்திசாலியான படித்தபிள்ளை என்பதில் பெற்றோர்களுக்குள்ள பெருமிதத்துக்கு விலை பேச வேண்டுமா? இவைகளைப் பற்றிக் கசப்பான எண்ணம் படைத்த சில பிள்ளைகள் வெளியில் சொல்லத் தைரியமின்றிக் கல்யாணத்தையே தள்ளிப் போடுகிறார்கள். கடைசியாக, பிள்ளைகள் காலா காலத்தில் கல்யாணம் செய்து கொள்ளப் பெண்களுடைய ஒத்துழைப்பும் தேவை. ஒவ்வொரு பெண்ணும் தன்னை மணந்து கொள்பவனுக்குச் சந்தோஷத்தைக் கொடுப்பதுடன், அவனுக்கு வரும் கஷ்டங்களையும் பகிர்ந்து கொண்டு சுமையைக் குறைப்போம் என்ற முறையில் நடந்து கொள்ள வேண்டும்.

ஆனந்தம் மனத்தில் இருக்கிறது. இன்பம் ஒற்றுமையில் இருக்கிறது. அந்த அஸ்திவாரத்தில் கட்டும் கோட்டை இடிந்து விடாது. பிள்ளையின் பெற்றோர்கள், விஷயத்தை எடுத்துச்சொல்லிப் பிள்ளையின் மனத்தை மாற்ற வேண்டியது கடமை. சில சமயம் பிள்ளைகள் கல்யாணத்தை ஒத்திப் போடத் தகுந்த காரணம் இருந்து சொன்னால் அதையும் பெற்றோர்கள் உணர்ந்து கொள்ளவேண்டும். அந்தக் காலத்தில் இதை எல்லாம் பார்த்தா கல்யாணம்செய்தார்கள் என்று கேட்கக் கூடாது. பிள்ளையின் மன உணர்ச்சிகளை உணர்ந்து அவர்களின் போக்குப்படி விட்டுப் பிடிக்கவேண்டியது தான் முறை. இப்படிக்கு

பூமாதேவி

1936 "திருடன், திருடன்" என்று ஒரே கூக்குரல். ரகுராமன் உடனே தனது புதிய ஹெர்குலிஸ் ஸைக்கிளில் ஏறி திருடனைத் துரத்துகிறான். பாவம்! அந்த நம்பகமான ஹெர்குலிஸ் ஸைக்கிளின் முன் திருடனின் சாமர்த்தியம் எப்படி பலிக்கும்.

# ஹெர்குலிஸ் ஓர் ஸைக்கிள் மட்டும் அல்ல, வாழ்நாள் முழுதும் உழைக்கும் ஓர் நற்துணை



இந்தியாவில் தயாரிப்பவர்கள்

டி. ஐ. ஸைக்கிள்ஸ் ஆப் இந்தியா லிமிடெட், சென்னை.

TIC-51 A



**1957** மீண்டும், ரகுராமன் தன் அண்டையிலுள்ளவர்களால் போற்றப்படுகிறான்— இப்பொழுது டாக்டரை தக்க சமயத்தில் அழைத்துவந்து தன் பக்கத்து வீட்டுக் குழந்தையைக் காப்பாற்றியதால். தனது பழைய ஹெர்குலிஸ் ஸைக்கிளின் நீடித்த சேவையைப்பற்றி ரகுராமன் பெருமிதம் அடைகிறான்.

ஹெர்குலிஸ் ஸைக்கிள் வைத்திருப்பவரைக் கேளுங்கள். வாழ்நாள் முழுதும் உழைப்பதற்கென்று அமைக்கப்பட்ட உன்னத ஸைக்கிள் அது என்று கூறுவார். சுமார் 50 வருஷங்களாக உயர்தர ஸைக்கிள்களைத் தயாரித்துவரும் அனுபவ மிகுந்தவர்களால், இப்பொழுது இந்த நுட்ப வேலைப்பாடமைந்த ஹெர்குலிஸ் ஸைக்கிள் டி. ஐ. ஸைக்கிள்ஸாரின் நவீன தொழிற்சாலையில் தயாரிக்கப்படுகிறது. அதன் உயர்தர அமைப்பையும், அதிகப் பிரயாசையில்லாமல் ஓடும் தன்மையையும் கண்டு நீங்கள் ஆச்சரியமடைவீர்கள். ஸைக்கிள்களில் மிகச்சிறந்தது ஹெர்குலிஸ். ஆயினும் மிதமான விலையில் கிடைக்கிறது.

**உங்கள் ஸைக்கிள் ஒரு சிறந்த மூலதனம்—**

**ஹெர்குலிஸ்** உங்கள் பணத்திற்கு சிறந்த பெறுமானம்.

# வட்ட மேஜை

## நீண்ட பஸ் வேண்டாம்!

நீலமலையின் வண்டிப் பாதைகள் என்றாலே இவ்வூரைச் சுற்றிப் பார்க்காதவர்களும்கூட நடுங்குவர். இவ்வூரின் வண்டிப் பாதைகள் எண்ணற்ற வளைவுகளாக வளைந்து வளைந்து ஏறி, இறங்கி மனம் சஞ்சலிக்கும் படிதான் இருக்கின்றன. இந்த நீலமலைப் பாதைகளில் சிலமாதங்களாகப் பெரிய நீண்ட பஸ்கள் ஓடிக்கொண்டிருக்கின்றன. இந்த எண்ணற்ற வளைவுகளில் டிரைவர்கள் படும் அவஸ்தையைக் காணச் சகிக்க முடியவில்லை. பஸ்கள் ஒன்றோடொன்று மோத அதனால் அதில் பிரயாணம் செய்யும் ஜனங்களுக்கு எப்பொழுது அபாயம் விளையுமோ என்ற அச்சம் தான் மனத்தில் குடிகொண்டிருக்கின்றது.

ஆகவே அரசாங்கம் முன்போல் சிறிய பஸ்களை ஓடச் செய்ய வேண்டும்.

ஊட்டி
25—5—57 கா. மா. கார்ச்சு

## வரிச்சுமை

கல்கி 26-5-57 இதழின் தலையங்கம் மிக விறு விறுப்பாகவும் நல்ல பொருள் செறிந்ததாகவும் இருக்கிறது. "நான் தேர்தல் சமயத்தில் மக்களுக்கு எதையும் வாக்களித்து விடவில்லை. அதனால் இப்பொழுது இவ்வளவு வரி விதிக்க நேர்ந்தது பற்றி என் மனச்சாட்சி வேதனையுறவில்லை" என்ற ஸ்ரீ டி. டி. கே. அவர்களின் பேச்சைப் பார்த்ததும் திடுக்கிட்டேன்.

இந்த வருடம் பிப்ரவரி மாதத்தில் தேர்தலை முன்விட்டுப் பிரசாரத்துக்காக திரு டி. டி. கே. அவர்கள் தஞ்சை ஜில்லாவில் பிரயாணம் செய்தபொழுது எங்கள் கிராமத்துக்கும் விஜயம் செய்து பொதுக் கூட்டத்தில் பேசினார். அப்பொழுது அவர் பேசுவதற்கு முன் என்னிடம் ஏதாவது பிரச்னைகள் இந்தக் கிராமத்தில் எதிர்ப்பட்டிருக்கின்றனவா என்று கேட்டார். நான் எங்கள் கிராமத்திலுள்ள குறைகளைச் சுருக்கமாக அவரிடம் எடுத்துக் கூறினேன்! அதன் பிறகு. "கிராம மக்கள் சுபிட்சமாக இருக்க, அவர்கள் சந்தோஷமாகத் தங்களுக்கு வேண்டிய பொருள்களைக் குறைவின்றிப் பெற, உணவுப் பொருள்களின் உற்பத்தியைப் பெருக்கவேண்டும். அவற்றின் விலை உயர்வைத் தடுத்து நியாயமான விலையில் கிடைக்க, நாங்கள் வழி செய்கிறோம்" என்று கூறி வோட்டுக் கேட்டார். இதுமாதிரி எங்கெங்கு என்ன கூறினாரோ? ஆண்டவனுக்குத் தான் தெரியும்! இப்பொழுது "ஒன்றும் வாக்களிக்கவில்லை! மனமும் வேதனையுறவில்லை" என்று வாய் கூசாமல் கூறுகிறார்.

வரகூர்
25-5-57 வி. ஏ. பாலகிருஷ்ணன்

## முனிவர்களாக இருந்தால்...

சென்ற ஒரு வாரமாகத் தினப் பத்திரிகையைப் படித்தவர்களும், மற்றும் உள்ள பொது ஜனங்களும், நமது மத்திய நிதி மந்திரி தயாரித்துள்ள பட்ஜெட்டைக் கூர்ந்து கவனித்திருப்பார்கள். என்ன செய்வதென்று புரியாமல் இருந்த சமயத்தில், தங்கள் தலையங்கம் மிக மிக நன்றாக இருந்தது கண்டு எல்லோரும் மகிழ்ச்சி அடைந்திருப்பார்கள்.

இந்தியா முன்னேற வேண்டாம் என்று எந்த இந்தியனும் கூற மாட்டான். வெகு சீக்கிரம் முன்னேற்றமடையவும் விரும்பலாம். ஆனால் அதற்காக ஒவ்வொரு இந்தியனும் பட்டினி கிடந்து சாக விரும்ப மாட்டான். நிதி மந்திரி தமது பட்ஜெட் பிரசங்கத்தில் பொது ஜனங்கள் மேலும் கஷ்டப்பட்டு உழைத்துப் பொருள் சம்பாதிக்கத் தமது பட்ஜெட் ஒவ்வொருவருக்கும் உற்சாக மூட்டும் என்று கூறியுள்ளார்.

சாதாரண நடுத்தர உழைப்பாளி ஒருவன் மேலும் மேலும் கஷ்டப்பட்டு மாதம் ரூ. 250க்கு மேல் சம்பாதித்தால் அதைச் சர்க்கார் தட்டிப் பறித்துக் கொண்டுவிடப் புதிய வரித் திட்டம் வந்துவிட்டது. இந்த நிலையில் எவர்தான் மேலும் கஷ்டப்பட்டுப் பொருளீட்ட முயற்சி செய்வார்கள்?

அமிச்பேட்
25-5-57 பி. டி. ஞானம்

## 'கணக்கனாய்ப் பிறவி வேண்டேன்!'

நான் ரயில்வேயில் சேர்ந்து முப்பது வருஷங்கள் ஆகின்றன. இப்போது மாதம் ரூ. 131 சம்பளம் வாங்குகிறேன். வயோதிகப் பருவத்தில் அவதிப்பட்டு வரும் ரயில்வே குமாஸ்தாக்களில் நானும் ஒருவன். 1927 லிருந்து 1949 வரையில் பகல் 12 மணி நேரம் ஒரு வாரமும், இரவு 12 மணி நேரம் ஒரு வாரமுமாக வேலை பார்த்து வந்தேன். ஒய்வு கிடையாது. 365 நாட்களும் வேலை செய்ய வேண்டும். என்னைப் போல் எத்தனையோ குமாஸ்தாக்கள் போதிய சம்பளமின்றியும் ஒய்வு நாள் ஒரு நாள்கூட இல்லாமலும் வாடி வதங்குகிறார்கள். 'கணக்கிலா ஜன்மம் எடுத்தாலும் ரயில்வே கணக்கனாய்ப் பிறவி வேண்டேன், கச்சி ஏகம்பனே' என்று சொல்லத் தோன்றுகிறது. எங்கள் நிலைமைக்குப் பரிகாரம் கிடைக்குமா?

சென்னை
26—5—57 பி. எஸ். கிருஷ்ணய்யங்கார்

## வாழமாட்டார்கள்!

நாட்டு மக்களுக்கு நல்லனவற்றைச் செய்ய விரும்பும் அமைச்சர் திரு டி. டி. கே. தீயவை செய்யாமல் இருந்தால் போதுமானது. ஐந்தாண்டுத் திட்டம் நிறைவேற ஏழை மக்களின் தலைமேல் பாறாங்கல்லை வைக்கிறார். இதனால் மக்கள் மாள்வார்களே தவிர நல் வாழ்வு வாழ மாட்டார்கள்.

காரைக்குடி
24-5-57 என். கே. இலக்கியப்பித்தன்

## பேராசிரியரின் நினைவு

கல்கி 12-5-57 தலையங்கமான "கவர்னர்கள் பேருரைகள்" மற்றும் "மாதர் குல திலகம்" "கேரள விஜயம்" எல்லாம் படித்தவுடன், பேராசிரியர் கல்கி அவர்களின் நினைவு வந்தது. அமரர் கல்கி அவர்களைப் போன்ற

மேதைகள்தான், உண்மையை, சத்தியத்தை, நேர்மையை, எவ்விடத்தில் இருந்தாலும், கட்சி, ஜாதி, மாகாணம் ஏன், தேசவேற்றுமையின்றிப் பாராட்டுவார்கள். அன்று சென்னை நகரம் தமிழருக்கா, ஆந்திரருக்கா என்ற சர்ச்சை தீவிரமாகக் கிளம்பியபோது ஆந்திராவில் கம்யூனிஸ்டுகளைத் தவிர ஏனைய எல்லாக் கட்சிகளும் சென்னை நகரம் ஆந்திரருக்குத் தான் உரியது என்று ஆர்ப்பரித்தார்கள். ஆனால் ஆந்திரா—தமிழ் கம்யூனிஸ்டுகள் ஒரே குரலில் சென்னை நகரம் தமிழர்களுடையது தான் என்று பறைசாற்றினார்கள். அதைக் கண்டு அமரர் கல்கி அவர்கள் "ஆந்திராவில் சத்தியம் கம்யூனிஸ்டுகளிடம் தஞ்சம் புகுந்திருக்கிறது" என்று எழுதினார். அமரர் கல்கியைப் பின்பற்றி அந்தப் பாதையில் "கல்கி" சென்று, சத்தியத்தையும் நேர்மையையும், மனம் குளிரப் பாராட்டுவதைப் பார்த்து அளவிலா மகிழ்ச்சி அடைகிறேன்.

சேலம்
14—5—'57

எஸ். என். ராஜன்

## ஒப்பற்ற பணி

சென்ற 26-5-57 கல்கி இதழில் "அப்பளத்துப் பாட்டி" என்ற கதையைப் படித்ததும், தாங்கள் ராஜாஜியின் கதைகள் மூலம் நாட்டுக்குச் செய்து வரும் ஒப்பற்ற பணி நன்கு விளங்கியது. கல்கி நாள்தோறும் புதிய கருத்துக்கள் அடங்கிய கதைகளுடன் சிறப்பாக விளங்குகிறது.

சிறிய கதைகளின் மூலம் அரிய கருத்துக்களை வெளியிடும் தங்கள் முயற்சி நல்ல பயனளிக்கும் என்பதில் சிறிதும் சந்தேகம் இல்லை.

சிதம்பரம்
26-5-57

ஏ. வி. சௌரிராஜன்

## அழகிய முத்துக்கள்

....சங்கராச்சாரிய சுவாமிகளின் 'அருள் வாக்கு' எனக்குப் பிடித்த அம்சமாக இருக்கிறது. பழுத்த ஞானமும் கடல் போன்ற அநுபவமும் கொண்ட உண்மைகளை அழகிய உவமான முத்துக்களாக அள்ளித் தருகின்றது. இந்த அம்சம் கல்கியில் தொடர்ந்து இடம் பெறுமென நம்புகிறேன்.

திருச்சி
1—5—'57

துறைவன்

## கல்கி நல்கும் இன்பம்

ஈழத்துக்கு பகீரதன் அவர்கள் வந்தாலும் வந்தார்; ஈழத்துக்கு நல்ல யோகம் அடிக்கத் தொடங்கிவிட்டது!

தேடுவாரற்று எங்கோ ஒரு மூலையில் ஒதுங்கிக் கிடந்த பறவைத் தீவுக்கு யோகம். அதில் வாழும் லட்சோபலட்சம் பறவையினங்கள் கல்கியில் தங்களைப்பற்றி வந்த கட்டுரையைப் படித்து விட்டுத் 'தலைக் கனம்' கொண்டு தன்பாட்டில் பறந்து திரிகின்றன!

"ஹக்கல்" பூந்தோட்டத்தில் உள்ள மலர்களுக்கு நல்ல இசையோடு "பாடும்" திறன் உண்டு என்ற இரகசியம் இப்போதுதான் தெரிகின்றது! தனக்கு இத்தனை வனப்பு இருக்குமா என்று "அருவி கொட்டும்



உபாத்தியாயர்: இவ் வகுப்பில் யாராவது மக்குப் பையன் இருந்தால் எழுந்திருக்கவும்!
உபாத்தியாயர்: என்ன? நீ ஒரு 'மக்கு'ன்னு ஒத்துக் கொள்கிறாயா?.........
பையன்: நீங்க மட்டும் தனியாக நிற்பது எனக்குச் சங்கடமா இருக்கிறது, ஸார்!

---

அழகை"ப் படித்து விட்டு "இயலுமா அருவி" மூர்ச்சை போட்டு விழுந்திருக்கும்!

கதிர்காமக் கந்தன், ஆம்! அவனைப்பற்றிச் சொல்லவே வேண்டியதில்லை. கதிர்காமக் கட்டுரையை விழுந்து விழுந்து படித்திருப்பான்!

கட்டுரையின் ஒரு கட்டத்தில் "விநாயக வணக்கம்" வந்ததற்கு, திரு பகீரதனின் புதுவிளக்கம் அந்தத் தொந்திக் கணபதியையே தூக்கி வாரிப்போட வைத்திருக்கும்!

'மலைச்சாரல் மாதவி' மற்றொரு இன்பம் தரும் அம்சம். ஆனந்தி அவர்கள் சிவசங்கரன் சிந்தையில் மாதவி என்ற "கள்ளி"யைப் புகச் செய்து விட்டு அந்த மனுஷனைப் படுத்தும் பாடு அப்பப்பா! சொல்லத்தரமற்றது. பாவம்! கதையின் ஆரம்பத்தில் சிவசங்கரனின் கைத் துப்பாக்கியால் எதிர்பாராத வகையில் சுடுபட்டு இறந்த அந்த வாலிபன் யாரோ? நேயர்களுக்குப் பெரிய ஆவலைத் தூண்டி விட்டார் ஆனந்தி. புலிக்குப் பிறந்தது பூனையாகுமா?

கி. ரா. கோபாலன் படம் பிடிக்கும் "மாலவல்லி"யையும், "வைகைமாலை"யையும், "தேனார் மொழியா"ளையும், "பூதுகனை"யும் பற்றிப் பேச வேண்டாம்! வைகைமாலையின் மென் உள்ளத்தில் குடி கொண்ட "பூதுக"னைத் "தேனார்மொழியாள்" திருட முற்பட்டிருப்பது ரொம்ப வேடிக்கையாக இருக்கிறது. கதை போகும் வேகம் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளுகிறது.

ஆரையம்பதி: இலங்கை
வசந்தம்: 25-5-57

என். சரோஜா.
ஆர். கமலா.



# விற்பனை இலகுவாக முடிந்தது...

ட்ரேயோபேன் பாக்கிங் கண்ணைக் கவர்ந்து, சரக்குகளுக்கு என்ன மாறுதலை அளிக்கிறது பாருங்கள்! அதன் பளபளப்பும் பிரகாசமும் வாடிக்கைக்காரர்களின் கவனத்தைக் கவருகிறது...சரக்குகள் புத்தம் புதியதாகவே தோன்றுவதால் அவர்கள் தாங்கள்கொடுக்கும் விலையின் முழுமதிப்பைப்பெறுகிறோம் என்று திருப்தியடைகிறார்கள்

## ட்ரேயோபேன்* தாளில் பாக் செய்யப்படுவதால்



சரக்குகளின் மேல் தூசி துப்புப் படியாமல் ட்ரேயோபேன் பாதுகாப்பளிக்கிறது. எங்களுடைய இலவச சாம்பிள் புத்தகத்திற்கு இன்றே எழுதுங்கள்!

***மிகவும் மலிவானது!***



ஒரு ரீம் (ஒவ்வொன்றும் 30" × 20" அளவுள்ள 500 தாள்கள் கொண்டது) ட்ரேயோபேன் விலை ரூ. 44-00. அங்கீகாரம் பெற்ற டீலர்களுக்கு 2½ சதவிகிதம் தள்ளுபடி உண்டு.

## ட்ரேயோபேன்

*ட்ரேயான்ஸ் ட்ரான்ஸ்பெரண்ட் தாளின் புதிய பெயர்

**கண்ணைக் கவருகிறது...விற்பனையை எளிதாக்கிறது**




**தி திருவாங்கூர் ரேயான்ஸ் லிமிடெட்**

பாக்டரி: ரேயான்புரம் போஸ்ட், கேரள ராஜ்யம்

ஸேல்ஸ் ஆபீஸ்: 2/6, செகண்ட் லைன் பீச், மதராஸ் - 1

CR 860

# வேலூர் தந்த விளையாட்டு வீரர்



நாம் சந்தோஷமாக உலகில் வாழ்வதற்கு ஆரோக்கியமான உடல் தேவை. அதனால்தான் ஆதியில் நம் முன்னோர்கள் காடுகளிலும் மலைகளிலும் ஓடியும், சாடியும், குதித்தும், இடம்விட்டு இடம் மாறியும் வாழ்ந்து நல்ல தேக திடத்தோடு நோய் நொடியின்றி இருந்து வந்தார்கள்.

ஆனால் இப்பொழுது ஆரோக்கியமாக வாழ்வதற்கு மக்களுக்கு தேகப் பயிற்சிகளும் விளையாட்டுக்களும் அருமருந்தாக உதவுகின்றன.

இந்தியாவில் சிறந்த உடற்பயிற்சிகளில் ஒன்றான அகலம் தாண்டிக் குதிப்பதில் (Broad Jump) நிகரற்ற வெற்றி வீரராகத் திகழ்பவர் திரு செ. சங்கரன். வேலூருக்கு அருகில் சென்னு ரெட்டியூர் என்னும் கிராமத்தில் 1932-ம் வருஷம் ஏப்ரல் 9-ந் தேதி விவசாயக் குடும்பத்தில் தோன்றினார். வேலூர் ஊரீஸ் உயர்நிலைப் பள்ளியில் பயின்றபோதுதான் திரு சங்கரனுக்கு விளையாட்டுக் கலையில் ஆர்வமும் பயிற்சியும் ஏற்பட்டன. அவர் முதன் முதலில் ஜில்லா கல்லூரிகள் விளையாட்டுப் போட்டியில் கலந்து கொண்டார். உயரம் தாண்டல், அதிக தூரம் தாவிக் குதித்தல், நூறு மீட்டர் ஓட்டம் முதலியவற்றில் வெற்றி பெற்று ஜில்லா வெற்றி வீரராக வாகைமாலை சூடினார்; ஊரீக் ஞாபகார்த்தப் பதக்கம் இவரை அலங்கரித்தது. கலைப் பயிற்சியோடு கல்விப் பயிற்சியும் வளர்ந்தது. ஊரீஸ் கலாசாலையில் இண்டர் தேறி, சென்னை பச்சையப்பன் கல்லூரியில் சேர்ந்து பி. ஏ. (ஆனர்ஸ்) பட்டமும் பெற்றார். இவரது குடும்பத்தில் இவர்தான் முதல் பட்டதாரி!

1952ம் வருஷம் சென்னையில் ஒலிம்பிக் பந்தயம் நடந்ததல்லவா? அதில் திரு சங்கரனின் திறமை நன்கு சோபித்தது. அதிக தூரம் தாவிக் குதிப்பதில் இரண்டாவது பரிசும், அதிக உயரம் தாண்டுவதில் 6¾ அடி குதித்து மூன்றாவது பரிசும் பெற்றுத் தமது புகழை நிலைநாட்டினார். இந்த ஒலிம்பிக் பந்தயத்தில் சேர்ந்து கொண்டு நிகழ்த்திய பணியையே தம் வாழ்நாளில் மறக்க முடியாத நிகழ்ச்சியாகக் கருதுகிறார் திரு சங்கரன்.

'கலைதான் சிறந்த நல்லெண்ணத் தூதுவர்' என்கிறார் ஒரு ஆங்கில அறிஞர். 1954-ம் வருஷம் கடல் கடந்து அயல்நாடுகளுக்குச் சென்று புதாபெஸ்டிலும், ஹங்கேரியிலும் நிகழ்ந்த பன்னிரண்டாவது உலக சர்வகலாசாலைக் கோடைகால விளையாட்டுப் போட்டியிலும், ஜெர்மனியில் லிப்ஸிக்கில் நிகழ்ந்த இளைஞர் விழாவிலும் பங்கு பற்றியுள்ளார்.

இந்திய சர்வகலாசாலையினர் திரு சங்கரனை இந்திய சர்வகலாசாலை விளையாட்டு நிபுணர்களுக்குள்ளே தலைசிறந்தவர் என்று புகழ்மாலை சூட்டிக் கௌரவித்தனர். காரைக்குடியில் சென்னை சர்வகலாசாலையினர் நிகழ்த்திய அகலம் தாண்டல் போட்டியில் 23 அடி 7 அங்குலம் தாவி அரிய சாதனை செய்து இந்திய ஆசிய ரிக்கார்டுகளை முறியடித்தார். 1957-ம் வருஷம் அகலம் தாண்டல் போட்டியில் இவருக்கு தேசிய வெற்றி வீரர் என்னும் பட்டமும் கிடைத்தது.

இன்று அகில உலக வெற்றி வீரரும் ஓட்டப் பந்தயத்தில் இணையற்று விளங்குபவருமான ஜெஸிஓவன்ஸைத் தெரியாதவர்கள் இருக்க முடியாது. அவர் இளைஞர் திரு சங்கரனது ஆட்டத் திறமையைப் பாராட்டி, எதிர்காலத்தில் திரு சங்கரன் சிறந்த ஆட்டக்காரராகத் திகழலாம் என்று கூறியிருக்கிறார்.

எங்கோ ஊர் பெயர் தெரியாத கிராமத்தில் பிறந்து, விளையாட்டுக் கலையே இன்னதென்று அறியாத விவசாயக் குடும்பத்தில் வளர்ந்த திரு செ. சங்கரன் இன்று உலகப் புகழ் பெற்று விளங்குகிறார் என்றால், அது அவரது சலிப்பில்லாத உழைப்புக்கும், முயற்சிக்கும் சிறந்த எடுத்துக்காட்டாகும். 'முயற்சியுடையார் இகழ்ச்சியடையார்' அல்லவா?

'உடல் வளர்த்தேன்; உயிர் வளர்த்தேனே' என்பது திருமூலர் அருள் வாக்கு. திரு செ. சங்கரன் பெரம்பூர் ரயில் பெட்டி கட்டும் தொழிற்சாலையில் விளையாட்டுக் கலைநல உத்தியோகஸ்தராகப் பணியாற்றி வருகிறார். இன்னும் அவருக்கு மணமாகவில்லை.

எந்த இளைஞரும் உறுதியுடன் முயற்சி செய்தால், விளையாட்டுக் கலையில் முன்னேறி வாழ்க்கைத் தரத்தில் உயரலாம் என்பதற்குத் திரு சங்கரனின் வாழ்க்கையே முன் உதாரணமாகத் திகழ்கிறது. மனம் உண்டானால் மார்க்க முண்டு.

— குண்டுமணி.





# அபூர்வ நகரம்

மே மாதம் பதினேழாம் தேதி மாலை. கொழும்பு நகரசபை மண்டபத்துக்கு எதிரில் பதினாயிரக் கணக்கான மக்கள் அமர்ந்திருந்தனர். சூரியன் மறைந்து விட்டான். பகலின் ஒளி சிறிது சிறிதாக மங்கி வந்தது. இருள் சூழ்ந்தது. நகரசபை மண்டபத்துக்கு எதிரில் சட்டென்று ஒரு பிரகாசம் தோன்றியது. ஆசியாவின் ஜோதி, பாரதத்தின் பிரதமர் பண்டித ஜவாஹர்லால் நேரு மலர்ந்த முகத்துடன் காரிலிருந்து இறங்கினார். "நமோ நமோ மாதா!" என்ற இலங்கையின் தேசிய கீதம் கணீரென்று ஒலிக்க ஆரம்பித்தது! இலங்கைத் தீவே எழுந்து நின்று மரியாதை செய்வது போல அங்கு கூடியிருந்த எல்லா மக்களும் எழுந்து நின்றனர். தேசிய கீதம் முடிந்தவுடன் கொழும்பு நகர மேயர் திரு ஏ.வி. குலசிங்கம் ... [illegible] ளதா நிற மலர்களைக் கொண்டு கலை மணத்துடன் கட்டிய அழகான மாலையைச் சூட்டி ஜவாஹர்லால் அவர்களை வரவேற்றார். பின்னர் வழக்கமான சம்பிரதாயச் சடங்குகள் நடைபெற்றன. நகராண்மைக் கழக அங்கத்தினர்கள் நேருஜிக்கு அறிமுகம் செய்து வைக்கப்பட்டனர். வரவேற்புப்பத்திரம் வாசித்துக் கொடுக்கப்பட்டது. நேருஜி வரவேற்புக்கு ஏற்ற வண்ணம் பதில் அளித்தார். "இலங்கையும் இந்தியாவும் சமாதானப் பாதையில் கை கோத்துக் கொண்டு செல்ல வேண்டும்" என்றார். இதற்குப் பின்னர் கலை நிகழ்ச்சிகள் இருந்தன. கலை நிகழ்ச்சிகளுக்கான ஏற்பாடுகள் தயாராவதற்குள் நேருஜி தூரத்தில் இரும்பு வேலிகளுக்கு அப்பால் நெருக்கியடித்து நின்று கொண்டிருந்த மக்கள் கூட்டத்தை நோக்கிப் பாய்ந்து சென்றார். கன்னித் தமிழில் "நேருஜி வாழ்க!" என்று வாழ்த்தி வரவேற்றது அந்த மாபெரும் கூட்டம். மக்களின் உணர்ச்சிப் பிரவாகத்தைத் தாங்காது பல இடங்களில் பலம் பொருந்திய அந்த இரும்புக் கிராதிகள் உடைந்து விட்டன!

நேருஜி கூட்டத்தின் மத்தியிலிருந்து திரும்பி வருவதற்கும் கலை நிகழ்ச்சிகள் ஆரம்பமாவதற்கும் சரியாக இருந்தது. நேருஜி கலா மேடைக்கு எதிரில் உள்ள ஆசனத்தில் வந்து அமர்ந்ததும் 'கணீர்! கணீர்!' என்று மத்தளத்தின் ஓசை எழுந்தது. திரைக்குப் பின்னால் இருந்து ஒருவர் பின் ஒருவராக மூன்று நடன மணிகள் வந்தனர். அவர்கள் அழகான நடன உடை அணிந்திருந்தனர். கண்ணைக் கவரும் வெள்ளை நிற ஆடை அணிந்திருந்தனர். அந்த ஆடைகளுக்கு மேலே கருத்தைப் பறிக்கும் அலங்காரங்கள் மிளிர்ந்தன. அவர்கள் போக்கில் திடீரென்று ஆனந்தம் துள்ளியது. கண்கள் பிரகாசித்தன. சின்னஞ்சிறு வெண்ணிறப் புஷ்பங்களைப் போலிருக்கும் வெறும் காலுடனே அவர்கள் ஆடத் தயாரானார்கள். மத்தளம் முழங்க ஆரம்பித்தது. வசந்த காலத்து வெள்ளை ரோஜா மலர்கள் தென்றலில் அசைவது போல் மெதுவாக அசைந்தார்கள். அன்னப் பறவை காலைத் தூக்கி வைப்பது போல ஒவ்வொரு காலாகத் தூக்கி வைத்தார்கள். மத்தள ஒலி கணத்துக்குக் கணம் அதிகமாகியது. அந்தக் கண்டி நடன மணிகளின் ஆட்டமும் வேகம்பெற்றன. அந்தப் பெண்கள் சுழன்று சுழன்று ஆடினார்கள். கால்களை மாற்றி மாற்றி வைத்து ஆடினார்கள். நெளிந்து நெளிந்து ஆடினார்கள். வளைந்து, குனிந்து, நிமிர்ந்து, ஓடி, ஓங்கி ஆடினார்கள். ஆட்டம் முடியும் தறுவாயில் அவர்கள் நடனம் அபார அழகுடன் துலங்கியது. சட்டென்று ஆட்டத்தை நிறுத்தினார்கள். பனி முத்துக்களைப் பெற்ற புது மலர்கள் போல முகங்களில் வியர்வை அரும்பி நிற்க இரு கைகளையும் குவித்து வணங்கினார்கள். அடுத்த கணம் நீலத் திரைக்குப் பின்னால் ஓடி மறைந்து விட்டார்கள்.

ஜவாஹர்லால் அவர்களோடு அப் பெரும் சபை கை கொட்டித் தன் மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொண்டது. அதே சமயத்தில் மேடைமீது ஈழத்தின் புகழ் பெற்ற கண்டி நடனக்காரர் தோன்றினார். 'ஜல் ஜல்' என்று சலங்கை கொஞ்ச நடந்து வந்தார். சபையோருக்கு வணக்கம் செய்து நிமிர்ந்தார். அடுத்த கணமே ஆட ஆரம்பித்து விட்டார். ஆரம்பிக்கும்போதே புயலின்




வேகத்தில் ஆட்டம் ஆரம்பமாகி விட்டது. மின்னல் வேகத்தில் சுழன்று கொண்டே ஆடினர். அந்த ஆட்டத்தில் ஒரு பயங்கர அழகு பொங்கித் ததும்பியது. இதற்கு மேல் ஆட்டத்தைப் பார்க்க முடியவில்லை. கலை நிகழ்ச்சியில் வருணதேவன் வந்து கலந்து கொண்டார். 'உஸ் உஸ்' என்ற காற்றின் பல்லவிக்கு ஏற்ப 'சோ சோ' என்று மழை பக்க வாத்தியம் இயக்கத் தொடங்கிவிட்டது. இயற்கையின் இந்த நடனத்தைத் திறந்த வெளியில் இருந்து அனுபவிக்க முடியாமல் மக்கள் கூட்டம் கலையத் தொடங்கியது. கண்டி நடனக்காரர் ஆடிக்கொண்டே நீலத் திரைக்குப் பின்னுல் மறைந்து விட்டார்.

## பகீரதன்

நேருஜி மழையில் நனைந்து கொண்டே கொழும்பு நகர சபை மண்டபத்துக்குள் சென்றுர். அவரைத் தொடர்ந்து சென்ற ஜன சமுத்திரத்தைத் தடுத்து நிறுத்துவதற்குள் கொழும்பு நகர போலீஸ் படைக்குப் போதும்போதும் என்ருகிவிட்டது.

இரவு காலிமுக ஹோட்டலில் இலங்கையில் உள்ள எல்லா இந்திய சங்கங்களும் சேர்ந்து நேருஜிக்கு வரவேற்பளித்தன. அந்த வரவேற்பிலும் கலை நிகழ்ச்சி இருந்தது. எல்லாம் சின்னஞ் சிறு பெண்கள். அந்தப் பெண்கள் ஆடிய பரதநாட்டியத்தைப் பற்றிக்கூறுவதா? கிராமக் காதலர்கள் நடனத்தைப் பற்றிக் கூறுவதா? குறவன் குறத்தி நடனத்தைப் பற்றிச் சொல்வதா? எதைப்பற்றிச் சொல்வது? ஆறு வயதுகூட நிரம்பாத அந்தக் குழந்தை தன் கமலக் கண்களைத் திறந்து ஒரு சுழற்று சுழற்றினளே! அதில் நேருஜியே அல்லவா மயங்கிப் போனர்! அந்தக் குழந்தையைத் தாவி அணைத்துக் கொண்டு உச்சி முகர்ந்து ஆசிர்வாதம் செய்தார். "மனிதத் தன்மை, சகிப்புத்தன்மை, பிறருக்குத் தீங்கு செய்யாமை இந்த அடிப்படையில் எல்லாப் பிரச்னைகளையும் தீர்க்க வேண்டும்" என்று கூடியிருந்த மக்களுக்கு யோசனை கூறினர்.

அன்றைய நிகழ்ச்சிகள் இத்துடன் முடிவடைந்தன. மறு நாள் விசேஷ ரயிலில் கொழும்பு நகரிலிருந்து நூற்று மூன்று மைல்களுக்கு அப்பால் உள்ள மிகப் பழைய நகரமான அநுராதபுரத்துக்குச் செல்கிருர் நேரு. வாருங்கள், அவருக்கு முன்னதாகவே நாம் அநுராதபுரத்துக்குச் செல்வோம். நேருஜி வருவதற்குள் அநுராதபுரத்தின் சரித்திர முக்கியம் பெற்ற இடங்களைப் பார்ப்போம்.

*** *** ***

இதோ அநுராதபுரத்துக்கு வந்து விட்டோம். அநுராதபுரம் ஒரு அபூர்வ நகரம் தான். பழைய காலத்திலும் அபூர்வ நகரமாகத்தான் இருந்தது. இந்த நாளிலும் அபூர்வ நகரமாகத்தான் இருக்கிறது. இரண்டாயிரத்து ஐந்நூறு ஆண்டுகளின தொடர்பான சரித்திர வரலாற்றை இந் நகரில் இன்றைய தினமும் கண்ணுல் காணலாம். ஆமாம், அதற்கு வேண்டிய சரித்திர ஆதாரமான அழியாச் சின்னங்கள் இங்கு இருக்கின்றன. இந்தமாதிரி சரித்திர முக்கியத்துவமும் பெருமையும் வாய்ந்த நகரம் உலகில் ஒரு சிலதான் இருக்கலாம்.

அநுராதபுரத்துச் சாலையில் நடந்து இடிந்தும் சிதைந்தும் போயிருக்கும் புத்த விஹாரங்களைப் பார்த்துக்கொண்டு மகாமேகநந்த வனத்துக்கு வருகிருேம். அங்கு இருக்கும் போதி மரத்தைப் பார்க்கிருேம். அந்த மரத்தை மக்கள் பக்தி சிரத்தையுடன் வணங்குவதையும், அந்த மரத்தின் கிளைகளிலெல்லாம் பக்தர்களின் காணிக்கையான வெள்ளைத் துணிகள் கட்டித் தொங்கவிட்

*அநுராதபுரத்தில் ஈசுரமுனிய விஹாரத்தைப் பார்வையிட்டுத் திரும்பிய நேருஜி சமாதி புத்தரின் சந்நிதிக்கு வந்தார். பின்னர் இரட்டைக் குளத்தில் இருந்த ஆமைகளைப் பார்த்து விட்டு போதி மரக்கிளையின் அடியில் புகுந்துவரும் காட்சிகளை, படத்தில் காணலாம்.*



திட்டக்கமிஷன் உதவி சேர்மன் வி. டி. கிருஷ்ணமாச்சாரி அவர்களின் பேரனும், தென்னிந்திய ரயில்வே பொது ஜனத் தொடர்பு அதிகாரி திரு கே. சீனிவாசன் அவர்களின் புதல்வருமான திரு எஸ். வேணு அவர்களுக்கும் திரு கே. எஸ். சாரி அவர்களின் புதல்வி சௌபாக்யவதி லலிதாவுக்கும் சென்னையில் மே 8-ந்தேதி வெகு விமரிசையாகத் திருமணம் நடந்தேறியது. திருமண வைபவத்தில் அரியக்குடி திரு ராமானுஜ ஐயங்கார் அவர்களின் இன்னிசை விருந்து நிகழ்ந்தது. வாழ்க மணமக்கள்!

டிருப்பதையும் பார்த்தவுடன் நம்முடைய மனமெல்லாம் காலவெள்ளத்தில் பின்னேக்கிப் பிரயாணம் செய்யத் தொடங்குகிறது. நம் எதிரில் தோன்றும் இன்றைய அநுராதபுரத்துக் காட்சிகள் மறைந்து விடுகின்றன.

பள பள வென்று ஜகஜ்ஜோதியாக மின்னும் பசும் பொன்னுலான தேரில் வெள்ளை நிறக் குதிரைகள் பூட்டி யிருக்கின்றன. தேரைச் சுற்றிலும் மன்னரும் மந்திரிகளும் மகாராணிகளும் பிரபுக்களும் மக்களும் பக்தி சிரத்தையோடு சூழ்ந்து நிற்கிறார்கள். மங்கள வாத்தியங்கள் முழங்குகின்றன! அந்தத் தேருக்குள் என்ன இருக்கிறது? ஏதோ கிளை போல் அல்லவா தெரிகிறது. ஆமாம், கிளையே தான்! மகான் புத்தர் எந்த அரசமரத்தடியில் அமர்ந்து தியானம் செய்து ஞானோதயம் பெற்றாரோ, அந்தப் போதி மரத்தில் இருந்து எடுத்த சிறிய கிளைதான். அந்தக் கிளையை யார் கொண்டு வந்தார்? அசோகச் சக்கரவர்த்தியின் அருமை மகள் சங்கமித்திரையே கொண்டு வந்தாள். அந்த அரசங்கிளையைத் தான் தங்கச் சட்டியில் வைத்து, பொன் தேரில் ஊர்வலமாக எடுத்து வருகிறார்கள். தேர் வரும் சாலை எல்லாம் வெண் மணல் பரப்பப்பட்டிருக்கிறது. அதன்மீது பலவித மலர்கள் தூவப்பட்டிருக்கின்றன. சாலையெல்லாம் தோரணங்கள். மகாமேக நந்தவனத்துக்கு அருகில் வந்ததும் தேர் நிற்கிறது. தேரிலிருந்த போதிக் கிளை இருக்கும் பொற்சட்டியை சங்கமித்திரை எடுத்து அரசன் தேவனும் பிரிய திஸ்ஸனிடம் அளிக்கிறாள். அரசன் தலை வணங்கி, பக்தி மரியாதையுடன் போதிக் கிளையைப் பெற்றுக் கொள்கிறான். அரசனுக்குப் பின்னால் பதினாறு பிரபுக்கள் கைகட்டி, தலை வணங்கி நிற்கிறார்கள். கூடியிருந்த பல்லாயிரக் கணக்கான மக்கள் மகிழ்ச்சி ஆரவாரம் செய்கிறார்கள். அன்று அநுராதபுரத்தை தெய்வ லோகம் போல் அலங்கரித்துக் கோலாகலமாக விழா எடுத்து நட்ட போதி மரக்கிளைதான் வேர்பரவிவளர்ந்து உயிருடன் இருக்கிறது. இது உலகிலேயே வயதான மரமாம்!

இந்த மரத்தின் ஒரு பாகத்தில் இப்பொழுது ஏதோ நோய் கண்டிருக்கிறதாம். அதற்காக உலகிலேயே பிரசித்திபெற்ற பல வன ஆராய்ச்சி நிபுணர்களை வரவழைத்து அந்த மரத்துக்கு ஏற்பட்டிருக்கும் நோயின் காரணத்தைக் கண்டறிந்து அதைப் போக்குவதற்காக வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து வருகிறது இலங்கை சர்க்கார் என்று கேள்விப்பட்டேன். அசோக மன்னன் காலத்து மரமல்லவா? போதி பகவானுக்கு ஞான ஒளி தந்த புண்ணிய விருட்சமல்லவா? பௌத்த மதத்தையே தன்னுடைய அரசியல் கொள்கையாகக் கொண்ட இலங்கை சர்க்கார் இதைக் கூடச் செய்ய வேண்டாமா? கட்டாயம் செய்யத்தான் வேண்டும். அது போலவே இன்றைய ஈழத்து மக்கள் சமுதாயத்தில் பரவியுள்ள சமூகத் துவேஷ நோயையும் போக்குவதற்கு புத்த பகவான் அவர்களுக்குக் கருணை புரிய வேண்டும்.

இந்தப் புண்ணிய போதி மரத்தைத் தரிசித்துவிட்டு மேலே செல்கிறோம். அநுராதபுரத்தின் வீதியிலே மெதுவாக நடந்து செல்கிறோம். வீதியை ஒட்டினாற்போலிருக்கும் சிதைந்துபோன புத்த விஹாரம் நம்மைப் பார்த்துச் சிரிக்கிறது! ஆமாம். நம்முடன் துணைவந்த இலங்கை நண்பரின் குரல் மூலமாகத்தான் சிரிக்கிறது!

''ஏன் இப்படிச் சிரிக்கிறீர்கள்?''

''அது ஒரு கதை!''

''அந்தக் கதையைத்தான் சொல்லுங்களேன், கேட்கலாம்.''

இலங்கை நண்பர் அந்த புத்த விஹாரத்தைப் பற்றிய ரஸமான கதையைச் சொல்லத் தொடங்கினார்.

அநுராதபுரம் மகோன்னத நிலையில் இருந்த காலம். எல்லாளச் சோழன் என்ற தமிழ் மன்னன் அநுராதபுரியை ஆண்டு வந்தான். அவனுடைய தர்ம ஆட்சியில் சிங்கள மக்களும் தமிழ் மக்களும் இரு கண்களாக வேற்றுமையின்றிப் பாதுகாக்கப்பட்டனர். சைவமும், பௌத்தமும் ஒன்றை ஒன்று அணைத்துக் கொண்டு ஓங்கி நின்றன. மன்னர் தாமே தேர் ஓட்டிக் கொண்டு சென்று மக்களின் குறைகளை விசாரிப்பார். அதற்கு வேண்டிய பரிகாரங்களையும் உடனுக்குடன் செய்து வருவார். அவ்வாறு ஒருநாள் தேர் ஓட்டிக்

கொண்டு சென்றான் எல்லாளச் சோழன். அன்று என்னவோ குதிரைகள் அவன் கைக்கு அடங்கி ஓடவில்லை. எவ்வளவோ சாமர்த்திய மாகத்தான் தேரை ஓட்டிக் கொண்டு சென்றான். அந்த இடக்குப் பிடித்த குதிரைகள் ஒரு துள்ளுத் துள்ளி அருகில் இருந்த புத்த விஹாரத்தின் பக்கம் தேரை இழுத்துச் சென்றன. தேர் புத்த விஹாரத்தில் மோதியது. தேர் நகங்கியது. புத்த விஹாரம் கொஞ்சம் சிதைந்துவிட்டது. புத்த விஹாரம் சிதைந்ததைப் பார்த்தான் மன்னன் எல்லாளச் சோழன். மனம் பதறிப் போய் விட்டான். தான் ஓட்டி வந்த தேரால் புத்த விஹாரத்துக்குச் சேதமா? தன்னுடைய கவனக் குறைவால் புத்த விஹாரையில் சிதைவு ஏற்பட்டு விட்டதா என்பதை எண்ணிப் பார்த்தான். அவன் இதயமே சுக்கு நூறாக வெடித்துவிடும் போல் இருந்தது. அதற்குப் பிராயச்சித்தமாக என்ன செய்வது என்று யோசித்தான். தன்னுடைய தவற்றுக்குத் தானே தண்டனை அனுபவிக்க வேண்டும் என்று நினைத்தான். அந்தக் கணத்திலேயே தன்னைச் சிதைத்துக் கொள்ளத் துணிந்து விட்டான். சிதைந்து போன அந்த புத்த விஹாரத்தின் முன்னால் சாஷ்டாங்கமாகத் தரையில் விழுந்தான். கண்ணீர் விட்டான். கதறினான். "என் தலையில் இந்தத் தேரை ஓட்டி என்னைச் சிதைத்துக் கொல்லுங்கள்" என்று புத்த பிக்குகளைப் பார்த்து வேண்டினான். அவர்கள் தலைவர்களாகிய தேரோக்களைப் பார்த்துக் கெஞ்சினான். இந்தமாதிரி உலகில் எந்த மன்னராவது மனம் பதறி இருக்கமுடியுமா? உயிருள்ள பொருளுக்காக உயிரைக் கொடுக்க முன் வந்திருப்பார்கள். உயிரற்ற கல்கட்டடத்தின் சிதைவுக்காக மனம் பதறித் தன்னையே தியாகம் செய்துகொள்ள ஒரு தமிழ் மன்னனால்தான் முடியும்! தமிழன்தான் பிற மதத்தினரின் உணர்ச்சிக்கு மதிப்பும் மரியாதையும் வைத்துப் போற்றுபவன். அப்படிப்பட்ட புண்ணிய மூர்த்தியான, சிதைந்துபோன செங்கல் கட்டடத்துக்காகவே தன் உயிரைத் துறக்க முன்வந்த தியாகபுருஷரான, நியாயம் காத்த மன்னன் எல்லாளச் சோழன் அரசாண்ட தர்ம பூமி இந்த அனுராதபுரம்.



நேருஜியின் சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த இலங்கை விஜயத்தில் கலந்து கொள்வதற்காகச் சென்ற கல்கிப் பத்திரிகையின் துணை ஆசிரியர் பரிசுதன் இலங்கை இந்திய ஹை கமிஷன் காரியாலயத்தில் நேருஜியைச் சந்தித்தார். கல்கிப் பத்திரிகையின் துணை ஆசிரியரை நேருஜி களிவுடன் வரவேற்பதைப் படத்தில்காணலாம்.

இந்தக் கதையைச் சொல்லி விட்டு நண்பர் என்னைப் பார்த்தார். இடிந்து போன அந்த புத்த விஹாரத்தைப் பார்த்தார். "ஒருகால் அந்த மன்னர் தேர்பட்டுச் சிதையும் பாக்கியம் பெற்ற புத்த விஹாரம்தானோ என்னவோ இது" என்று வியந்தார்.

"எல்லாளச் சோழன் போன்ற தமிழ் மன்னர்கள் ஆண்ட இந்தத் தர்ம பூமியிலா தமிழ் மக்களையும் தமிழையும் வேண்டாம் என்று இப்பொழுது ஒதுக்குகிறார்கள்?"

"எல்லாளச் சோழன் காலத்தில் அந்த உத்தமத் தமிழ் மன்னனையே சிங்கள மன்னர்கள் வெறுத்தார்கள். அவன்மீது போர் தொடுத்தார்கள். இப்பொழுதுதான் எல்லாரும் இந்த நாட்டு மன்னர்கள் ஆயிற்றே! இதனால் எல்லாத் 'தமிழ் மன்னர்'களையும் வேண்டாம் என்கிறார்கள் சிங்களவர்கள்."

"எல்லாளச் சோழனைக்கூடவா சிங்கள மன்னர்கள் எதிர்த்தனர்?"

"ஆமாம். துட்டகமனு என்ற சிங்கள மன்னன் எல்லாளச் சோழன் மீது போர் தொடுத்து அவனை வீழ்த்தினான். ஆனால் அந்தத் தமிழ் மன்னனின் வீரத்துக்குத் தலை வணங்கினான். வருங்காலச் சிங்களவர்கள் தமிழர்களைத் தங்கள் சகோதரர்கள் போல் பாவிக்க வேண்டும். எல்லாளச் சோழனின் கல்லறைக்கு ஒவ்வொரு சிங்களவனும் வணக்கம் தெரிவிக்க வேண்டும் என்று செம்பிலும் கல்லிலும் வெட்டுவித்தான்."

"உண்மையாகவா?"

"ஆமாம். உண்மையாகவேதான்."

"இந்திய மக்களின் மீது இனத் துவேஷம் ஏற்படுவதற்காகத் துட்டகமனுவைச் சுட்டிக் காட்டி துவேஷப் பிரசாரம் செய்கிறார்களே சில சிங்களத் தலைவர்கள்?"

"அவர்கள், அவர்களையும் அறியாமலேயே தங்கள் மன்னரின் சிறந்த பண்புகளையும், உயர்ந்த குணங்களையும் தாழ்த்துகிறார்கள். அவர்கள் அறியாமையைக் கண்டு துட்டகமனு வானவீதியில் வாட்டத்துடன் நின்று கண்ணீர் வடித்துக் கொண்டிருப்பான்."

இவ்வாறு அந்த இலங்கை நண்பருடன் பேசிக் கொண்டு அநுராதபுரியைச் சுற்றி வந்தோம். அங்கு பார்க்கும் இடமெங்கும் தாகபாக்கள்தான். அதாவது புத்தரின் இரு

மேனியில் இருந்து எடுத்த தாதுக்களில் ஏதாவது ஒன்றை அடக்கம் செய்து அதன் மீது கட்டிய பிரமாண்டமான வட்ட வடிவமான குன்றுகள்தான் தாகபாக்கள் !

தாகபாக்கள் எல்லாம் செங்கற்களைக் கொண்டு கட்டப்பட்டவைதான். வெறும் குன்றுபோல் கட்டி அதற்குமேல் கலசம் அமைத்திருப்பார்கள் அவ்வளவுதான். ஆனால் இந்தத் தாகபாக்களைக் கட்டுவதற்கு எவ்வளவு செங்கற்கள் வேண்டியிருக்கும் தெரியுமா? ஒரு தாகபாவில் உள்ள செங்கற்களை மட்டும் எடுத்தால் சென்னை காந்தி நகரைப் போன்று பத்து காந்தி நகரம் நிர்மாணிக்கலாம் என்றால் அதற்கு எவ்வளவு செங்கற்கள் வேண்டியிருக்கும்? தாகபாக்கள் எவ்வளவு பிரமாண்டமாக இருக்கும் என்பதை நேயர்கள் ஒருவாறு கற்பனை செய்து கொள்ளலாம்.

"இலங்கையில் இது போன்ற தாகபாவை யார் முதலில் கட்டினார்களோ?"

"சிங்கள மன்னன் தேவனம்பிரிய திஸ்ஸன் கட்டியதுதான் முதல் தாகபா. அதற்குத் தூபராம தாகபா என்று பெயர்."

"அவனுக்குப் பிறகு யார் யார் இது போன்ற தாகபாக்களைக் கட்டினார்கள்?"

"துட்டகமனு நிரிசவடிய தாகபாவையும், ருவான்வலிஸயா என்னும் மகாஸ்தூபியையும் கட்டினான். வட்டகமனு அரசன், அபய கிரிதாகபா, லங்கராமதாகபா என்ற இரண்டு தாகபாக்களைக் கட்டினான். மகாசேன சக்கரவர்த்தி ஜேதாவனராமதாகபா என்று ஒரு தாகபாவைக் கட்டினான். இதற்குப் பின்னர் யார் யாரோ எத்தனையோ தாகபாக்களைக் கட்டினார்கள். அந்தத் தாகபாக்கள் ஒன்றும் அவ்வளவு முக்கியமானவை இல்லை."

"இந்தத் தாகபாக்கள் எல்லாம் இப்பொழுது எங்கே இருக்கின்றன?"

"இதோ தெரிகிறதே! வானுற ஓங்கி நம்முடைய கண்களைக் கவருகின்றனவே! இவைகள்தான்!" என்று சொல்லி அங்கு தெரிந்த தாகபாக்களை எல்லாம் காட்டினார்.

இத் தாகபாக்களைப் பார்த்தபோது நான் எத்தனையோ நூறு ஆண்டுகளுக்கு முன்னால் சென்றுவிட்டேன். தேவனம் பிரிய திஸ்ஸன், வட்டகமனு, துட்டகமனு, மகாசேனன் முதலிய மன்னாதி மன்னர்களும், அவர்களுடைய மந்திரிகளும், மகாராணிகளும், இளவரசர்களும் அந்தத் தாகபாக்களைச் சுற்றி, சஞ்சரிக்க ஆரம்பித்து விட்டனர். குன்று போல் வட்ட வடிவமாக உயர்ந்து நிற்கும் அந்தத் தாகபாக்கள் தாமரை மலர்களைக் கொண்டு மூடப்பட்டிருந்தன. ஆமாம், வைசாக பௌர்ணமி போன்ற விசேஷ விழாக் காலங்களில் தாகபாக்களை அவ்வாறு தாமரை மலர் கொண்டுதான் மூடி அலங்கரித்திருப்பார்கள். இந்த அலங்கார தாகபாக்களுக்கு முன்னால் ஆயிரக்கணக்கான புத்த பிக்குகளும் அவர்களுடைய குருமார்களாகிய தேரோக்களும் அந்த நகரின் வீதிகளில் வலைய வர ஆரம்பித்தனர். லட்சக்கணக்கான நகர மக்கள் பலவித ஆடை ஆபரணங்களை அணிந்து கொண்டு அந்த வீதியில் குதூகலத்துடன் வந்து கொண்டிருந்தனர். நான் இந்தக் காட்சி இன்பத்தை அனுபவித்துக் கொண்டே என்னை மறந்து இருந்தேன்.

இலங்கை நண்பர் என்னைப் பிடித்து ஒரு உலுக்கு உலுக்கி, "நீங்கள் என்ன இந்த உலகில் இல்லையா?" என்றார்.

அப்பொழுது தான் எனக்குச் சுய உணர்வு வந்தது. நான் கண்ணை விழித்துப் பார்த்தேன். என்ன ஆச்சரியம்! நான் கனவு உலகில் எந்தக் காட்சியைக் கண்டேனோ அதே காட்சியைத்தான் நேரிலும் கண்டேன். கண்களை ஒரு முறை கசக்கி விட்டுக் கொண்டு பார்த்தேன். அதே வைசாக விழாக் காட்சிதான்! உடலை ஒரு தரம் கிள்ளி விட்டுக் கொண்டு பார்த்தேன்! அதே கோலாகலமான காட்சிதான்.

உண்மையாகவே அப்பொழுது அநுராதபுரத்து வீதிகளில் ஆயிரக்கணக்கான புத்த பிக்குகள் அணி அணியாகச் சென்றுகொண்டிருந்தனர். மஞ்சள் நிற ஆடைகளை அணிந்து கையிலே தாழங்குடைகளை எடுத்துக் கொண்டு அவர்கள் நடமாடிய காட்சி மறக்க முடியாத காட்சி. பல்லாயிரக்கணக்கான மக்கள் பலவிதமான ஆடைகளில் அங்குமிங்கும் அலைந்து கொண்டிருந்தனர். காலையில் வெறிச்சென்று இருந்த இந்த அநுராதபுரத்தில் அதற்குள் இத்தனை ஆயிரம் மக்களா என்று வியந்து போனேன். என் வியப்பை உணர்ந்து கொண்ட இலங்கை நண்பர் "ஆமாம். இக்கால புத்தரான ஜவாஹர்லால் நேரு அவர்கள் வரும் சமயம் நெருங்கி விட்டதல்லவா? இவ்வளவு மக்கள் கூட்டத்துக்கும் புத்த பிக்குகளின் கூட்டத்துக்கும் அதுதான் காரணம்" என்றார். (தொடரும்)

# அது "கெள & கேட்" பார்வை

குருகுருப்பான கண்கள், உறுதியான தேக அமைப்பு, நன்கு வளர்ச்சி பெற்ற எலும்புகளின்மேல் உள்ள வலுவான சதைப்பற்றுகளின் மூலம், நீங்கள் அது ஒரு "கெள அண்ட் கேட்" குழந்தை என எப்பொழுதும் நிச்சயமாகச் சொல்லலாம். எலும்புகளுக்கும் சதைகளுக்கும் நன்கு ஊட்டமளிக்கக்கூடிய ஓர் இயற்கையான உணவு "கெள அண்ட் கேட்" மிக எளிதில் ஜீரணம் ஆகக்கூடியது எப்பொழுதும் குழந்தை குதூகலமாகவும் திருப்தியுடன் காணப்படும்.

உங்கள் குழந்தைக்கு "கெள அண்ட் கேட்"டை வற்புறுத்திக் கேளுங்கள்.




5450

**COW & GATE MILK FOOD**

*The* FOOD *of* ROYAL BABIES

**ஜமுனா** கூறுகிறார்

**"வெண்மையிலே தனது தூய்மையைப் பிரதிபலிக்கும் எனது அழகுசாதனம் லக்ஸ் டாய்லெட் சோப்"**




ஆந்திர தேசத்தைப் பிறப்பிடமாகக் கொண்ட, தேர்ச்சிபெற்ற பாடகியான ஜமுனா, பல பாஷைகள் கற்றவர். 1952ல் அவர் தோன்றிய ஒரு தெலுங்குப் படம் விரைவிலேயே அவரை தென்னிந்திய படவுலகிலேயே ஓர் பிரபல நட்சத்திரமாக சிருஷ்டித்துவிட்டது. "படவுலகில் முன்னேறுவதற்குத் துணையாக, எனது சருமத்தை மிருதுவாகவும் இளமையோடும் வைத்திருக்கும் தூய, வெண்ணிற லக்ஸ் டாய்லெட் சோப்புக்கு நான் கடமைப்பட்டிருக்கிறேன்" என்கிறார் அவர்.

பூரண உடல் வனப்புக்கு
—பெரிய சைஸ் சோப்புக்கள் சிக்கனமானவை!

# லக்ஸ் டாய்லெட் சோப்

**சினிமா நட்சத்திரங்களின் அழகுசாதன சோப்**

LTS. 529-50 TM

# மாதர்குல திலகங்கள்



தமிழ் நாட்டில் பெண்மைக் குலத்தின் பெருமை சங்க காலம்தொட்டு என்றும் உயர்ந்தே விளங்கி வந்திருக்கிறது. கல்வி, அறிவு, வீரம், குடும்பப் பற்று, நாட்டுப் பற்று ஆகிய துறைகளில் தமிழகப் பெண்மணிகளின் சிறப்பு இயல்புகளை விவரிக்கும் செய்யுள்களைச் சங்க நூல்களிலும் அதன்பின் தோன்றிய மற்ற நூல்களிலும் ஏராளமாகக் காணலாம். சங்க காலத்தில் தோன்றியவர்தான் தமிழ்ப்பெரு மூதாட்டி ஒளவை. அவருக்குப் பின் இடைக்காலத்தில், மங்கையர்க்கரசியார், திலகவதியார் ஆகியவர்கள் தோன்றி நமது பெண் குலத்தின் பெருமையை வளர்த்தார்கள். இவர்களுடைய வரிசையில் வைத்துப் புகழ வேண்டியவர்தான் டாக்டர் ஸ்ரீமதி முத்துலட்சுமி ரெட்டி அம்மையார் அவர்களும். ''இந்தக் காலத்து ஒளவையார்'' என்று எல்லோராலும் போற்றப்படும் சென்னை ஒளவை அனாதை ஆசிரமத் தலைவி ஸ்ரீமதி முத்துலட்சுமி அவர்களுக்கு இப்போது வயது எழுபத்து ஒன்று ஆகின்றது.

இந்த முதுமை வயதிலும் அவர் எப்போதும் போலவே மாதர்குல நலனுக்கான சேவைகளில் ஈடுபட்டுப் பணியாற்றி வருவதைத் தமிழ்நாட்டின் பாக்கியவசமென்றேகூறலாம். டாக்டர் முத்துலட்சுமி அவர்கள் புதுக்கோட்டையில் பிறந்தவர். புதுக்கோட்டையில் இன்றும் கீர்த்தியுடன் விளங்கும் பாலையா ஆரம்பப் பள்ளியில் படித்தபின் தமது தந்தையின் ஊக்கத்தால் 1903-ம் ஆண்டு 'மெட்ரிகுலேஷன்' படிப்பில் தேர்வு பெற்றார். புதுக்கோட்டை மகாராஜா கல்லூரியில் படித்த முதல் பெண்மணி என்ற பெருமையும் அவரைச் சேரும்.

கல்லூரியில் ஒரு பெண்மணி படிப்பதென்பது அந்நாளில் ஒரு பெரிய அதிர்ச்சியாகவும், புரட்சியாகவும் கருதப்பட்டது. அப்போது ஏற்பட்ட அதிர்ச்சி, புரட்சிகளைப் பொருட்படுத்தாது முத்துலட்சுமி அவர்களின் தந்தை தமது புதல்விக்கு இன்னும் உயர்ந்த கல்வி புகட்ட உறுதி கொண்டார். அதன்படி சென்னை வைத்தியக் கல்லூரியில் முத்துலட்சுமி அவர்களைச் சேர்த்தார். வைத்தியக் கல்லூரியில் கல்வி பெற்ற முதலாவது பெண்மணி என்ற காரணத்தால் அங்கும் சலசலப்பே தோன்றிற்று. இதனால் மாணவி முத்துலட்சுமி பீதியடைந்து விடவில்லை. கருத்துடன் பயின்று உயர்தர வைத்தியக் கலைப்பட்டம் பெற்றார். அதுமுதல் அவருடைய புகழும் மேலோங்கத் தொடங்கிற்று. முதலாவது ஹிந்து ஸ்திரீ வைத்திய அதிகாரி, முதலாவது சட்டசபையாளர், முதலாவது அரசியல் பெண்கள் பிரதிநிதி என்று எல்லாம் முதலாவதாக விளங்கினார்.

1914-ல் டாக்டர் டி. சுந்தராரெட்டி அவர்களைத் திருமணம் புரிந்து கொண்டார். சென்னையிலுள்ள மாதர் சங்கங்களிலெல்லாம் கலந்துகொண்டு அவற்றின் சேவைகளில் பெரும் பங்கு கொண்டு வந்தார். அந்நாளைய சட்டசபை மூலம் அநேக சீர்திருத்தச் சட்டங்களை நிறைவேற்றி, மாதர் சமூகத்தின் நல்வாழ்வுக்குப் பாடுபட்டு வந்தார். 1930-ம் ஆண்டு அவருடைய சேவா குணத்தின் சிறந்த சாதனையாகத் தோன்றியதுதான் ''ஒளவை அனாதை ஆசிரமம்''. 'ஒளவை ஆசிரம'த்தின் அரிய பணிகளை அறியாதார் இருப்பதற்கில்லை. திக்கற்ற பெண்கள், ஸ்திரீகளுக்கு மட்டுமல்லாமல் உயர்தரமான பண்பாடுகளுடன் கல்விபெற விரும்பும் செல்வர்களான பெண்களுக்கும் அது ஒரு தாய் வீடாக விளங்கிக் கல்வித் தொண்டு புரிந்து வருகிறது.

டாக்டர் முத்துலட்சுமி அவர்கள் இந்த ஆசிரம சேவையோடு, மனித சமூகத்தின் பரம வைரியாகிய புற்றுநோய்க் கொடுமைகளைப் போக்குவதிலும் மிகப் பாடுபட்டு வருகிறார்கள். இதற்கென அடையாற்றில் அவர் நிறுவியுள்ள ''புற்று நோய் சிகித்சை இல்லம்'' தோன்றிச் சிறிதே காலத்துக்குள் நல்ல முறையில் பணியாற்றி வருவதைக் குறிப்பிட வேண்டும். ஸ்ரீமதி முத்துலட்சுமி அவர்களின் சேவையைப் பாராட்டி ஜனாதிபதி அவர்களால் சென்ற ஆண்டு அம்மையார் அவர்களுக்கு விருது வழங்கப்பட்டது அனைவரும் அறிந்ததே. ''சங்க காலத்துக்குப் பின் எங்கள் காலத்து ஒளவையார்'' என்று நாமெல்லோரும் புகழ்ந்துரைக்கும் வண்ணம், தமிழ் மாதர் குலத்துக்குத் தொண்டாற்றி வரும் ஸ்ரீமதி முத்துலட்சுமி அம்மையார் அவர்கள் நீடூழி வாழ வேண்டும்; அவர் தம் அறப்பணி மேலோங்கி வளர வேண்டும்.

# கிறிஸ்துவத் துறவி லாரென்ஸ்

ராஜாஜி



## 5

சமையல் அறை வேலை எனக்குப் பிடிக்கவே இல்லை. முதலில் ரொம்ப வெறுத்தேன். ஆனால் அதை ஆண்டவன் கைங்கரியமாகச் செய்து பழகிக்கொண்டு வந்தேன். அவன் கிருபையை வேண்டிக் கொண்டு பணி செய்தேன். அதனால் அந்த வேலையைச் சரிவரச் செய்ய முடிந்தது. பதினைந்து வருஷங்கள் இந்த வேலையைச் செய்தேன். கஷ்டமே தெரியவில்லை. அதன்பின் பாதரட்சை தைக்கும் வேலையில் போடப்பட்டேன். அது எனக்கு மிக்க சந்தோஷம் தந்தது.

ஆனாலும் ரொம்பப் பிடித்தமாயிருந்த அந்த வேலையிலிருந்து நீக்கப்பட எப்போதும் தயாராகவே யிருந்தேன். எந்த வேலையும் பகவான் கைங்கரியம் என்று அவனைப் பிரீதிப்படுத்தவே செய்வது என்பது என்னுடைய சங்கற்பமாக இருந்தபடியால் பிடித்த வேலை, பிடிக்காத வேலை என்கிற வித்தியாசம் வைத்துக் கொள்ளவில்லை.

பிரார்த்தனைக்கென்று மடத்தில் வேளை ஒதுக்கப்பட்டிருந்த போதிலும் எனக்குப் பிரார்த்தனை காலம் வேறு, தொழில் செய்யும் காலம் வேறு என்பது இல்லை. எல்லாம் பிரார்த்தனை காலமாகவே வைத்துக் கொண்டேன். எந்தக் கடுமையான தேகப் பணி செய்து கொண்டிருந்தாலும் கடவுள் நினைவு விட்டதில்லை. எந்த வேலையும் பிரார்த்தனையாகவே நடைபெறும்.

சஞ்சலமான நம்முடைய மனத்தில் தாமாக எழுகின்ற எண்ணங்களை நம்முடைய பரம சத்துரு. எல்லாவற்றையும் கெடுப்பது அதுவே. நம்முடைய கஷ்டங்கள் ஆரம்பிப்பது அதிலிருந்தே.

ஒரு எண்ணம் தோன்றியவுடன் 'அது பயனற்ற ஒரு எண்ணம், நாம் செய்து கொண்டிருக்கும் காரியத்துக்குச் சம்பந்தப்படாத எண்ணம், நம்முடைய வாழ்க்கைக் குறிக்கோளுக்கு அது ஒரு விதத்திலும் உதவாது, மோட்ச சாதகமான எண்ணம் அல்ல' என்று கண்டவுடன் அந்தச்சமயமே, ஆரம்பத்திலேயே அதை அகற்றி விட்டு பகவானோடு தோழமையும் கூட்டுறவும் கொள்வதில் உள்ளத்தைச் செலுத்த வேண்டும். அந்தக் கூட்டுறவே நம்மைக் கடைத்தேற்றும். வேறு எதுவும் பயன் அற்றது.

ஆரம்பத்தில் என்னுடைய பிரார்த்தனை எல்லாம், மனத்தை வந்து தாக்கும் பயனற்ற எண்ணங்களை அகற்றும் முயற்சியாகவே இருந்தது. மனம் இங்கு மங்கும் திரியும். திரும்பத் திரும்ப அதை பகவானோடு உரையாடுவதில் திருப்பி இழுத்துக் கொண்டு வருவதே என்னுடைய காரியமாக இருந்தது.

மற்றவர்களைப் போல் குறிப்பிட்ட மொழிகளை வைத்துப் பிரார்த்தனையைச் செய்து முடிக்க என்னால் ஆகவேயில்லை. முதன் முதலில் வாய் திறந்து பிரார்த்தனை செய்தேன். ஆனால் என்ன காரணமோ தெரியவில்லை. அது என்னால் ஆகவில்லை. அந்த முறையை விட்டு விட்டேன்.

# செலவு குறைய

# சுந்தரம் TVS புதுப்பித்த டயர்




பஸ், லாரி சொந்தக்காரர்கள்
செலவை குறைக்க முயல்வது அவசியம்.
பல செலவுகளில், டயர் செலவு மிக அதிக
மானது. டயர் தேய்ந்தால் புதிய டயர்
வாங்குவது சிக்கனமல்ல.
தேய்ந்து வழுக்கையான டயர்களை
சுந்தரம் (T V S) புதுப்பிக்கும்
முறையில் உருவாக்கி மீண்டும் உபயோ
கித்து சரிக்குச் சரி மிச்சம் காணலாம்.
பலகோடி மைல்கள் உபயோக
அனுபவத்தில் உருவானது

## சுந்தரம் TVS புதுப்பிக்கும் முறை

சிக்கனம் பெரிது
உழைப்பும் உயர்ந்தது.

PUBL

**சுந்தரம் இண்டஸ்ட்ரீஸ்
பிரைவேட் லிமிடெட்**
(டி. வி. எஸ். ஸ்தாபனம்)
புதுக்கோட்டை . சென்னை

TVSZ 95 TM

# எல்லோருக்கும் தெரியும்—




ஆகையால்தான்
மற்றெந்தத்
தேயிலையையும் விட
அதிகப்படியான ஜனங்கள்

**ப்ரூக் பாண்ட்**
**தேயிலையையே**

அருந்துகிறார்கள் !



# மாலவல்லியின் தியாகம்

அத்தியாயம் 24

## சாந்தியிடையே சலசலப்பு

சந்தகர் கதை சொல்ல ஆரம்பித்தார். "கலியுக ஆரம்பத்தில் சோமசர்மா என்று ஒரு அந்தணன் இருந்தான். அவன் சோதிட சாஸ்திரத்தில் மிகவும் தேர்ந்தவன். அவன் வாக்கு பலித்ததினால் நல்ல வருமானம் இருந்தும் நெடுநாள் வரையில் குழந்தை பாக்கியமே இல்லாமல் இருந்தது. அவன் பல வருஷங்கள் தவம் இருந்த பிறகு அவனுக்கு ஒரு அழகான பெண் குழந்தை பிறந்தது. ஒன்றுமில்லாதவனுக்கு ஒரு பெண் குழந்தையாவது பிறந்ததே யென்று அந்தக் குழந்தையைச் செல்வமாக வளர்த்து வந்தான். அந்தப் பெண்ணுக்கு விவாகம் செய்து வைத்தான்.

ஆனால் அவள் மங்கைப் பருவம் பெற்ற நேரம் கெட்ட நேரமாக இருந்ததால் அவள் புருஷனோடு ஓர் இரவு தான் வாழ்க்கை நடத்த முடியுமென்றும், அன்றே அவள் புருஷன் இறந்து, அவள் விதவையாகி விடுவாளென்றும் சோதிட சாஸ்திரத்தின் மூலம் அறிந்தான். அன்று அந்தப் பெண்ணின் கணவன் மனைவியோடு இன்பமாகக் காலங் கழிக்க மாமனார் வீட்டுக்கு வந்திருந்தான். சோதிடனாகிய அந்த அந்தணனுக்கு மனத்தில் திகில் ஏற்பட்டது. அவன் தன் பெண்ணைக் கூப்பிட்டு அன்று அவனுக்கு ஏற்பட இருக்கும் விதியைப் பற்றிச் சொல்லி அழுதான். அந்தப் பெண் மிகவும் மன வருத்தம் அடைந்தவளாக எப்படியாவது தன் கணவனை எமன் வாயிலிருந்து காப்பாற்றிவிட முடியாதா என்று எண்ணினாள்.

கி.ரா.கோபாலன்



அன்று இரவு நடுநிசியில் அவள் கணவன் ஏரிக் கரைக்குச் சென்று உலவி விட்டு வருவதாகச் சொல்லிக் கிளம்பினான். அந்தப் பெண் மனத்தில் பயங்கொண்டவளாக ஏரிக்கரைக்குப் போகவேண்டாமென்று தடுத்தாள். ஆனால் அவள் சொல்லைக் கேளாது அவன் புறப்பட்டு விட்டான். கணவனின் உயிரைப் பாதுகாக்க நினைத்த அந்தப் பெண்ணும் அவனுக்குத் தெரியாமல் பின்தொடர்ந்து போய் ஏரிக்கரையின் ஒரு மரத்தின் பின்னால் நின்று என்ன நடக்கிறது என்பதைப் பார்க்கத் தொடங்கினாள். அந்த வாலிபன் தாகத்தினால் தண்ணீர் அருந்த ஏரியில் இறங்கிய சமயம் முதலை ஒன்று வந்து அவன் கால்களைக் கவ்விக் கொண்டது. அதைப் பார்த்த அந்த வாலிபன் மிகவும் நயமான மொழியில், 'முதலையே! உன்னுடைய வயிற்றுக்கு ஆகாரமாக்கிக் கொள்ள வேண்டுமென்று என்னைப் பிடித்தாய். அதில் பிசகொன்றுமில்லை. தருமப்படி உனக்கு நான் ஆகாரமாக வேண்டியவன்தான். ஆனால் உனக்குச் சிறிது இரக்கமிருக்குமானால் என்னுடைய வேண்டுகோளை மட்டும் சற்றுக் கேளு. நான் புதிதாக மணமானவன். என்னுடைய மனைவியோடு ஒரு சில மணி நேரம் கூட நான் இன்பமாகக் கழிக்கவில்லை. அவளிடம் ஏரிக் கரை வரையில் போய் வருகிறேன் என்று சொல்லி வந்தவன் இங்கு உன் பிடியில் அகப்பட்டுக் கொண்டு விட்டேன். ஆதலால் நீ என்னைக் கொஞ்சம் விட்டால் நான் போய் என் மனைவியிடம் சொல்லி அவளுக்கும் சிறிது ஆறுதல் சொல்லிவிட்டு உன்னிடம் திரும்பி வந்து விடுகிறேன். மறுபடியும் நீ என்னை ஆகாரமாக்கிக்கொள்ளலாம்' என்று கூறினான்.

முதலை சிரித்தது. 'அடேடே! இப்படிப்பட்ட தரும குணம் உள்ளவனா நீ. முதலை வாயில் சிக்கிய எந்த மனிதனும் தப்பித்துக் கொள்ள நினைப்பானே தவிர அதற்கு ஆகாரமாக நினைக்க மாட்டான்' என்றது முதலை.

'என்னை நீ தவறாக நினைக்கிறாய். நான் வாக்குத் தவறமாட்டேன். நான் அப்படி வாக்குத் தவறினால் நீ எத்தகைய கொடூரமான பாவத்தை அனுபவிக்க வேண்டுமென்று சொல்கிறாயோ, நான் அத்தகைய பாபத்தை அனுபவிக்கக் கடவேன்' என்றான் அவ்வாலிபன்.

அந்த முதலை யோசித்துச் சிறிது மன இரக்கம் கொண்டு, 'சரி! உன் வார்த்தைகளை நம்பி உன்னை விட்டு விடுகிறேன். நீ சொல்லியபடி திரும்பி வராவிட்டால் எவன் ஒருவன் சாப்பிடும் போதே எரிந்து கொண்டிருக்கும்



தீபத்தை அணைக்கிறுனே, அவன் அடைய வேண்டிய பாபத்தை நீ அடைவாய்'' என்று கூறியது.

அந்த வாலிபனும் முதலையின் வார்த்தையை அங்கீகரித்துச் சீக்கிரமே திரும்புவதாகச் சொன்னதால் அதுவும் அவனை விட்டு விட்டது. மரத்தடியில் ஒளிந்து கொண்டிருந்த அவன் மனைவி அங்கு நடந்த விஷயங்களை அறிந்து அவனுக்கு முன்னதாகவே வீடு சென்று அவன் வருகைக்காகக் காத்திருந்தாள். அந்த அந்தண வாலிபன் நேராகத் தன் மனைவியிடம் சென்று அவனுக்கு ஆறுதல் கூறிவிட்டு முதலைக்குக் கொடுத்த வாக்குறுதியைச் சொல்லி அதை நிறைவேற்ற ஏரிக்கரைக்குக் கிளம்பினுன்.

அவன் மனைவி அவன் செல்வதைத் தடுக்கவில்லை. ஆனுல் தனது வேண்டுகோளுக்கு இணங்கி, இருண்ட இந்த நேரத்தில் ஒரு விளக்கையும் எடுத்துச் செல்லும்படி வேண்டினுள். அவனும் அதற்கு இணங்கி ஒரு விளக்கையும் எடுத்துக் கொண்டு ஏரிக்கரைக்குச் சென்றுன். அவன் மனைவி ஒரு சிறு கூடையை எடுத்துக் கொண்டு அவனுக்குத் தெரியாமல் அவனைப் பின் தொடர்ந்து முன்பு ஒளிந்திருந்த மரத்துக்குப் பின்னுல் சென்று ஒளிந்து கொண்டாள். அந்த வாலிபன் மறுபடியும் ஏரியில் இறங்கித் தன்னைப் பிடித்து உண்ணும்படி முதலையை வேண்டிக் கொண்டான். அந்த முதலையும் அவன் வாக்குறுதி தவருமல் வந்ததை யெண்ணி வியந்து அவனுடைய கால்களைக் கௌவி மெதுவாக விழுங்கத் தொடங்கியது. அந்த வாலிபன் கரையில்வைத்திருந்த தீபம் சுடர்விட்டுப் பிரகாசித்துக் கொண்டிருந்தது. முதலை அந்த வாலிபனை விழுங்க நினைக்கும் தருணம் அந்தப் பெண் தன் கையில் வைத்திருந்த கூடையைத் தீபத்தின்மீது கவிழ்த்தாள். கரையிலிருந்த விளக்கு அணையவும் வாலிபனின் காலைப் பிடித்திருந்த முதலை சட்டென்று அவன் கால்களை விட்டு விட்டது. இதைக் கண்டதும் அந்த வாலிபன் ஆச்சரியமடைந்தவனுய், 'முதலையே! ஏன் என் காலை விட்டு விட்டாய்?' என்று கேட்டான்.

'அப்பா! உனக்கொரு தருமம் எனக்கொரு தருமம் இல்லை. நான் உன்னை ஆகாரமாகச் சாப்பிடும் போது திடீரென்று இந்த விளக்கு அணைந்தது. அதனுல் ஏற்படும் பாவத்தை நான் அனுபவித்துத்தானே ஆக வேண்டும்? அதனுல்தான் உன்னைப் புசிக்க விரும்பவில்லை. விட்டு விட்டேன். நீ போகலாம்' என்றது. வாலிபன் எவ்வளவோ வேண்டிக் கொண்டும் முதலை அவனை ஆகாரமாக்கிக் கொள்ள மறுத்தது. வாலிபன்என்ன செய்வான்? மறுபடியும் வீட்டை அடைந்



தான். ஏரிக்கரையிலிருந்து முன்னதாகவே வந்திருந்த மனைவி அவனைச் சந்தோஷத்தோடு வரவேற்றாள். அவன் நடந்த விவரங்களையெல்லாம் மனைவியிடம் சொன்னான். அவன் மனைவியும் அவன் உயிரை மீட்ட தந்திரத்தை அவனிடம் சொன்னாள். இருவரும் சந்தோஷமாக இரவைக் கழித்தனர்.

தன்னுடைய மாப்பிள்ளை சோதிட சாஸ்திரப்படி இரவு இறந்திருப்பான் என்று முடிவு கட்டிய அந்தணன் பிரேதத்தை எடுக்க வேண்டிய சாமக்கிரியைகளை யெல்லாம் செய்துவைத்திருந்தான். ஆனால் அவன் எதிர்பாராதவண்ணம் அவனுடைய மகளும் மருமகனும் சந்தோஷத்தோடு வந்து அவனை வணங்கவே அவன் வியப்பு அடைந்தான். அவனுடைய மகள் விதியை எப்படி வென்றாள் என்பதைச் சொன்னாள். உடனே அவன் தன் தவறுதலை உணர்ந்து இந்தக் கலிகாலத்தில் சோதிடம் பலிக்காது என்று முடிவு கட்டிச் சோதிட சம்பந்தமான சுவடி முதலியவைகளையெல்லாம் மருமகனுக்காகக் கட்டி வைத்திருந்த பாடையில் வைத்துக் கட்டிக் கொண்டு போய்க் கொளுத்தினான்'' என்று சந்தகர் சொல்லி, ''ஆகையால் நீங்கள் செய்ய வேண்டியதெல்லாம் சோதிடம் கேட்டுக் காலத்தை வீணுக்கு வதைவிட முயற்சியின் மூலம் உங்கள் மனத்துக்கு ஆறுதல் தேடிக் கொள்ளும் வழியைக் கவனிக்க வேண்டியதுதான். நீங்கள் என்ன உதவி வேண்டினாலும் அதைச் செய்வதற்குச் சித்தமாயிருக்கிறேன்'' என்றார்.

பிருதிவீபதி சிரித்துக் கொண்டே, ''நீங்கள் இவ்வளவு கெட்டிக்காரராக இருப்பீர்கள் என்று நினைக்கவேயில்லை. நான் முதலில் மாலவல்லி எங்கே இருக்கிறாள் என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டும். அதோடு அவள் குற்றமற்றவள் என்பதை உலகத்துக்கு நிரூபிக்க வேண்டும்'' என்றான்.

''ஓகோ! உங்கள் காதலியின் பெயர் மாலவல்லியோ? மிகவும் அழகான பெயர். நீங்கள் கொஞ்சம்கூடக் கவலைப்பட வேண்டாம். நான் கூப்பிட்ட இடத்துக்கு என்னோடு வாருங்கள், போதும். உங்கள் மாலவல்லியைத் தேடித் தருகிறேன்'' என்றார் சந்தகர்.

''நான் உங்களோடு வேண்டுமானாலும் வருகிறேன். ஆனால் நான்தான் கங்கதேசத்து இளவரசன் பிருதிவீபதி என்று ஒருவருக்கும் தெரியக் கூடாது. உங்கள் நண்பர் பூதுகரைச் சந்திக்க நேர்ந்தால் கூட அவரிடம் நீங்கள் சொல்லிவிடக் கூடாது'' என்றான்.

''நான் சொல்ல மாட்டேன். ஆனால் பிறர் சொல்லாமலேயே எல்லாவற்றையும் தெரிந்து கொள்ளும் சாமர்த்தியம் பூதுகனுக்கு உண்டு என்பதை மாத்திரம் நீங்கள் மறந்து போய்விட வேண்டாம்'' என்றார் சந்தகர்.

பூம்புகாரிலிருந்து காஞ்சியை நோக்கிக் கங்கதேசத்து இளவரசன் பிருதிவீபதியும், கோடிச்சுவரத்துச் சோதிடர் சந்தகரும் இரண்டு குதிரைகளின் மீது ஏறி அமர்ந்து பிரயாணம் செய்தனர். வழியில் இருவரும் ஏதோ பேசிக் கொண்டே சென்றனர். பேச்சுவாக்கில் பிருதிவீபதி, சந்தகரிடம், ''உங்களுடைய அழைப்பின்பேரில் நான் காஞ்சிக்குப் புறப்பட்டேனே தவிர அங்கு போவதில் எவ்வளவோ சங்கடங்கள் இருக்கின்றன. காஞ்சியில் எல்லோரையும் எனக்குத் தெரியும். கங்கதேசத்து அரசகுமாரனாகிய நான் அரண்மனையில் விருந்தாளியாக இருக்க நேரும். நம்முடைய இஷ்டம்போல் பல இடங்களையும் சென்று பார்ப்பதில் சிறிது கஷ்டம் ஏற்படும் என்று நினைக்கிறேன்'' என்றான்.



''நீங்கள் அரண்மனை விருந்தினராக இருப்பதாலும் சில சாதகங்கள் இருக்கின்றன. அரசாங்கத்தில் பூதுகனைப் பற்றிய உண்மைகள் தெளிவானாலும் ஆகலாம். நாம் இருவரும் ஒரு குறிப்பிட்ட இடத்தில் சந்திப்பதாக வைத்துக் கொண்டால் நான் வெளியே ஊரில் சுற்றுவேன். நீங்கள் அரண்மனையிலிருந்தே உளவு தெரிந்துகொள்ளலாம். இப்படிச்செய்வதினால் காஞ்சியில் பூதுகன் இருக்குமிடம், அவன் இருக்கும் நிலை, உங்கள் காதலி மாலவல்லி இருக்கும் இடம் பற்றிய விவரங்களெல்லாம் தெரியலாம்'' என்றான்.

''நீங்கள் சொல்வதும் சரிதான். முக்கியமாக மாலவல்லியைப் பற்றிய விவரங்கள் தெரிந்து கொள்ள வேண்டுமென்றால் காஞ்சிக்குச் செல்ல வேண்டுமென்று எனக்குத் தோன்றியதுண்டு. ஏனென்றால் சம்பாதி வனத்துப் புத்த விஹாரத்தில் கொல்லப்பட்ட ரவிதாசன் என்பவன் காஞ்சியைச் சேர்ந்தவன். மாலவல்லியும் காஞ்சியைச் சேர்ந்தவள்.

அவள் அரண்மனையில் முக்கியமான பாடகியாக இருந்தாள்.''

''அப்படியா! பாவம்!! அப்படிப் பட்டவள் ஏன் பிக்ஷுணிக் கோலம் பூண வேண்டும்? ஏன் காஞ்சியை விட்டுக் காவிரிப்பூம் பட்டினம் வரவேண்டும்?'' என்று கேட்டார் சந்தகர்.

''அதற்கு எவ்வளவோ காரணங்கள் உண்டு. முக்கியமாக அவளுடைய பேரழகும் குணமும்தான் அவள் வாழ்க்கைக்கு இடையூறாக முளைத்தன. எந்நேரத்திலும் அவளுக்கு ஆபத்தை ஏற்படுத்தும் ஆடம்பர வாழ்க்கையிலிருந்து அவள் விடுதலை பெற நினைத்துத்தான் துறவற வாழ்க்கையை ஏற்றுக் கொண்டாள். இன்று வரையில் அவளுடைய மனம் இன்ப சுகங்களைக் கருதாமல் துறவற மார்க்கத்தில் தான் மிகவும் பற்றுதல் உள்ளதாக இருக்கிறது'' என்றான்.

''அவள் மனம் துறவற மார்க்கத்தில் பற்றுள்ளதாக இருக்கிறதென்றால் ஏன் உங்களோடு மாத்திரம் ரகசியத் தொடர்பு வைத்துக் கொள்ள வேண்டும்?'' என்று கேட்டார் சந்தகர்.

சந்தகர் இப்படியொரு கேள்வி கேட்பாரென்று பிருதிவீபதி எதிர்பார்த்ததுதான். அதற்குப் பதில் சொல்லவும் அவன் சித்தமாக இருந்தான். ''எனக்கும் அவளுக்கும் ரகசியத் தொடர்பு உண்டு என்பது உண்மையே. அவள் துறவு மார்க்கத்தில் புகுவதற்கு முன்னால் அவள் என்மீது அளவற்ற ஆசை வைத்திருந்தாள். அவள் ஒரு புத்த பிக்ஷுணியானபின் என்மீது வைத்துள்ள ஆசையையும் தியாகம் செய்யச் சித்தமாயிருக்கிறாள் என்ற ரகசியம் எனக்குத் தான் தெரியும். அவள் தன் ஆசையை எப்படியோ துறந்து விட்டாள். நான் அவள் மீது வைத்திருந்த மோகத்தைத் தான் என்னால் துறக்க முடியவில்லை'' என்று கூறினான்.

சந்தகர் சிரித்துக் கொண்டே, ''வேடிக்கையாயிருக்கிறதே? முதலில் உங்களிடம் ஆசை வைத்த பெண்ணுக்கு ஏன் திடீரென்று உலக வாழ்வில் ஒரு வெறுப்பு ஏற்பட்டு உங்களுடைய அன்பையும் நிராகரிக்கும் விபரீத நிலை வரவேண்டும்?'' என்று கேட்டார்.

''இந்த உலகத்தில் அன்பு, அழகு இவைகளுக்கு எதிரிடையாக இருக்கிறது, குலம், அந்தஸ்து, மதம் இவைகள். அவள் ஒரு சாதாரண அரண்மனைக் கணிகை. நான் ஒரு அரச குமாரன். அவள் ஒரு மதத்தைச் சேர்ந்தவள். நான் ஒரு மதத்தைச் சேர்ந்தவன். அவளிடம் நான் ஒரு அரசகுமாரன் என்ற அதிகாரத்தில் அவளை என் மோக விளையாட்

டுக் கருவிபோல் உபயோகித்துக்கொள்ள லாமே தவிர அவளை என்னுடைய மனைவி என்ற நிலையில் உயர்த்திவிட முடியாது. அவளை என்னுடைய மனைவி என்ற நிலையில் உயர்த்திவிட நான் நினைத்தாலும் என்னுடைய அரச பரம்பரைச் சட்ட திட்டங்கள் அதற்கு இடம்அளிக்கவில்லை. இதை உணர்ந்து கொண்ட அவள் மனைவியாகும் அருகதையற்ற நிலையில் என்னோடு தொடர்பு வைத்துக் கொள் வதை அறுத்துக் கொள்ள நினைத்தாள். ஆனால் என் மனம் அவளை எளிதாக விட்டுவிடுவதாகத் துணியவில்லை. என்னுடைய தகப்பனார் இருக்கும் வரையில் என்னுடைய மனைவியின் அந்தஸ்தில் அவளை வைப்பது கடினம்தான். ஆனால் அவர் இறந்தபிறகு என் செய்கை யாருக்குப் பிடிக்கா விட்டாலும், நான் துணிந்து அவளை மனைவியாக்கிக் கொண்டு விடலாம் என்றுதான் நான் நினைக்கிறேன். இதை உத்தேசித்து அவளுக்கு ஆறுதலான வார்த்தைகள் சொல்லி அவள் மனத்தைத் திருப்பலாமென்று நினைத்தேன். அவள் புத்த சேதியத்திலிருந்து திடீரென்று காணமல் போனதிலிருந்து அவளுக்கும் அங்கு நடந்த படுகொலைக்கும் சம்பந்தமிருப்பதுபோலக் காட்டினாலும் அவள் முக்கியமாக என்னுடைய அன்புப் பிணைப்பிலிருந்து விடுபட்டு எங்கேனும் தலைமறைவாக வாழ எண்ணியே போய் விட்டாள் என்றுதான் நான் நினைக்கிறேன். முக்கியமாக, இதில் சில சங்கடங்கள் இருக்கின்றன. பல்லவ சக்கரவர்த்தி நந்திவர்மனின் நட்பும் உறவும் எங்களுக்கு இருந்து கொண்டு வருகிறது. அவருடைய ஒன்றுவிட்ட சகோதரனை சிம்மவர்மன் தன்னுடைய ஒரே சகோதரியாகிய அமுதவல்லி என்பவளை எனக்கு மனைவியாக்கி விட வேண்டுமென நினைக்கிறான். பல்லவ மன்னரும் அவ் விஷயத்தில் ஆர்வம் காட்டி என் தந்தையாரின் சம்மதத்தைப் பெற்றிருக்கிறார். இந் நிலையில் நான் வேறொரு பெண்ணிடம் அதிலும் அரண்மனை ஊழியம் செய்யும் ஒரு கணிகையிடம் காதல் கொண்டிருக்கிறேன் என்று தெரிந்தால் என் தகப்பனார் மிகவும் விபரீதமாகக் கோபப்படுவார். அதோடு பல்லவ சக்கரவர்த்தியின் கோபத்தையும் நாங்கள் சம்பாதித்துக் கொள்ள நேரும். இதையெல்லாம் அறிந்த மாலவல்லி என்னுடைய நலனைக் கருதி என் மீது வைத்த அன்பைத் துறக்கச் சித்தமாகி விட்டாள். அதோடு சாதாரண அரண்மனைக் கணிகையாயிருந்த அவளைத் தன்னுடைய காம வலையில் சிக்க வைக்கத் திட்டமிட்டிருந்தான் சிம்மவர்மன். இத்தகைய பேராபத்தி

லிருந்து தப்பித்துக் கொள்ளும் நோக்கத்திலுைம் அவள் துறவறத்தை ஏற்றுக் கொள்ள நேர்ந்தது. அதற்கு புத்த சமயம்தான் இடம் அளித்தது'' என்று சொல்லி நிறுத்தினுன் பிருதிவிபதி.

''நீங்கள் ஜைன மதத்தைச் சேர்ந்தவர்கள். இந்த உன்னதமான மதத்தை உலகில் நிறுவக் காரணமா யிருந்த மகாவீரரின் முக்கியமான நோக்கம், இவ்வுலகில் சாதி மதங்களை அகற்றி ஜீவன்களை யெல்லாம் சமம் என்று கருத வேண்டும் என்பதுதான். அந்த மகா புருஷரின் சித்தாந்தங்களைக் கைக் கொண்டவர்கள் என்று சொல்லும் உம் தந்தையைப் போன்றவர்கள் இவ் விஷயத்தில் சாதி, சமய அந்தஸ்துகளைப் பார்ப்பதுதான் மிகவும் விநோதமாயிருக்கிறது'' என்றுர் சந்தகர்.

''அதை எண்ணித்தான் நானும் வருந்துகிறேன். பொதுவாக நினைக்கப் போனுல் சமயம் என்ற பிரிவுகளே இல்லாமல் எல்லாச் சமயப் பெரியோர்களின் நல்லஉபதேசங்களையும் பின்பற்றி உலகில் மனிதனுக வாழ வேண்டுமென்ற நோக்கத்தில் வாழ்ந்தால் இவ்வுலகமே சுவர்க்கமாகி விடும் என்று நான் நினைக்கிறேன்'' என்றுன் பிருதிவிபதி.

''இதை யெல்லாம் கண்டு தெளிந்துதான் பூதுகன் ஒரு நாஸ்திகனுகி விட்டானே என்னவோ?'' என்றுர் சந்தகர்.

''போகட்டும். நாம் இப்படியே மெதுவாகச் சென்றுல் இன்றைக்குள் காஞ்சியை அடைவது சிரமமாக இருக்கும். குதிரையைச் சிறிது துரிதமாகவே விட வேண்டியதுதான்'' என்றுன் பிருதிவிபதி.

''ஆம்! இரவு நெருங்குவதற்கு முன் காஞ்சியை அடைந்து விடுவதுதான் நல்லது'' என்று கூறிக் குதிரையைத் தட்டிவிட்டார் சந்தகர்.

குதிரைகள் அதிவேகமாகத்தான் வந்து கொண்டிருந்தன. ஆனுல் மாலைப் பொழுது கழிந்து எங்கும் இருள் நிறைந்துவிட்டது. அவர்கள் இருவரும் இரவுக்குள் காஞ்சியை அடைந்து விடலாம் என்று நினைத்தது நிறைவேறுது என்று கண்டு கொண்டனர். அப்பொழுது அவர்கள் வந்து கொண்டிருந்த இடம் மலைப் பிரதேசம். எங்கும் இருள் கவிந்திருந்தது. ஆங்காங்கு சிறு சிறு குன்றுகளைக் கடந்து அவர்கள் செல்ல வேண்டியதாயிற்று. இந்தச் சமயம் பிருதிவிபதியை விடச் சந்தகர் மிகவும் களைப்படைந்திருந்தார். அவர் அதிகம் குதிரையேறிப் பழகாதவர். அவர் மெதுவாகப் பிருதிவிபதியைப் பார்த்து, ''இன்னும் பத்து கல் தூரமாவது இருக்கும் காஞ்சி. இந்த இரவில் நாம் இங்கு எங்கேயாவது தங்கிச் சிரம பரிகாரம் செய்து கொண்டு விடியற் காலையில் புறப்படுவது தான் நல்லதா யிருக்கும் என்று நினைக்கிறேன். நான் மிகக் களைப்படைந்திருக்கிறேன். என் குதிரையும் மிகக் களைப்படைந்திருக்கிறது. உங்களைப் போலல்ல நான். உங்கள் குதிரையைப் போலல்ல என் குதிரை. இன்னும் சிறிது தூரம் பிரயாணம் செய்தால் அது நம்முடைய வார்த்தைகளைக் கேட்காமல் படுத்துக் கொண்டாலும் படுத்துக் கொண்டு விடும். அதிகமாக ஜீவ ஹிம்சை செய்ய எனக்கு விருப்பமில்லை என்பதை ஜைன சமயத்தைச் சேர்ந்த உங்களுக்கு நான் தெரிவித்துக் கொள்ளுகிறேன்'' என்றுர்.

பிருதிவிபதி 'களுக்'கென்று சிரித்தான். ''குத்தலாகப் பேசுவதில் நீங்கள் ரொம்ப சாமர்த்தியசாலி. நானும் ஜீவஹிம்சை செய்வதில் விருப்பமில்லாதவன்தான். அதோ சிறிது தூரத்தில் விளக்கு வெளிச்சம் தெரிவது போலிருக்கிறது. அங்கு போனுல் நாம் தங்குவதற்குக் கொஞ்சம் சௌகரியம் இருக்கலாம்'' என்று சொல்லிச் சிறிது தூரத்தில் விளக்கின் ஒளி தெரிந்த இடத்தை நோக்கிக் குதிரையைச் செலுத்தினுன்.

அவர்கள் அவ்விடத்தை அடைந்த போது சிறு சிறு குன்றுகளில் குடையப்பட்ட குகைக் குள்ளிருந்துதான் அந்த வெளிச்சம் வருகிறது என்பதை உணர்ந்து கொண்டனர். இப்படிப்பட்ட இடங்களில் துறவிகள்தான் வசிக்கக்கூடும் என்பதையும் அவர்கள் உணர்ந்தனர். எப்படியோ அந்த இரவுப்பொழுதை அங்கே கழிப்பதற்கு அது மிகவும் சௌகரியமான இடமாகத்தான் அவர்களுக்குப் பட்டது. அவர்கள் குதிரைகளிலிருந்து கீழே இறங்கி அங்கிருந்த மரத்தில் அவைகளைக் கட்டிவிட்டுச் சமீபத்திலிருந்த மலைக் குகையை நெருங்கினர். அக்குகையின் உள்ளிருந்து வந்த விளக்கின் ஒளி அவர்கள் அந்த மலைக் குகைக்குள் போக அனுகூலமாக இருந்தது. அவர்கள் குகைக்குள் நுழைந்ததும் நேர் எதிராகக் குடை நிழற் கீழ் அமர்ந்திருக்கும் மகாவீரரின் உருவமும் அவ்வுருவத்துக்கு இருபுறங்களிலும் ஜைனமதாச்சாரியார்



கள் இருவர் நிஷ்டையில் அமர்ந்திருப்பது போன்ற உருவமும் செதுக்கப்பட்டிருந்தன. அவ்வுருவங்களுக்கெதிராக அக்குகையின் மேல் தளத்தில் வட்டமான கமலம் போன்ற சக்கரம் ஒன்று செதுக்கப் பட்டிருந்தது. பக்கத்துச் சுவர்களிலே சாந்துகள் பூசப்பட்டு சமண சமய கதைகளைச் சித்திரிக்கும் வர்ண ஓவியங்கள் கண்கவரும் வண்ணம் வரையப்பட்டிருந்தன. அங்கிருந்த சிலா உருவங்களுக்குச் சமீபமாகக் கருங்கல் ஸ்தம்பத்தில் அமைக்கப்பட்ட தீபங்கள் எரிந்து கொண்டிருந்தன. இதைத் தவிர அங்கு மனிதர்கள் இருப்பதற்குரிய அடையாளமே இல்லை. பிருதிவீபதி அங்கிருந்த சிலா உருவங்களுக்குத் தன் வணக்கத்தைச் செலுத்தி விட்டு, ''நல்ல பாதுகாப்பான இடத்துக்குத்தான் வந்து சேர்ந்திருக்கிறோம்'' என்றான் சந்தகரைப் பார்த்து.

''ஆமாம்! இந்த உடலைமாத்திரமல்ல, இந்த உள்ளத்தையும் பாதுகாக்கும் இடத்துக்குத்தான் வந்து சேர்ந்திருக்கிறோம்'' என்றார் சந்தகர்.

''இந்த பரமேஷ்டிகளின் உருவம் நம் மனத்தை உருக்கவில்லையா?'' என்று கேட்டான் பிருதிவீபதி.

''ஆம். மனத்தை உருக்கத்தான் செய்கிறது. நாம் இந்த இடத்தில் இருக்கும் போது இந்த நிலை. வேறொரு இடத்தில் சௌந்தர்யம் உள்ள ஆரணங்குகளைக் கண்டு விட்டாலும் மனம் இப்படித்தான் உருகுகிறது. இதுதான் மனிதனுடைய மன நிலை'' என்றார் சந்தகர்.

பிருதிவீபதி சிரித்துக் கொண்டே, ''நீங்கள் சொல்வது முற்றிலும் உண்மையே'' என்றான்.

''சரி—இந்தக் குகைக்குள் எவ்வித மனித சஞ்சாரமும் இருப்பதாகத் தெரியவில்லை. இருப்பினும் இத் தீபங்கள் பிரகாசிப்பதி லிருந்து இங்கு யாரோ வந்து போய்க் கொண்டிருக்கிறார்கள் என்பது நன்றாய்த் தெரிகிறது. இங்கு யார் இருக்கப் போகிறார்கள்? யாரேனும் ஜைன சன்னியாசிகள் தான் இப்படிப் பட்ட இடங்களில் வசிப்பார்கள். எல்லா வற்றுக்கும் நாம் இங்கேயே படுத்துறங்கி விட்டு விடியற்காலையில் எழுந்து செல்வது நலமென்று நினைக்கிறேன்'' என்றார்.

''அதுதான் நல்லது'' என்று சொல்லிய வண்ணம் தன் உடலில் போர்த்தப் பட்டிருந்த பட்டு உத்தரீயத்தை எடுத்துத் தரையில் விரித்தான் பிருதிவீபதி. சந்தகர் தம் வெள்ளை வஸ்திரத்தை ஒரு புறம் விரித்துப் படுத்துக் கொண்டார். அந்தச் சமயம் இவர்களிருவருக்கும் இரவு போஜனத்தைப் பற்றிய கவலையே இல்லை. சந்தகருக்குப் பிரயாணத்தினால் ஏற்பட்ட அலுப்பினால் படுத்த உடனேயே தூக்கம் வந்து விட்டது. பிருதிவீபதிக்கோ தூக்கம் வரவில்லை. அவன் மனம் பலவிதமாகச் சுழன்றது. அன்று காலை அவன் சந்தகரைச் சந்தித்ததி லிருந்து சந்தகரின் குண விசேஷங்களையெண்ணி எண்ணி வியப்படைந்தான். எல்லா வகையிலும் சந்தகர் பூதுகனுக்கு ஏற்ற தோழர் என்றுதான் கருதினான். சந்தகரைப் போலவும் பூதுகனைப் போலவும் இரண்டு புத்திசாலியான நண்பர்கள் சேர்ந்தால் இந்த உலகத்தையே ஆக்கவும் அழிக்கவும் முடியும் என்று எண்ணினான். அவன் தூங்காமல் புரண்டு புரண்டு படுக்கும் போது, வெளியே சிறிது தூரத்திலிருந்து ஏதோ சத்தம் வருவதைக்கேட்டு எழுந்து உட்கார்ந்து கவனித்தான். யாரோ நான்கைந்து பேர்கள் கசமுச என்று பேசிக் கூச்சல் போடுவதுபோல் அவனுக்குத் தெரிந்தது. அந்தக் கூச்சலிடையே பெண்ணொருத்தி அழுவது போன்றும், அலறுவது போன்றும் சத்தம் கேட்டது. அதற்குமேலும் அவன் தாமதிக்க விரும்பவில்லை. 'என்ன கலவரமோ? யாருக்கு என்ன ஆபத்தோ?' என்றெண்ணியவனாகப் பரபரப்போடு சமீபத்தில் படுத்துக் கொண்டிருந்த சந்தகரைத் தட்டி எழுப்பினான். சந்தகர் திகைப்புற்று எழுந்து, ''என்ன?'' என்று கேட்டார்.

பிருதிவீபதி சிறிது தூரத்தில் ஏதோ கலவரம் நடப்பதை அவருக்குச் சொல்லி அரை குறை தூக்கத்திலிருந்த அவரையும் அழைத்துக்கொண்டு அக்குகையிலிருந்து வெளியே வந்தான். அவன் வெளியே வந்தபோது சற்றுத் தூரத்தில் கையில் தீப்பந்தங்களுடன் ஐந்தாறு பேர்கள் கூட்டமாக நின்றுகொண்டு ஏதோ கலவரம் செய்வதை அறிந்தான். அவர்களிடையே ஒரு பெண் இருப்பதும் அவனுக்குத் தெளிவாகத் தெரிந்தது. தூக்கக் கலக்கத்திலிருந்த சந்தகரும் கண்களைத் துடைத்துக் கொண்டு அங்கு என்ன நடக்கிறது என்பதை அறிந்து சிறிது விருவிருப்புடையவரானார்.

சந்தகரும் பிருதிவீபதியும் கலவரம் நடந்த இடத்தைநோக்கிச் செல்ல நினைக்கையில் அக்கூட்டத்திலிருந்த ஒருவன், 'ஐயோ! ஐயோ!' என்று அலறிக் கொண்டே நின்ற பெண்ணின் கைகளைப் பிடித்து இழுத்து அவளைப் பலவந்தமாகத் தூக்கிக் கொண்டு போவதையும், அவனிடமிருந்து அவளை மீட்க நினைத்த ஒருவரை மற்றுமுள்ள இருவர் அடித்துத் தள்ளிவிட்டுப் போனதையும் பார்த்தனர். பிருதிவீபதி அவசரமாகப் போய் மரத்திலிருந்த குதிரையை அவிழ்த்து அதன்மேல் ஏறி உட்கார்ந்து துரிதமாக செலுத்தத் தொடங்கினான். **(தொடரும்)**

## தனது கவுனை வெண்மையென அவள் நினைத்திருந்தாள்

## ஆனால், ரின்ஸோவினால் சலவை செய்த மீனாவின் கவுனைப் பார்த்ததும் பிரமித்தாள்!

**உண்மை! ரின்ஸோ அதிவெண்மையாக வெளுக்கிறது**

அற்புத சோப் பவுடரான ரின்ஸோவினால் சலவை செய்யுங்கள். உங்களுடைய வெண்மை ஆடைகள் கண்ணைப் பறிக்கும் வெண்மையாக ஆகிவிடும்! வர்ணத் துணிகளும் அதிகப் பிரகாசமடையும்! அடித்துத் துவைக்கவோ, அழுத்தித் தேய்க்கவோ வேண்டியதில்லை. ரின்ஸோவின் பிரமிக்கத்தக்க விறுவிறுப்பு வாய்ந்த நுரை எல்லா அழுக்குகளையும் கழுவிக் களைந்துவிடும். கண்ணைப் பறிக்கும் அத்தகைய அதிகப்படி வெண்மைக்கு நீங்கள் சேர்க்க வேண்டியது வேறொன்றுமில்லை. குடும்பத்தின் சகல சலவைகளுக்கும் ரின்ஸோ உபயோகியுங்கள்!




... சலவை செய்ய மிகவும் சுலபமானது

இந்த அற்புத சோப் பவுடர்

R. 7-50 TM

# கருணை வேண்டாம்



ஆர். சூடாமணி

ஹேமா சொன்னதைக் கேட்டு, சாவித்திரி அம்மாள் அதிர்ச்சியுற்றுத் திகைத்து நின்று விட்டாள்.

"என்னம்மா இது? நிஜமாகத்தான் சொல்கிறாயா?" என்றாள், பேச முடிந்தவுடன்.

"நிஜம்தான்!" ஹேமாவின் முகத்தில் துல்லிய முறுவல் பூத்தது.

"பின்னே, நீ முதலில் சொன்னது?"

"அதுதான் தவறென்று தீர்மானித்து விட்டேன்" என்றாள் ஹேமா.

சாவித்திரி அம்மாளுக்கு இந்தப் பதில் திருப்தியளிக்கவில்லை. ஒரு சரியான விளக்கம் தேவையாயிருந்தது. நாற்காலி ஒன்றை இழுத்துப் போட்டாள்.

"ஹேமா! உட்கார்ந்து கொண்டு எனக்கு எல்லாம் விவரமாய்ச் சொல்லு" என்றாள்.

ஹேமாவின் அழகிய முகத்தில் சந்தோஷம் நிறைந்திருந்தது.

* * *

"இன்று யார் ஹேமா வரப் போகிறார் உன்னைப் பார்க்க?" என்றாள் கோகிலா.

"பெரிய இடமா?" என்ற ஜானகியின் கேள்வியில் 'பாவம், பெரிய இடம் கைநழுவிப் போகிறதே இவளுக்கு' என்ற பரிதாபம் நன்கு தொனித்தது.

"இடமாவது இடம்! ஆண் இனத்தின் குணம் எங்கும் எப்போதும் ஒன்றுதான்" என்று தீர்ப்பளித்தாள் கமலா. அவள் கல்லூரியில் மனோதத்துவம் படிப்பவள்.

"ஏதோ இதுவாவது குதிர்ந்தால் சரி" என்று கிழவியைப் போல் நீட்டி முழக்கினாள் மங்களம். மூன்று குழந்தைகளுக்குத் தாயான பெருமையில், தன் இளம் மனப்பான்மையைப் பறி கொடுத்த தியாகி அவள்.

"உன் பாட்டுக்காகவே ஒருவர் வந்து உன்னைக் கொத்திக் கொண்டு போகாததுதான் ஆச்சரியம், ஹேமா! இருக்கட்டும், இன்று யார் வரப் போகிறார்கள்? அதைச் சொல் முதலில்!" என்றாள் ஜானகி.

ஹேமா சிநேகிதிகளிடையே சோர்ந்த முகத்துடன் நின்று கொண்டிருந்தாள். "யாரோ தெரியாது!" என்றாள்.

"பெயர் தெரியுமோ?" பெண் பார்க்க வரும் விஷயத்தையே தன் வாழ்வின் முதல் கலையாகப் பயின்றவள் கோகிலா. அவளுக்குக் கல்யாணம் நிச்சயமாகி யிருந்தது.

"நீலகண்டன்" என்றாள் ஹேமா.

"இவர் பெயரேதான்!" — கோகிலா கிணு கிணுத்தாள்.

ஹேமா பெருமூச்செறிந்தாள். அவள் பணக்காரி. சங்கீதத்தைப் பாடமாக எடுத்துக் கொண்டு பி. ஏ. தேறியவள். பார்க்கவும் நன்றாயிருப்பாள். வாய் திறந்து பாடினால் வாணியின் செல்விதான். ஆனால்..... குழந்தைப் பிராயத்தில் சகிகளுடன் ஓடிப் பிடித்து விளையாடும்போது ஒருதரம் கீழே விழுந்து ஆஸ்பத்திரியில் நான்கு வாரங்கள் இருந்தாள். பிறகு என்றைக்கும் காலைத் தாங்கித் தாங்கி நடக்க வேண்டிய நிலை ஏற்பட்டு விட்டது. இதனால் எத்தனையோ பையன்கள் வந்து பார்த்தும் அவளுக்குக் கல்யாணம் நிச்சயமாகவில்லை. எல்லோரும் 'பாவம், ஹேமா சுகம் இழந்தவள்!' என்று உரக்கப் பரிதாபப்பட்டார்கள். பெற்றோர்கள் அவளிடமே 'உன் வாழ்வு என்றைக்கு அம்மா சோபிக்கப் போகிறது?' என்று குறைப்படுவார்கள். அண்மையில் அவள் கேட்பதோ தன் சம வயதுப் பெண்களின் மணவாழ்வுச் சர்ச்சைகளும் கனவுகளும் தான். ஆகையால் உலகத்தில் நிமிர்ந்து நிற்க, ஒரு பெண்ணுக்கு இரண்டு கால்கள் போதா. நான்கு கால்கள் வேண்டும் என்ற

நம்பிக்கையில் ஹேமா வளர்ந்து பெரியவ ளானதில் ஆச்சரியம் எதுவும் இல்லே.

'' என் அதிருஷ்டம்தான் தெரியுமே, எங்கே இது நிச்சயமாகப் போகிறது? என் காலைப் பார்க்க முடியாத குருடன் எவனாவது தான் கடைசியில் வருவான்'' என்று ஹேமா வெறுத்துக் கொண்டாள்.

எல்லோரும் போனபின் ஹேமா தனியாய் நின்றாள். அவள் முகத்தில் வருத்தம் தேங்கி யிருந்தது. தன்தோழிகள் எல்லோரும் அதிர்ஷ் டசாலிகள். ஆனால் அவள்?...இந்த நீலகண் டன் மட்டும் எப்படி இருக்கப் போகிறான்? காப்பி பலகாரம் சாப்பிடும்போது வீட்டைக் கண்ணோட்டம் விட்டுப் 'பெரிய இடம்' என்று திருப்தியுறுவான். பெண்ணின் அழகைக் கண்டு பல்லே இளிப்பான். பின் அவள் நடை யைக் கண்டு முகத்தை அருவருப்போடு திருப் பிக் கொள்வான். சுவரைப் பார்த்துக் கொண்டே அவளுடைய இனிய கானத்தை யும் அதில் துடிக்கும் ஏக்கத்தையும் அனு பவித்து விட்டு, 'கடிதம் எழுதுகிறேன்' என்று போய்விடுவான் — பிறகு வரமாட்டான்.

ஹேமாவின் உள்ளத்தில் திடீரென்று அசதி யும் மயக்கமும் சூழ்ந்தன.

'' ஹேமா!''

தன் கல்லூரி பிரின்ஸிபால் சாவித்திரி அம்மாளுடைய குரலைக் கேட்டு அவள் பலவந்தமாய்ப் புன்னகை செய்துகொண்டே, '' வாருங்கள், உட்காருங்கள்!'' என்றாள்.

சாவித்திரி அம்மாள் உட்கார்ந்தபடியே, '' இன்று மாலே யாரோ வரப் போவதாய்க் கேள்விப்பட்டேன்'' என்று நிறுத்தினாள்.

''ஆமாம்....'' ஹேமா தன் கண்ணீரை மறைக்க, சட்டென்று முகத்தைத் திருப்பி மேஜையின் விரிப்பைச் சரி செய்வது போல் நடிக்கலானாள்.

'' ஒரு...ஒரு விஷயம் சொல்ல வேண்டும்.''

'' சொல்லுங்கள்!''

அந்த அம்மாள் சொன்ன விஷயம் இது தான். தலைநகரின் ஒரு பிரசித்தமான சங் கீத ஸ்தாபனத்தின் ஆதரவில் முன்னணி வித்வான்களின் ஒரு கோஷ்டி இரண்டு வாரங்களுக்குப் பின் வெளிநாடுகளுக்குப் போய்ச் சுற்றுப்பிரயாணம் செய்து வரப்போ கிறது. தென்னிந்தியபிரபலபாடகர்ராமசர்மா வும் அந்தக் கோஷ்டியில் இருந்தார். அவரை அறிந்திருந்த சாவித்திரி அம்மாள் அவரிடம் ஹேமாவைப் பற்றிய எல்லா விவரங்களேயும் சொல்லி அவள் சங்கீதமேதையை விவரித்து அவளுக்கு ஒரு சந்தர்ப்பம் அளிக்கும்படி வேண்டிக் கொண்டிருந்தாள். அவள் ரஸிகத் தன்மையின் தரத்தில் மதிப்புக் கொண்டிருந்த சர்மா ஹேமாவைத் தம் மாணவி என்று சொல்லி அழைத்துப் போவதற்குச் சம்மதித் திருந்தார்.

''போகிறாயா, ஹேமா! இதில் நல்ல பெயர் வாங்கிவிட்டால் பிறகு உனக்கு நம் ஊரிலும் அந்தஸ்து உயரும். அவசியமானால் சங்கீதத்தையே உன்னுடைய வாழ்க்கையாக அமைத்துக் கொள்ளவும் இது தகுந்த அஸ்தி வாரமாகலாம்....''

அவள் சொல்வது ஹேமாவுக்குப் புரிந்தது. வான் தவம்தான். கல்யாணம் இல்லேயானால் அவளுக்கு வேறொரு வாழ்க்கை வேண்டாமா? பொங்கி வந்த கண்ணீரை அடக்கிக்கொண்டு அவள் திடமாகப் பேசினாள்.

''ஆகட்டும், அம்மா! இவ்வளவு தூரம் நீங்கள் என் விஷயத்தில்....''

அந்த அம்மாள்போன பிறகு ஹேமா வெறும் வெளியைப் பார்த்துக் கொண்டு நின்றாள். இரண்டு புருக்கள் மரத்தின் கிளேமேல் பறந்து



வந்து அமர்ந்தன. ஜோடிப் புறா. உலகத்தில் எது ஜோடியில்லாது இருக்கிறது? மனிதர்களிலும் ஜீவஜந்துக்களிலும் மட்டுமின்றி இயற்கையிலும் எல்லாம் இணைப் பெயர்கள் தாம். இரவு - பகல், கடல் - மதி, வானம் - வையம்....ஏன், வாழ்க்கையும் மரணமும் கூட ஒரு ஆதர்ச ஜோடிதான். தான் மட்டுமே முடிவற்ற தனிமையில் ஆழ்ந்து விட்டது போன்ற உணர்ச்சியில் அவளுடைய இதயம் வெடித்து விம்மியது.

* * *

ஹேமாவின் முகத்தில் சந்தோஷம் நிறைந்திருந்தது. சாவித்திரி அம்மாள் இழுத்து வைத்த நாற்காலியில் அமர்ந்துகொண்டாள். அந்த அம்மாள் முகத்தில் படபடப்பு இருந்தாலும் ஹேமாவின் மகிழ்ச்சியைப்பார்த்து 'எதுவானாலும் விஷயம் நல்லதுக்குத்தான் இருக்கும்' என்று தைரியமாயிருந்தாள்.

"முன்பு ஒன்று சொன்னாய். அதே சங்கீத விஷயமாக இப்போது வேறு ஒன்று சொல்கிறாயே, ஹேமா?"

"ஆமாம்!"

"ஏன்?"




"அதுவா? நீலகண்டன்வந்தார்."

"அதுதான் தெரியுமே, பிறகு? உன் மாற்றத்துக்குக் காரணம்? அவர் கடைசியில் என்ன சொன்னார்?"

நீலகண்டன் வந்தான். கம்பீரமாய், கண்ணுக்குக் குளிர்ச்சியாய், கருணை முகத்தினனாய் வந்தான். ஹேமாவின் உள்ளம் உள்ளேயே வெதும்பியது. இப்படிப் பட்ட ஒருவனோடு தன் வாழ்வு இணைந்து செல்ல முடியுமானால்...

நீலகண்டன் போகும் பொழுது கடிதம் எழுதுகிறேன்' என்று சொல்லவில்லை. மறுநாள் காலை ஹேமாவின் தந்தை அச்சத்துடன் அவன் வீட்டுக்குப் போனார். ஆனந்தத்துடன் திரும்பி வந்தார்.

ஹேமா அடுத்த நாள் சாவித்திரி அம்மாளைக் கண்டு தான் சங்கீத கோஷ்டியுடன் செல்லவில்லையென்று கூறி விட்டாள்.

அந்த அம்மாளுக்கு அதிர்ச்சி தாங்கவில்லை.

"ஏன் அம்மா! அப்படிச் சொல்கிறாய்?"

ஹேமா பதில் சொல்லவில்லை. உள்ளே நிற்காமல் துள்ளிய ஆனந்தத்தைச் சமாளித்துக் கொண்டு மௌனமாய் நின்றாள்.

"சொல்லு ஹேமா..."

ஹேமாவின் கன்னங்கள் சிவந்தன.

"எனக்குக் கல்யாணம் நிச்சயமாகியிருக்கிறது!" என்றாள் ஆனந்தத்தோடு.

* * *

அந்த ஒரு விஷயம் வாழ்வின் சுவையையே அப்படி மாற்ற முடியுமென்று ஹேமா கற்பனை கூடச் செய்யவில்லை. பகலும் இரவும் அந்த ஒரே இன்பம் அவள் உயிரில் இழைந்தோடியது. வேளைக்கு ஒரு அலங்காரம் செய்து கொண்டாள். வேளைக்கு ஒரு புடவையாய் அணிந்து அழகு பார்த்தாள்.

அன்று கண்ணாடியில் அவள் ரோஜா நிறப் புடவையில் ஒளிர்ந்த தன் அழகைப் பார்த்து அநுபவித்துக் கொண்டிருந்தபோது பின்னால் காலடிச் சத்தம் கேட்டுச் சட்டென்று திரும்பிப் பார்த்தாள். நீலகண்டன் புன்னகையோடு நின்று கொண்டிருந்தான். அவள் முகம் கணத்தில் சிவந்து விட்டது.

"நான் அதற்குள் உன்னைத் தேடி வந்து விட்டேனே என்று பார்க்கிறாயா, ஹேமா?"

அவள் தலை நிமிர வில்லை.

"இன்னும் பதினைந்து நாட்களில் ஒரு நல்ல முகூர்த்தம் இருக்கிறதாம். அதையே வைத்துக் கொள்ள உன் அப்பாவுக்குச் சம்மதமா என்று கேட்க வந்தேன். கேட்கட்டுமா?"

இப்போதும் அவள் பதில் சொல்லவில்லை. உடலோடு உள்ளமும் புல்லரித்தது.

"கேட்கட்டுமா என்று கேட்கிறேனே!"

"...என்னைக் கேட்டால்?..." அவள் குரல் ஒலிக்கவில்லை.

"தாமரையைப் பற்றித் தடாகத்தைத் தானே கேட்க வேண்டும்?" என்று கூறி விட்டு அவன் சிரித்தான்.

"ஆனால் தடாகத்தைக் கேட்டுக் கொண்டு தாமரை மலர்வதில்லையே?"

"நீ பாடகி என்று தெரியும். கவியாகவும் இருக்கிறாயே!"

"நீங்கள் ஆரம்பித்ததுதானே!"

"உனக்கு ரோஜா நிறம் நன்றாயிருக்கிறது. நாம் வீடு வைக்கும் போது 'கலர் ஸ்கீம்' ரோஜா நிறமாகவே செய்து விடலாம். எனக்கும் ரோஜா என்றால் உயிர்."

"அதனால்தான் போலிருக்கிறது. நீங்கள் முன்னைப் பொருட்படுத்தவில்லை."

அவன் அவளுடைய தாழ்ந்த முகத்தைக் கனிவோடு பார்த்தான். அவள் கண்கள் கலங்கிப் போயிருந்தன.

"ஆண்டவனுக்கு முன்னும் பிரீதியா யிரா விட்டால் அதை ஏன் படைத்திருக்கப் போகி றார், ஹேமா!"

"அதற்காக முன்னை எடுத்து அணிவார் களா?" அவள் அவனை நேராகப் பார்த்தாள். பிறகு, "ஒன்று கேட்கிறேன், நிஜமான பதில் சொல்கிறீர்களா?" என்று கேட்டாள்.

"கேள்!"

"என்னை ஏன் மணக்கச் சம்மதித்தீர்கள்?"

அவன் சற்று நேரம் பேசாமல் அவளைப் பார்த்தான். இருவர் கண்களும் ஒருவர் மனத்தை ஒருவர் ஊடுருவிப் பார்க்கும் முயற்சியில் ஒளிர்ந்தன.

"பதில் சொல்ல மாட்டீர்களா?"

"இப்படி ஒரு அசட்டுக் கேள்வி கேட்டால் என்ன பதில் சொல்லுவது? பெண் பார்த்துச் சம்மதம் தெரிவிப்பது நம் ஊரில் வழக்கம் தானென்று நினைத்தேன். இல்லை யென் கிறாயா?" என்றான்.

"பரிகாசம் செய்யாமல் சொல்லுங்கள்?"

"உன்னை எனக்குப் பிடித்திருக்கக் கூடாதா?" என்றான் அவன்.

"உங்களுக்கு முன் என்னைப் பலர் பார்த்து மறுத்திருக்கிறார்கள்!"

"தெரியும்!"

"பின் நீங்கள் சம்மதித்தது எப்படி? குருட னல்லவே நீங்கள்?"

"இல்லை. அவர்கள்தான் குருடர்கள்!"

ஹேமாவின் உணர்வெங்கும் ஒரு இன்ப அலை படர்ந்து சென்றது.

"உங்கள் மனைவி என்ற ஹோதாவில் வெளியில் எங்கும் சமமாய் வந்து எல்லோ ரோடும் நான் கலக்க முடியுமா?"

"ஏன் முடியாது?"

"எனக்கே அவமானமா யிருக்காதா?"

"உன்னை என் மூலமாய்ப் பார்! அவ மானமா யிராது!"

"நான் காலைச் சாய்த்துச் சாய்த்து நடந்து வருவேனே..."

"பூ கூடச் செடி மீது சாய்ந்துதான் இருக் கிறது!" என்றான் அவன்.

"நான் உங்களுக்கு ஏற்றவள்தானா? நீங்கள் உயர்ந்தவர். ஊனமுள்ள நான் தாழ்ந்த வள்தான்!" என்றாள் ஹேமா.

"சங்கீத விதுஷியாயிற்றே நீ! உயர்ந்தும் தாழ்ந்தும் வருகிற சுர அமைப்புத்தான் பரி பூரணமான கானம் என்பதை நீதானே மிக நன்றாய் அறிந்திருக்க வேண்டும்?"

இன்ப மயமான ஒரு பொற் கனவுக்குள் தான் புகுந்து நிற்பதுபோல் ஹேமாவின் தேக மெல்லாம் புளகித்தது. அவன் அன்பின் ஆழத்தில் தன் வாழ்வு முத்தாக விளங்கப் போவதை நினைத்தபோது, முன்பு தான் அனுபவித்த துன்பமும் ஏக்கமும் தனிமையும் உண்மையே யல்ல, சூரியன் உதிக்கு முன் இருள் காட்டும் போலி மருட்சிகள் என்றே அவளுக்குத் தோன்றியது. 'உடலை அவர் பார்க்கவில்லை, ஒரு விநாடியிலேயே உள்ளத் தைப் பார்த்து அன்பு கொண்டு விட்டார்' என்ற எண்ணம் தேன் ஊற்றாக அவள் இதயத்தை நனைத்தது. அந்த அன்புப் பெருக்கின் நிறைவில் அற்பமான உடற் குறை களெல்லாம் ஒரு பொருளாக நிற்கவில்லை.

பேரின்ப வெள்ளத்தில் ஆத்மா திளைக்க அவனை ஏறிட்டுப் பார்த்தாள் ஹேமா.

* * *

"அந்தப் பையனின் தங்கைக்கு இந்தப் புடவையை எடுத்திருக்கிறாயே, அவளுக்குப் பிடித்திருக்கிறதா என்று காட்டி விட்டுவா."

கல்யாண ஜவுளியைப் பரப்பி அவள் தந்தை தம் மனைவியிடம் சொல்லிக்கொண்டிருந்தார்.

அந்த அம்மாள் பதில் சொல்வதற்குள், அருகிலிருந்த ஹேமா ஆவலாக, "அம்மாவுக்கு நிறைய வேலை இருக்கிறது, அப்பா. நான் போய்க் காட்டிவிட்டு வருகிறேனே!" என் றாள். எந்தக் காரணத்தைச் சொல்லிக் கொண்டாவது நீலகண்டனைப் போய்ப் பார்த்துவர வேண்டும் என்ற ஆவல் மிகுந் திருந்தது. அவனை நினைத்து நெஞ்சு பூரிக்காத நேரமெல்லாம் வீண்பொழுதாகத் தோன் றும் நிலைக்கு அவள் வந்து விட்டாள்.

"சரி! கொண்டு போய்க் காட்டிவிட்டு வா. அவளுக்குப் பிடிக்கா விட்டால் வேறு புடவை எடுத்து விடலாம்."

ஹேமா இதைக் காதில் வாங்கிக் கொள் ளவே யில்லை. குறிப்பிட்ட புடவையோடு தனக்காக வாங்கியிருந்த ரோஜா வர்ண நகடிப் புடவையையும் சேர்த்து எடுத்துக் கொண்டாள், அவன் வாயைக் கிளற.

நீலகண்டனின் தங்கை சரளா புடவை யைப் பார்த்து, "நன்றாயிருக்கிறதே! என் னைத் தனியாய் அபிப்பிராயம் கேட்க வேண் டுமா என்ன?" என்றாள்.

"எதற்கும் அபிப்பிராயம் வேண்டாமா?" என்றாள் ஹேமா, ரோஜா நிறப் புடவையை யும் நீலகண்டனையும் பார்த்துக் கொண்டே.

"புடவைக்கென்ன, அணிந்து கொள்பவர் அழகு செய்வார்கள்" என்றான் நீலகண்டன். ஹேமாவின் மனம் களிப்பினால் சிலிர்த்தது.

"போடா நீ....அவன் கிடக்கிறான். ஹேமா புடவையே ரொம்ப நன்றாயிருக்கிறது. உன் அப்பாவிடம் சொல்லு."

புடவைகளுடன் வீட்டுக்குக் கிளம்பிய ஹேமா நீலகண்டனைப் பார்த்து அவன் புன் னகையைப் பெற்றுக் கொண்டு அவனை விட் டுச் செல்ல மனம் வராமல் அறையை விட்டு வெளியே வந்தாள்.

அறைக்குள் அண்ணனுக்கும் தங்கைக்கும் ஒரு சம்பாஷணை.

"உன்னுடைய இஷ்டம் போலவேதான் கடைசியில்....."

"சரிதான் சரளா, திருப்பித் திருப்பிச் சொல்வானேன்? என்றால் அவளிடம் பரி தாபம் கொள்ளாமல் இருக்க முடியவில்லை. எத்தனையோ பேர்கள் மறுத்தார்கள். அவ ளுக்கு ஏக்கம். பார்த்தவுடனேயே தெரிந் தது. கேள்விப்பட்டும் இருந்தேன்."

"அதற்காக உன்னையே பலியாய்...."

"நான் மனத்தோடு போராடத்தான் செய்தேன். என் பரிதாபம் கடைசியில் ஜயித்து விட்டது. அன்பு இல்லாவிட்டால் என்ன? ஒரு ஜீவனுக்கு என்னால் சந்தோஷம் வருமல்லவா?...."

மறுநாள் பொழுது அழகாக மலர்ந்தது. இருளின் துன்பத்தைப் பிளந்து கொண்டு கதிரவன் நிர்மலமாய் உதித்தான். ஹேமா அந்த இளம் ஒளியில நின்றிருந்தாள். உள்ளத்தில் நிறைவு இருந்தது.

"சூரியனின் ஒளியில் நீயே ஒரு ரோஜாவைப் போல் தோன்றுகிறாய்!" என்று கூறிக் கொண்டே நீலகண்டன் அவள் அருகில் வந்தான். அவன் கண்களில் கருணை வழிந்தது.

ஹேமா சாந்தமாய்த் தலைநிமிர்ந்தாள். "இனியும் இப்படிப் பேசாதீர்கள். அன்பின் மையைவிடப் போலி அன்பு இன்னும் பயங்கரமானதல்லவா?" என்றாள், உள்ள நிறைவுடன். அவள் பார்வையில் இப்போது தாபம் இல்லை, தெளிவு இருந்தது.

"ஹேமா! இதென்ன நீ திடீரென்று..."

"நேற்றுக் காலை நீங்கள் உங்கள் தங்கையிடம் சொல்லிக் கொண்டிருந்ததை நான் தற்செயலாகக் கேட்க நேர்ந்தது. உங்களை இன்னொரு முறை பார்க்க மனம் அடித்துக் கொண்டது. 'உங்கள் அம்மாவுக்கு எது மாதிரி புடவை பிடிக்கும்' என்று ஒரு கேள்வியைச் சாக்காக உருவாக்கிக் கொண்டு அறைப் பக்கம் மறுபடியும் வந்தேன்...."

அவன் சிலைபோல நின்றான்.

ஒரு நிமிஷ மௌனத்துக்குப் பின் அவள் அமைதியாய்ப் பேசினாள்: "இவ்வளவு பெரிய தியாகத்தை என் மேல் சுமத்தாதீர்கள். நான் நசுங்கி விடுவேன், தழைக்க மாட்டேன்."

"ஹேமா!..." அவன் பதறினான்.

அவள் உள்ளத்தில் பதற்றமில்லை. "எனக்கு இப்போது மனம் தெளிந்து விட்டது. நான் சில நாட்கள் அனுபவித்த தூய்மையான அபரிமிதமான ஆனந்தத்தினாலோ அல்லது என் உண்மை நிலையை உங்கள் மூலம் அறிந்தேனே, அந்த ஆத்ம ஞானத்தினாலோ, என் மனத்தின் ஏக்கம் மறைந்து நிம்மதி பிறந்து விட்டது. கல்யாணம் எனக்கு வேண்டாம் என்ற என் தீர்மானம் என்னை இனி துயரத்தில் ஆழ்த்தாது."

"அவசரப்படாதே, ஹேமா! கல்யாணம் நடக்கட்டும், பின் அன்பு தானாகவே...."

"நான் நினைத்ததுபோல் அன்பு மட்டும் இருந்திருந்தால்?... உங்கள் பரிதாபம் என் ஆத்ம கௌரவத்தைச் சிதைக்கிறது. கணவன் மனைவி என்பவர்கள் சமமானவர்கள் இல்லையா? கருணையினால் உங்கள் வாழ்வை எனக்காகக் கொடுக்கிறேன் என்கிறீர்கள், கொடையாளியும் கைநீட்டுபவரும் என்றாவது சமமாக முடியுமா?"

"அதற்காக உன் தனிமை..."

"வாழ்க்கை - மரணம் கூட ஜோடியாயிற்றே யென்று ஒரு சமயம் நான் நினைத்ததுண்டு. ஆனால் அவற்றைப் படைத்தவன் தனியன்தான், ஒருவன்தான்....பரிதாபத்தைப் பெற்றுக் கொள்ள நான் இங்கு இல்லை. என்னிடமும் கொடுப்பதற்கு ஒரு பொருள் இருக்கிறது. அதுதான் என் கலை."

* * *

"அதுதான் தெரியுமே, பிறகு? உன் மனமாற்றத்துக்குக் காரணம்? அவர் கடைசியில் என்ன சொன்னார்?" என்ற சாவித்திரி அம்மாளின் குரல் பொறுமையற்றிருந்தது.

ஹேமாவின் புன்னகை நிலவைப் போல் குளிர்ச்சியாயிருந்தது. "அவர் கருணையே வடிவானவர்...."

"பின்னே அவரை மணந்து கொண்டால் என்ன உனக்கு? திடீரென்று வந்து 'கல்யாணம் வேண்டாம், வித்வான்களோடு வெளியூர் போகிறேன்' என்கிறாயே?"

ஹேமாவின் வடிவத்தில், தன்னோடு தான் ஒன்றியிருக்கும் நிறைவின் ஆழ்ந்த ஆனந்தம் சுடர் விட்டது.

"யோசிக்காமல் சொல்வேனா?"

"இதுதான் உன் முடிவா?"

"ஆமாம்."

சாவித்திரி அம்மாள் அவளைக் கொஞ்ச நேரம் ஒன்றும் புரியாமல் பார்த்துக்கொண்டிருந்தாள். கடைசியில், "சரி, உன் இஷ்டம், அப்படியே! சர்மாவிடம் சொல்லி ஏற்பாடு செய்து வருகிறேன்" என்றாள்.

ஹேமாவின் இதய ஒளி அவள் உதடுகளில் புன்னகையாய்ப் பெருகி ஓடியது.

"அப்போ சரி, மிகவும் வந்தனம். இனி நான் விடைபெற்றுக் கொள்ளட்டுமா?" என்று கைகளை இணைத்து நமஸ்காரம் செய்தவாறே அவள் நாற்காலியினின்று எழுந்தாள்.



ஒவ்வொரு மர்பி ரேடியோ செட்டும் உங்கள்
இல்லத்துக்கு மேலும் அதிக பெருமையை
அளிக்கும்படி அமைக்கப்பட்டுள்ளது.....
உங்களுக்கு இடைபமனிசதுப் பல்லாண்டுகள்
சேவை செய்யும்படி தயாரிக்கப்பட்டுள்ளது.

*All keyed up!*

# மர்பி

இன்று எல்லோராலும் விரும்பப்படும் ரேடியோ!



**SOUNDS GOOD!**
**LOOKS GOOD!**

மாடல் 254

- 6 வால்வ் 4 பாண்ட் • AC & AC/DC (இரு மாடல்கள்)
- ரூ. 390/- உள்ளூர் வரிகள் தனி

பரணியின் தயாரிப்பான "மணமகன் தேவை" என்னும் படம், ஏற்கனவே ஆங்கிலத்தில் வெளியாகி, பல்லோராலும் பார்த்துப் பாராட்டப்பட்ட Fabulous Senorita என்னும் படத்தின் தமிழாக்கம் — இல்லை, தழுவல்!

துடுக்குக்காரியான தன் மகள் அல்லி ராணிக்கு "மணமகன் தேவை" என்று பத்திரிகையில் விளம்பரம் செய்கிறார் ஒரு ஜமீன்தார். அந்த விளம்பரம், கல்யாணத்துக்காக ஏங்கித் துடிக்கும் பாபுவின் கண்ணில் பட்டுவிட்டது. உடனே தகப்பனாரோடு ஜமீன்தார் வீட்டுக்குப் பெண் பார்க்கப் போகிறான். ஆட்டமும், பாட்டும் கூத்துமாக அடித்து அந்தப் பெண் பானுமதி அவனை நிறைய அடித்து விடுகிறாள். அவன் நடுங்கிப் போய் அவளை மணக்க மறுத்து, அவள் தங்கை சந்திராவை மணந்து கொள்ள விரும்புகிறான். சந்திராவுக்கும் அவள் அத்தானுக்கும் வெகு நாளையக் காதல்; அவன் ஏழை என்ற காரணத்தால் ஜமீன்தார் திருமணத்திற்குச் சம்மதிக்கவில்லை. மூத்தமகள் பானுமதி, தன் தங்கை சந்திராவுக்கும் அத்தானுக்கும் ரகசியமாக மணம் முடித்து வைக்கிறாள். தன் தங்கை திருமணத்தைக் கோபக்காரத் தந்தையிடம் வெளியிட முடியாமல், வெளியூருக்குச் சென்று காலேஜில் சேர்ந்து படிக்க ஏற்பாடு செய்து கொள்கிறாள். ஆனால், தங்கை தன் கணவனுடன் இருக்கிறாள். ஆகவே, பானுமதியே இரண்டு பெயர்களில் (இரட்டைப்பிறவி என்ற வியாஜத்தில்) காலேஜில் காலந் தள்ளுகிறாள். அதனால் பல அசந்தர்ப்பங்களும் குழப்பங்களும் நேருகின்றன.

"மணமகன் தேவை" படத்தின் கதையில் இன்னதுதான் வருகிறது என்று குறிப்பாகச் சொல்ல முடியாது. ஓடும் ரயில், ஆடும் பாம்பு, பறக்கும் கார், கொட்டும் மழை, நீண்ட நெடுஞ்சாலை—எல்லாம் வருகின்றன. என்னென்னவோ சம்பவங்கள், என்னென்னவோ சம்பாஷணைகள்! ஒரு பாத்திரத்தையும் ஒழுங்காகப் பின்பற்றி ரஸிக்க முடியவில்லை. தெருவோடு போகும் பைத்தியக்காரனைப் பின்பற்றிச் சென்றால் என்னென்ன விபரீதங்கள் நேரும் என்று அநுபவத்தில் கண்டு அறியாதவர்கள் "மணமகன் தேவை"யைப் பார்த்தால் போதும், முழு அநுபவத்தையும் வெகு சுலபமாகப் பெற்றுவிடலாம்.




புகழ்பெற்ற நட்சத்திர நடிகை பானுமதி, சிறந்த நடிகர் சிவாஜி கணேசன், பழைய நடிகர் டி. ஆர். ராமச்சந்திரன், அநுபவ நடிகர் சந்திரபாபு, நாடக நடிகர் சிவதாணு முதலியவர்கள் எல்லாம் நடித்திருக்கும் இந்தப் படத்தைப் பார்ப்பதற்கு முன் எல்லோரும், சிறிது நம்பிக்கையோடு போவார்கள். ஆனால் படத்தைப் பார்த்த பின்பு அந்த நம்பிக்கையை இழந்து விடுவார்கள்.

இதில், ஜமீன்தாரின் மூத்த பெண் பானுமதியாகப் பிரபல நடிகை பானுமதி நடிக்கிறார். கேலிக் கூத்து, பைசாச நடனம் இவற்றுக்கெல்லாம் இந்தப் படத்தில் சிறிதும் பஞ்சமில்லை. பானுமதி இந்தப் படத்தில் ஒரு சகல கலாவல்லியாக விளங்குகிறார்!

"வந்தால் வரட்டும் போடி" என்ற பாட்டுக்கு ராகினியின் அபிநயம் மிகவும் அழகாக அமைந்திருக்கிறது. படம் முழுவதும் ஒலி, ஒளி இரண்டும் நன்றாயிருக்கின்றன.

சிவாஜி கணேசன், படம் கொஞ்சம் ஓடின பின்புதான் வருகிறார். அதே மாதிரி யார்மனத்திலும் தங்காமல் ஓடியும் விடுகிறார்.

சந்திரபாபு கல்யாணப் பைத்தியம் கொண்டு ஆங்கில நடனங்கள் ஆடி, அபிநயம் பிடித்து, தும்மல் போட்டு ரகளை செய்திருக்கிறார். திரைக்கதை ஒழுங்காக உருவாக வில்லையாதலால், அந்த அபிநயங்களும் அட்டகாசங்களும் சோபிக்கவில்லை.

ஹாஸ்டல் வார்டனாக வரும் டி. ஆர். ராமச்சந்திரன் நடிப்போடு நிறுத்திக் கொள்ளாமல் நன்றாய்ச் சிரித்தும் இருக்கிறார்.

இந்தப் படத்தைப் பார்த்ததும் நம் திரைப் படங்களில் துணிந்து புது முகங்களைப் புகுத்த வேண்டியது எத்துணை அவசரம் என்பதைப் பற்றியே எண்ண விட வேண்டியிருந்தது.

அத்துடன் நல்ல திரைக்கதையும் வெள்ளித் திரைக்கு மிகமிக அவசரமான தேவை என்பதும் புரிந்தது. படாதிபதிகள் விரைவில் விழித்துக்கொள்ள வேண்டும்.



# பாலைவனத்திடையே...

அகிலன்

(சென்ற வாரத் தொடர்ச்சி)

அடுத்த நாளிலிருந்து பலராமனுக்கு அடிக்கடி தாகம் எடுத்தது. தன்னுடைய அறையிலிருந்த தண்ணீரைக் குடம் குடமாகக் குடித்துப் பார்த்தான். தாகம் தீர வேண்டுமே! தண்ணீர் கூட அதே கிணற்றிலிருந்து கொண்டு வந்த தண்ணீர்தான். என்றாலும், நான்கு மைல்கள் நடந்து போய், கங்கா வரும் வரையில் காத்திருந்து, அவள் கையால் அதை வாங்கிப் பருகினால்தான் அந்தப் பொல்லாத தாகம் தணியும் போல் தோன்றியது.

ஐந்து நாட்கள் சென்றபின் ஒருநாள் அந்தக் கிணற்றடிக்குச் சென்று ஏமாற்றத்துடன் திரும்பினான். இனியும் போய் வீணாக அலைவது தவறு என்றுபட்டது.

மேலும் இரண்டு நாட்கள் கழித்து, ஒரு பிற்பகல் ஓய்வு கிடைத்ததால், கிராமத்துக்குப் போய் ராம்நாராயணனைப் பார்க்கப் புறப்பட்டான். எப்படியாவது பொழுதை விரட்டித் தொலைக்க வேண்டும். சுடுகாட்டு வாழ்க்கை போல் உணர்ச்சியற்ற தன்மையை அந்தப் பாலைவனம் அவனுக்குக் கொடுத்தது. மெல்ல அவன் நடந்தான்.

மணற் குன்றுகள் சில வழியில் குறுக்கிட்டன. அவற்றை அடுத்துச் சமவெளியில் வட்ட வடிவாக அந்தக் கிராமம் தெரிந்தது. அதன் பெயர் வாயில் நுழையக் கூடியதாக இல்லை. கிராமத்தில் ஒரு பக்கத்தில் ராகி, தினை போன்ற 'பாஜ்ரா' 'ஜ்வார்' முதலிய தானியங்களைப் பயிர் செய்து வைத்திருந்தார்கள். பெரிய பெரிய மண் கலங்களில் நிரப்பி வைத்திருந்த நீரைக் கிராமத்து ஆண்களும் பெண்களும் சிறுகச் சிறுக வயல்களுக்குப் பாய்ச்சிக் கொண்டிருப்பதைக் கண்டான். வயல்களை அடுத்துக் குத்துச் செடிகள்போல் அங்குமிங்கும் ஒழுங்கில்லாமல் 'சாவன்' புல் முளைத்திருந்தது. பல வருஷங்கள் மழை பெய்யா விட்டாலும் அந்தப் புல் வாடாமல் வதங்காமல் வளரக் கூடியதாம். மனிதர்களுக்கு அந்த வயல்களில் விளையும் தானியம் எப்படியோ, அப்படி அந்தப் புல் கால்நடைகளுக்கு உணவு. ஒட்டகங்கள், கோவேறு கழுதைகள், மாடுகள் - இவை நாலா பக்கமும் சிதறி நின்று புல் மேய்ந்து கொண்டிருந்தன.

ராம்நாராயணனின் கடையில் சுறுசுறுப்பான வியாபாரம். என்றாலும் அவர் பலராமனைக் கண்டவுடன் எழுந்தோடி வந்து வரவேற்றார். பையனிடம் வியாபாரத்தைக் கவனிக்கச் சொல்லிவிட்டுக் கடைக்கு அடுத்தாற்போலிருந்த வீட்டுக்கு அவனை அழைத்து வந்தார். கூரை வீடாக இருந்தாலும் வட்டமான பெரிய வீடு; வளைந்த வரிசையில் ஐந்தாறு அறைகள்; மையத்தில் கூடம். நாற்காலி கொண்டு வந்து போட்டார். தாமும் ஒன்றில் உட்கார்ந்தார்.

''அம்மா, கங்கா! நம் வீட்டுக்குப் புது விருந்தாளி ஒருவர் வந்திருக்கிறார். பலகாரமும் தேநீரும் கொண்டு வா!''

கங்கா என்ற பெயரைக் கேட்டவுடன் சிறு அதிர்ச்சி பலராமனுக்கு. கிணற்றடியில் சந்தித்த அதே கங்காதான் பலகாரம் கொண்டு வந்து வைத்தாள். அவளைக் கண்டவுடன்

அவனுக்கு அந்த வேளையில் கங்கையில் மூழ்கி எழுந்தது போலிருந்தது.

நெய்யும் சர்க்கரையும் கலந்த ஏதோ ஒரு தின்பண்டம். பக்கத்தில் உட்கார்ந்து கொண்டு கிழவர் அவனுக்கு விசிறத் தொடங்கினார். அவன் அங்கே வந்தது தம்முடைய பேரதிர்ஷ்டம் என்றார். உண்மையில் அதிர்ஷ்டம் தனக்குத்தான் என்று நினைத்து மகிழ்ந்தான் பலராமன்.

கடையிலிருந்து பையன் ஓடிவந்தான். முக்கியமான வியாபாரம் வந்திருக்கிறதென்று முதலாளியை அழைத்தான்.

"மெதுவாகச் சாப்பிடுங்கள். இதோ ஐந்து நிமிஷத்தில் வந்து விடுகிறேன். — கங்கா! விருந்தாளியைக் கவனித்துக்கொள்."

கிழவர் வியாபாரத்துக்குச் சென்றார். பத்து வயதுச் சிறுவன் ஒருவன் கொல்லைப்புறம் கட்டிக் கிடந்த கழுதையின் மேல் ஏறிக் குறும்பு செய்து கொண்டிருந்தான். கங்கா கதவோரமாக நின்று பலராமனை வியப்புடன் நோக்கிக் கொண்டிருந்தாள்.

"முன்பு கிணற்றடியில் எனக்குத் தண்ணீர் கொடுத்த அதே கங்காதானே நீ?"

"ஏன் பார்த்தால் தெரியவில்லையா?"

"எப்படித் தெரியும்? நீதான் முகத்தை மூடிக் கொண்டிருக்கிறாயே!—எங்கள் நாட்டில் பெண்கள் இப்படித் தங்கள் அழகான முகத்தைத் திரையிட்டு மறைப்பதில்லை."

பதில் பேசவில்லை கங்கா. அவளுடைய தலை கவிழ்ந்தது. பலகாரம் சாப்பிட்டு முடிந்தவுடன் சுடச் சுடத் தேநீரைக் கொண்டு வந்து நீட்டினாள்.

"எங்கள் பக்கத்தில் முகத்தை மறைக்காமல் இருப்பது குற்றம்" என்றாள் கங்கா தயக்கத்துடன்.

"எங்கள் பக்கத்தில் விருந்தாளியுடன் முகம் கொடுத்துப் பேசாவிட்டால் குற்றம்."

பலராமன் சிரித்தான்.

"என்மேல் கோபமா?"

"இல்லவே இல்லை."

மின்வெட்டின் ஒளிபோல அவளுடைய முக மலர் தோன்றி மறைந்தது. கணப்பொழுது திரையை விலக்கி, அன்றைக்கு அவனைக் கிணற்றடியில் பார்த்தாளே, அது போலப் பார்த்தாள். பிறகு வேகமாக உள்ளே ஓடி விட்டாள்.

"போதும், கங்கா! இந்த முகம் எனக்கு நீண்ட நாள் நினைவில் இருக்கும். மறைத்துப் பாதுகாக்க வேண்டிய முகந்தான் இது."

துடுக்குத்தனமாக அன்றைக்குப் பேசிய கங்கா இன்றைக்கு நாணத்தின் சிகரமாக மாறி விட்டாள். வேண்டுமென்றே அவளை வம்புக்கு இழுத்துப் பேச வைத்தான். உள்ளே இருந்தபடியே அவள் பலராமனின் நாட்டைப் பற்றி விசாரித்துத் தெரிந்து கொண்டாள். ஏரிகள், குளங்கள், ஆறுகள் நிறைந்த நாடு; சோலைகள், சாலைகள், மரங்கள், மலர்கள் நிறைந்த நாடு; பெண்கள் முகத்தை மறைக்காமல் ஆண்களுடன் கைவீசி நடக்கும் நாடு. இப்படியெல்லாம் கூட வெளி உலகம் ஒன்று இருக்கிறதா?

தங்கள் வாழ்க்கையைப் பற்றியும், தன் தகப்பனார் ராம்நாராயணனின் பணத்தாசை பற்றியும் அவள் வெகுளித்தனமாகப் பேசினாள். அந்தக் கிழவருக்கு மூன்று மனைவிகள், மூன்று குழந்தைகள், மூன்று ஒட்டகங்கள். முதல் மனைவிக்குப் பிறந்த மகன்தான் கொள்ளைக் கூட்டத்துடன் சேர்ந்து விட்டான். கங்கா இரண்டாவது மனைவியின் பெண். அவள் இப்போது உயிருடன் இல்லை. மூன்றாவது மனைவியின் பையன்தான் கொல்லைப்புறத்தில் கழுதை மீது



சவாரி செய்பவன். அவனுடைய பெரிய தாயாரும் சிறிய தாயாரும் வயலுக்குப் பாஜ்ரா பயிரைக் கவனிக்கப் போயிருக்கிறார்களாம். பணம் இருந்தும் கூடக் கூலி கொடுக்க மனமில்லாமல் வீட்டுப் பெண்களை வாட்டி எடுத்தாராம் அவள் தந்தை. சமையல் செய்ய வேண்டிய வேலை கங்காவுக்கு.

"பணம் பணம் என்று அப்பா உயிரை விட்டுச் சேர்த்து வைக்கிறார். சேர்த்து வைத்த பணத்தை யெல்லாம் கொள்ளைக்காரர்கள் கொண்டு போகிறார்கள். இருந்தாலும் அவருக்குப் பணத்தாசை விடவில்லை."

இந்தச் சமயத்தில் கிழவர் வந்து சேர்ந்தார். கொள்ளைக்காரர்கள் தமக்குச் செய்த கொடுமையைக் கதை கதையாய்க் கூறினார். திருடர்களுக்குச் சில உளவாளிகள் ஒவ்வொரு கிராமத்திலும் உண்டாம்; அதே கிராமத்தில் கூட இருந்தார்களாம்; தலை போனாலும் உண்மையைச் சொல்ல மாட்டார்களாம். இப்படிப் பல விவரங்களை வெளியிட்டார்.

"நீங்கள் எனக்கு அதிகமான உதவி ஒன்றும் செய்ய வேண்டாம் எப்போதாவது இந்தப் பக்கம் வந்து போய்க் கொண்டிருந்தால் போதும். நீங்கள் என் விருந்தாளி என்று தெரிந்தாலே அது எனக்குப் பாதுகாப்பு. அதற்காக என்னால் முடிந்ததை உங்களுக்குச் செய்கிறேன்."

"நீங்கள் ஒன்றுமே எனக்குச் செய்ய வேண்டாம்" என்றான் பலராமன். "வாரத்தில் ஒருநாள் சனிக்கிழமை பிற்பகல் எனக்கு ஓய்வு உண்டு. அங்கே பொழுதும் போகவில்லை. தாராளமாய் வந்துபோகிறேன்; வரும்போது ஒரு கிண்ணம் தேநீர் கொடுத்தால்போதும்."

"சனிக்கிழமைதோறும் உங்களை அழைத்து வர ஒட்டகம் அனுப்பி வைக்கட்டுமா? நடப்பது சிரமமாக இருக்குமே."

"ஒரு சிரமமுமில்லை. பொதுவாகக் கிராமத்தைப் பார்க்க வருவதுபோல் நானே நடந்து வருகிறேன்."

வாரம் தவறாமல் வந்து போகத் தொடங்கினான் பலராமன் கிழவர் கிராமத்தில் தலை நிமிர்ந்து நடந்தார். உளவாளிகள் என்று சந்தேகப்பட்டு முன்பு அஞ்சி நடந்த சில கிராமவாசிகளிடம் அலட்சியமாய்ப் பேசினார். சந்தர்ப்பம் வந்தபோதெல்லாம் பட்டாளத்துப் பையனின் பெயரை அவர் பயன்படுத்திக் கொண்டார்.

பலராமனுக்கும் கங்காவுக்கும் நட்பு வளர்ந்தது. நட்பு நாளடைவில் காதலாக மாறியது. பிறகு அது தொடர்ந்து வளருவதற்கு வழி தெரியாமல் திகைத்தது. நான்கு மாதங்கள் சென்றன.

"எனக்கு இந்த ஊரே பிடிக்கவில்லை. எங்கேயாவது போய்விட வேண்டுமென்று தோன்றுகிறது. எப்படிப் போவது?" என்றாள் கங்கா ஒரு நாள்.

"எங்கள் ஊருக்கு வந்து விடுகிறாயா?"

"ஓ! அழைத்துக் கொண்டு போனால் வருகிறேன்."

"இங்குள்ளவர்கள் சம்மதிப்பார்களா?"

விளையாட்டுத்தனமாய்ச் சிரித்தாள் அவள். "யாரும் சம்மதிக்க மாட்டார்கள். அப்பாவைப் பற்றி எனக்கு அக்கறையே இல்லை. இந்த வீட்டுப் பெண்களும் சரி, ஒட்டகங்களும் சரி, அவருக்கு ஒன்றுதான். பெரியம்மா தான் கொஞ்சம் கவலைப்படுவாள். ஆனால் சீக்கிரம் அந்தக் கவலை அவளுக்கு மறந்து போய்விடும். வேலைசெய்து களைத்துப் போகிறவர்களுக்குக் கவலைப்பட நேரம் ஏது?"

"எப்போது நான் உன்னை அழைத்தாலும் என்னுடன் வந்து விடுவாயா?"

"முறைப்படி அழைத்தால் வருவேன்."

"அப்படி யென்றால்?...."

"கல்யாணம் செய்து கொள்ளாமல் ஒரு பெண் வேற்று மனிதரோடு தனி வழி போகக் கூடாது. கல்யாணம் செய்து கொண்டால் தான் வருவேன்."

"அப்பா சம்மதிக்க மாட்டார் என்றாயே?"

"நாம் இப்படிப் பழகுவது தெரிந்தால் கூட நீங்கள் வரும் வேளையில் என்னை வயலில் வேலை செய்ய அனுப்பி விடுவார். பாலைவனத்து சாவன் புல்லைப் பாலைவனத்தில் நட்டால்தான் வளரும் என்று இங்குள்ளவர்களெல்லாம் சொல்வார்கள்."

"இதற்கு வழி என்ன?"

"நீங்களே சொல்லுங்கள்" என்றாள் கங்கா.

இன்னும் ஒரு மாதம் சென்றது. பலராமன் சுறுசுறுப்பாகப் பல முன்னேற்பாடுகள் செய்யத் தொடங்கினான். முதலில் மூன்று மாத விடுமுறை, பிறகு குடும்பத்துடன் தங்கக் கூடிய வேற்றூருக்கு மாற்றும்படி வேண்டுகோள், இல்லாவிட்டால் வேலையிலிருந்து விலகிக் கொள்ள அனுமதி. இப்படிப் பல விதமாக அங்கு முயற்சி செய்தான். விடுமுறை கிடைத்தவுடன் கங்காவுடன் தமிழ் நாட்டுக்குப் போய்க் கல்யாணம் செய்து கொள்வதென்ற ஏற்பாடு.

கங்கா அதற்கு மனப்பூர்வமாகச் சம்மதித்தாள். ஒரு நாள் முன்னதாகவே தான் புறப்பட்டுப் போய் அவனுக்காகத் தனி இடத்தில் காத்திருப்பதாகக் கூறினாள். பிறகு இருவரும் ஒன்றாக ரயிலேற வேண்டும்.

பலராமன் எதிர்பார்த்தபடி அவனுக்கு விடுமுறை கிடைத்தது. விடுமுறைக்குப் பின் வேற்றூரில் மாற்றிக் கொள்ளலாம் என்ற உத்தரவும் வந்தது. ஆனால் அத்துடன் அவன் எதிர்பாராத நிகழ்ச்சி ஒன்றும் பக்கத்துக் கிராமத்தில் நடந்தது. திடீரென்று கொள்ளைக் கூட்டத்தார் ராம்நாராயணனின் வீட்டுக்கு அடுத்த வீட்டை ஒரு நாள் இரவு சூறையாடிச் சென்றனர். எந்த இரவில் கங்காவைத் தனியே புறப்பட்டு முன்னதாகப் போகச் சொன்னானோ, அதே இரவில் அங்கு கொள்ளை! கங்காவைக் கொள்ளைக் கூட்டத்தார் தூக்கிச் சென்று விட்டதாக அனைவரும் பேசிக் கொண்டனர். பலராமனுக்கே சந்தேகம் வந்து விட்டது.

கிழவர் வந்து அவனிடம் முறையிட்டார். பலராமன் சாதுரியமாகப் பதிலளித்துக் கொண்டான். "நான் லீவில் புறப்படுகிற சமயம் பார்த்து உங்களுக்கு இந்தக் கஷ்டம் வந்ததைக் கண்டு வருந்துகிறேன். இங்குள்ளவர்கள் சீக்கிரம் அந்தக் கூட்டத்தை வளைத்துப் பிடிப்பார்கள். உங்களுடைய பெண் கங்காவைப் பற்றியும் நீங்கள் கவலைப்பட வேண்டாம். அவளுக்கு ஒரு கஷ்டமும் வராது."

தன்னை ரயிலுக்கு வந்து வழியனுப்ப வந்தவர்களிடம் சாக்குப்போக்குச் சொல்லி

# அநுமகரத்வஜா

**ஷட்குண மகரத்வஜா**
**சக்தி வாய்ந்தது**



சுத்தமான ஷட்குணத் தங்கத்திலுல் மிகவும் சிறிய அளவில் ஆனல் பிரமாத சக்தி வாய்ந்ததாக உயர்ந்த முறையில் தயாரிக்கப்பட்டுப் பிறகு மாத்திரை வடிவம் ஆக்கப்பட்டிருக்கிறது. உபயோகிப்பதற்கு மிகவும் சுலபம். மற்ற மகரத்வஜங்களை விடச் சக்தி வாய்ந்தது.

○●○

14 மாத்திரைகள் ஒரு புட்டியில் இருக்கின்றன. (7 முழு அளவுகள்)

○●○

## பெங்கால் கெமிகல்

**கல்கத்தா - பம்பாய் - கான்பூர்**

*சென்னை ராஜ்ய டிஸ்ட்ரிப்யூட்டர்கள்*
**ஆர். எல். கெளடர் & கம்பெனி**
**69, பந்தர் தெரு : சென்னை - 1**

*ஆந்திர ராஜ்ய டிஸ்ட்ரிப்யூட்டர்கள்*
**சத்ய நாராயண பார்மஸி**
**குமரி தெரு. விஜயவாடா-1 & விஜயநகரம்**

# சுலேகா

ரிஜிஸ்டர்டு
பேனக்கள்

திருப்திகரமான
சேவைக்கு




*Sole Distributors:*

**PENMAN'S INDUSTRIAL SERVICES**
**KANDIVLI, BOMBAY (S. D.)**

எல்லா சோதனைகளிலும்
தேர்ச்சி பெற்ற
ஆதர்ச டூத் பிரஷ்
இன்றே வாங்குங்கள்-
அதன் குணங்
களை தெரிந்து
கொள்ளுங்கள்-




இந்தியாவிலேயே மிக்க
அநுபவம் வாய்ந்த டூத் பிரஷ்
தயாரிப்பவர்கள்

அவர்கள் வராமல் பார்த்துக் கொண்டான் பலராமன். பத்து மைல் தூரத்துக்கு மேல் பாலைவனத்தில் அவன் கால்கள் நடந்தன. குறிப்பிட்ட மணல்குன்றின் அடிவாரத்தில் குகைபோல் இருந்த மணற் குடைவில் கங்கா அவனுக்காகக் காத்திருந்தாள். வேடன் அம்புக்குத் தப்பி வந்த புள்ளி மானின் கண்கள் போல் அவள் விழிகள் மிரண்டு நோக்கின. எழுந்தோடி வந்து பலராமனின் கரங்களை இறுகப் பற்றிக் கொண்டாள்.

இருவரும் சாப்பிட்டார்கள்; தண்ணீர் குடித்தார்கள். பலராமன் அந்தப் பக்கத்துக் கிராமவாசிபோல் உடை மாற்றிக் கொண்டான். மாலைப் பொழுதின் மஞ்சள் வெயில் அவர்கள் பதுங்கியிருந்த மணல் குகைக்குள் நுழைந்தது. சூரியன் மறைந்த பிறகு, நிலவு தோன்றியவுடன், அவர்கள் எழுந்து நடந்தார்கள். பதினைந்து மைல்கள் நடந்தால் ஒரு சின்னஞ்சிறு ரயில்வே ஸ்டேஷனை அடையலாம். அங்கிருந்து சென்னைக்கு டிக்கட் வாங்கிக் கொண்டு புறப்பட முடிவு செய்தனர்.

வானத்தில் நிலவு பூத்து மணல் வெளியில் தன் அழகைக் கொட்டியது. பலராமன் நிலவொளியில் தாஜ்மஹாலின் அழகைப் பார்த்திருக்கிறான். ஆனால் இந்தப் பாலைவனத்துக்கும் நிலவுக்குந்தான் எத்தனை ஒற்றுமை! இந்த இயற்கை அழகுக்கு முன் அது எந்த மூலை? அருகில் அவன் இதயத்தரசி கங்கா ஓட்டமும் நடையுமாய் வந்து கொண்டிருந்தாள்.

உச்சி வானத்துக்கு நிலவு வந்தவுடன் களைத்துப் போய்த் தன் கால்களைப் பிடித்துக் கொண்டு கீழே உட்கார்ந்தாள் கங்கா. பலராமன் தன் கழுத்தில் தொங்கிய தண்ணீர்ச் சொம்பைக் கழற்றி அவளுக்குத் தண்ணீர் கொடுத்தான். மெல்ல அவளுடைய முகத்திரையை விலக்கி அதில் தண்ணீர் தெளித்தான். அவனுக்கு அதன் பிறகு அந்த முகத்தை மறைக்கவே விருப்பமில்லை. நீண்ட நேரம் அதன் ஒவ்வொரு அணுவையும் உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தான். கங்கா அவனைத் தடுக்கவில்லை. அவள் கண்களின் கண்ணீர் அவன் வலது கரத்தை நனைத்தது.

"நான் உங்களை நம்பித்தான் என்னுடைய எல்லாவற்றையும் இழந்து விட்டு வருகிறேன். என்னை விட்டுவிட மாட்டீர்களே?"

பலராமன் தன்னுடைய தலைப்பாகைக் குஞ்சத்தால் அவள் கண்களைத் துடைத்தான். ஏதோ குற்றம் புரிந்துவிட்ட உணர்ச்சி முதல் முதலாக அவனிடம் தலை நீட்டியது.

"ஒருபோதும் உன்னை விடமாட்டேன். எனக்குத் தாய் தகப்பனார் கிடையாது. யாரும் நம் கல்யாணத்தைத் தடை செய்ய மாட்டார்கள். நீ கவலைப்படாதே."

"எனக்குச் சத்தியம் செய்து கொடுங்கள்" என்று கைநீட்டினாள் கங்கா.

"என் சொந்த ஊருக்குப் போனவுடன் உன்னைக் கல்யாணம் செய்து கொள்கிறேன்" என்று கைதட்டிக் கொடுத்தான் பலராமன். அப்போது ஏனோ அவனுக்கு நான் முன்பு பாடிய அந்தப் பாரதியாரின் பாட்டுத்தான் நினைவுக்கு வந்தது.

கங்கா அதன் பிறகு பைத்தியமாக மாறினாள். நிலவின் போதை அவள் தலைக்கு ஏறியிருக்க வேண்டும். கைதட்டிக் கொடுத்ததால் ஏற்பட்ட நம்பிக்கை அவளை அந்த நிலவின் உயரத்துக்குத் தூக்கிக் கொண்டு போயிருக்க வேண்டும். கொஞ்சினாள்; கெஞ்சினாள்; ஏதேதோ பிதற்றினாள்.

"அப்படியானால் என்னை இப்போதே தூக்கிக்கொண்டு உங்கள் ஊருக்குப் பறந்து செல்லுங்கள். நமக்கு ரயிலும் வேண்டாம்; மோட்டாரும் வேண்டாம். நாம் பறக்க வேண்டும்!" என்றாள் கங்கா.

பலராமனுக்குச் சிரிப்பு வந்தது. "நீ சிறகுகளாக மாறி என்மீது ஒட்டிக் கொண்டால் என்னால் பறக்கத்தானா முடியாது?"

அவளும் சிரித்தாள். பிறகு மெல்ல எழுந்து அவனுடன் தள்ளாடித் தள்ளாடி நடந்தாள். பட்டாளத்து இளைஞனாதலால் அவனிடம் சிறிய திசைக் கருவியும் ஊர்ப்படமும் இருந்தன. இன்னும் ஐந்து மைல் தூரம் நடந்தால் ரயிலடிக்கு வந்து விடலாம். பொழுது விடியும் நேரத்தில் வரும் ஐந்து மணி வண்டியைப் பிடித்துவிட்டால் போதும். பிறகு யார் கண்ணிலும் படாமல் தப்பி விடலாம்.

நிலவு மேலே வானத்தில் நழுவிக் கொண்டிருந்தது. எதிரில் வரிசையாகச் சில மணற்குன்றுகள் நின்றதால் ஒரு ஓரமாக அவளை அழைத்துக் கொண்டு சென்றான். வழி தவறிவிட்டது போல் ஒருகணம் திகைப்புத் தட்டியது. நாலு புறமும் திரும்பிப் பார்த்தான். திசைக் கருவியைப் பார்த்தான். வடகிழக்கு மூலையில் அவன் போய்ச் சேரவேண்டிய ஊர் இருந்தது. குன்றை வளைத்துக் கொண்டு சுற்றிப் போக வேண்டும்; அல்லது எதிரில் தெரிந்த குறுகலான இடைவெளியைக் கடக்க வேண்டும்.

இருளாக இருந்தாலும் சட்டை செய்யாமல் இடைவெளிப் பாதையில் புகுந்தான் பலராமன். கங்காவின் கரம் அவன் கைக்குள் அகப்பட்டு நடுங்கியது. அவள் பயந்து

**அருள் வாக்கு**

நாம் வாக்கினாலும் மனத்தினாலும் கைகால் முதலியவற்றாலும் பாபம் செய்து இருக்கிறோம். அந்தப் பாபங்களையெல்லாம் அவைகளைக் கொண்டே புண்ணியம் செய்து கரைத்துவிட வேண்டும். இந்த ஜன்மம் இருக்கும் பொழுதே பாபங்களை அலம்பிக் கொள்ள வேண்டும். இது போனால் அப்புறம் எது வருமோ தெரியாது. மாடாகப் பிறந்தால் ஒன்றும் பண்ண முடியாது. 'ஏன் பின்னால் செய்து கொள்ளக் கூடாது?' என்று இருந்தால் இந்த ஜன்மம் போகும் காலம் நமக்குத் தெரியாது. நாம் போவதற்குள் 'பாப மூட்டை இல்லை' என்று சொல்லும்படியிருந்தால், அப்புறம் பஞ்சைப் போல் ஆனந்தமாகப் பறந்து போகலாம். அப்பொழுது பயமேயிராது. எங்கிருந்து புறப்பட்டோமோ, அங்கேயே போய்ச் சேர்ந்து விடலாம்.

**ஸ்ரீ சங்கராச்சாரியார், காஞ்சி காமகோடிபீடம்**



பிரமுகர்:— சரி. நீ நாளைக்கே வேலைக்கு வந்து விடப்பா! இப்போ மாதம் முப்பது ரூபாய் சம்பளம் போட்டிருக்கிறேன். இன்னும் இரண்டு மாதம் கழிந்து உனக்கு நாற்பது ரூபாய் தரேன்.

ஆள்:— அப்போ ரெண்டு மாசம் கழிச்சே நான் வேலைக்கு வரேனுங்களே!......

---

கொண்டே அவன்மீது சாய்ந்தாள். குன்றின் உச்சியிலிருந்து ஏதோ சரசரவென்று சத்தம் கேட்டது. அந்தப் பாலை நிலமே பதறும்படி கூச்சலிட்டாள் கங்கா.

'பாட்டரி' விளக்கொன்று இரண்டு பேர் முகங்களையும் மாறி மாறி எடை போட்டது. இரண்டு புது மனிதர்கள் இரும்புத் தூண் களைப்போல் எதிரில் நின்று வழிமறித்தனர். ஒருவன் கையில் விளக்கு; மற்றவன் கையில் கூரிய கத்தி.

"கொள்ளைக்காரன்!" என்றாள் கங்கா.

பாட்டரி விளக்கு வெகு நேரம் பலராம னின் முகத்தை விட்டு அகலவில்லை. அவன் திருட்டுத்தனத்தை, அவனுடைய பொய் வேஷத்தை, அந்த விளக்கு ஐந்தே நிமிஷத் தில் கண்டு பிடித்து விட்டது. முண்டாசுக் கட்டைக் கத்தியால் அகற்றினான் ஒருவன். "சென்னைவாசி" என்று சிரித்தான் மற்றவன்.

"யார், நீ?"

"அவரை ஒன்றும் கேட்காதீர்கள். என் னைக் கேளுங்கள். அவர் என் கணவர்" கங்கா கத்தினாள்.

"அட, நீ யார்?"—கங்காவின் முகத்திரை வினாடே அந்த விளக்கொளி பாய்ந்தது.

"நீங்கள் வழக்கமாய்க் கொள்ளை யடிக்கி றீர்களே, அந்த ராம்நாராயணனின் மகள்."

"என்ன, கங்காவா?" கொள்ளைக்காரன் முகத்திரையை விலக்கிப் பார்த்தான். "கங்காவா நீ?" என்று மீண்டும் கேட்டான்.

கங்காவும் அவனை நன்றாகப் பார்த்தாள்.

"தங்கச்சி!" என்று மணல் குன்று தூள் பறக்கக் கத்தினான் அவளுடைய தமையன். அண்ணனின் பிடிப்பில் அகப்பட்டுத் தேம்பி னாள் தங்கை. நடந்தது முழுவதையும் கூறி முடித்தாள்.

சரேலென்று தன் தோழனிடமிருந்த கத்தியைப் பிடுங்கிக் கொண்டு பலராமன் மீது அவன் பாய்ந்தான். "யாரடா கொள் ளைக்காரன்? நானா? நீயா? துரோகிப் பயலே! ஒழிந்து போ!"

கங்கா குறுக்கிட்டுப் பலராமனைக் கட்டிக் கொண்டாள். "என்னைக் கொன்று விட்டு அவரைக் கொல்! உன் தாயாரின் மீது ஆணை!" என்றாள்.

"நான் இதற்கு இடம் கொடுக்கவே மாட் டேன். என்னுடைய பாலைவனத்துச் செடி யைப் பச்சை மண்ணில் பயிராக்க விடமாட் டேன். இந்தக் காரியம் செய்வதைவிட நீங்கள் இருவருமே ஒழிந்துபோவது நல்லது."

ஓங்கிய அவனுடைய கையை இறுக்கிப் பிடித்தான் பலராமன். "நாங்கள் செய்தது குற்றமென்றால், அந்தக் குற்றம் என் னுடையதுதான். என்னைக் கொன்று விட்டு நீ அவளைக் கூட்டிக் கொண்டு போ. கொண்டு போய்க் குடும்பத்தில் விட்டு விடு."

"மாட்டவே மாட்டேன்" என்று அலறி னான் கங்கா.

அவளுடைய அண்ணன் சற்று யோசனை செய்தான். தன்னுடைய தோழனிடம் திரும்பி, "இவனை நீ கொண்டு போய்ப் பத்தி ரமாய் இவன் போக விரும்பும் ஊர் எல்லையில் விட்டு வா; நான் என் தங்கையை ஊரில் விட்டு வருகிறேன்" என்றான். அவர்களுடைய முயற்சிகள் அனைத்தும் தோற்றன.

"பலராம்! பலராம்!" என்று அவள் பதறி அழுத குரல் வெகுநேரம் வரை பலராமனின் காதுகளில் ஒலித்துக் கொண்டிருந்தது. அவ ளுடைய அண்ணன் அவளைப் பலவந்தமாக இழுத்துக் கொண்டு போனான்.

பலராமனை அந்த மற்றொரு கொள்ளைக் காரன் பத்திரமாக ரயிலடிக்குக் கொண்டு வந்து சேர்த்தான். பலராமனுடைய பெட்டி யில் நிறையப் பணம் இருந்தது; அதை அவன் திறந்து பார்த்துவிட்டுக் காலணாவைக் கூடத் தொடாமல் திருப்பிக் கொடுத்து விட்டான். பலராமனுக்கு ரயிலில் ஏறியதோ, ஊர் வந்து சேர்ந்ததோ ஏதும் நினைவில் இல்லை.

இப்போது ஏழெட்டு வருஷங்கள் ஆகி விட்டன. கங்கா எந்த ஊரில் இருக்கிறாளோ? என்ன செய்து கொண்டிருக்கிறாளோ? யாருக்கு வாழ்க்கைப் பட்டாளோ? அவ ளுக்கு எத்தனை குழந்தை குட்டிகளோ?

பலராமன் அந்தக் கொள்ளைக்காரனை விட எந்த விதத்திலும் உயர்ந்தவன் என்று நான் நினைக்கவில்லை. ஆனால் அவன் பறந்து போக வேண்டும் என்று துடித்த துடிப்பும், பட்ட அவஸ்தையும் இப்போது எனக்குப் பைத்தியக்காரத்தனமாகத் தோன்றவில்லை. அவனுக்காக நாகப்பூரில் எழுதத் தொடங் கிய இந்தக் கதையைச் சென்னைக்கு ரயில் வருவதற்குள் முடித்துக் கொடுத்தேன். அந்த ஒரே ஒரு வாசகன் மட்டிலும் இதை ஒரு முறைக்கு ஒன்பது முறை படித்து மனந்தேறு வான் என்பது எனக்குத் தெரியும்.

# என்னிடம் இருந்தால்!

அழ. வள்ளியப்பா

என்னிடம் மாய ஜமக்காளம்
இருந்தால் அதனால் என்செய்வேன் ?

உங்களை ஏற்றிக் கொண்டிடுவேன்
உலகைச் சுற்றிக் காட்டிடுவேன்
கங்கை, யமுனை, காவேரி,
கடல்கள், மலைகள் கடந்திடுவேன்

காரும், ரயிலும், ஆகாயக்
கப்பலும் வேண்டாம் என்றிடுவேன்
சீரும் சிறப்பும் பெற்றிடுவேன்
திக்விஜ யங்கள் செய்திடுவேன்

என்னிடம் மந்திரக் கோல்ஒன்று
இருந்தால் அதனால் என்செய்வேன் ?

மண்ணைப் பொன்னாய் மாற்றிடுவேன்
வாரி வாரிக் கொடுத்திடுவேன்
சின்னஞ் சிறிய குடிசைகளைச்
சிறந்த மாளிகை ஆக்கிடுவேன்

பலவித மான உணவுகளும்
பட்டா டைகளும் வரவழைப்பேன்
உலகில் உள்ளோர் யாவர்க்கும்
உதவிப் பஞ்சம் போக்கிடுவேன்

# மணப்புயல் சித்திரத் தொடர் கதை ⑤
















இதற்கிடையே சோதனைக்கு மேல் சோதனையாக ஹேமாவின் வாழ்க்கையில் மற்றொரு பேரிடி விழுந்தது. ஓர் விபத்தில் அவள் தந்தை தனியளாக அவளைத் தவிக்கவிட்டு இவ்வுலகைவிட்டு மறைந்து விட்டார்.
தெய்வமே! இதென்ன சோதனை!


ஹேமா! நீ தனியே தவிக்கவேண்டாம்! என் வீட்டுக்கு வந்துவிடு!
என் முன் நில்லாதே, ரமணி!


முடியாது. உன்னை அடையாமல் என் வாழ்வு நிறைவு பெறாது.
போகிறாயா, போலீசைக் கூப்பிடட்டுமா?


உன்னை எப்படி அடையவேண்டும் என்பது எனக்குத் தெரியும். நான் வருகிறேன்!


மனப்புயல் வீசியது ஹேமாவின் உள்ளத்திலே....
ஆம்! இந்தத் துரோகியிடமிருந்து நிரந்தரமாகத் தப்ப ஒரே வழி!...!
தொடரும்

# செய்து பாருங்கள்

வேர்க்கடலையைக் குருவியாக மாற்றி விடலாம். முதலில் மூன்றாவது படத்தில் எழுதியிருப்பதுபோல் வர்ணக் காகிதத்தைக் கத்திரித்து எடுத்துக் கொண்டு கடலையின் தலைப்பக்கத்தில் குண்டூசியால் பொருத்துங்கள். பிறகு இறக்கையைப் படத்தில் இருப்பதுபோல் எழுதி வெட்டி எடுத்துக் கடலையின் உடம்பில் ஒட்டி விடுங்கள். குருவி கீழே நிற்பதற்குக் கடலையின் அடிப் பாகத்தில் மூன்று இடங்களில் குண்டூசியைச் செருகினால் குருவி கீழே நிற்கும். கருப்பு மையால் கண் எழுதி விடுங்கள்.















குண்டூசியைத் தண்ணீரில் போட்டால் குண்டூசி மிதக்காது-அடியில் போய்விடும். குண்டூசியை மிதக்கச் செய்ய வேண்டும். எப்படி என்றும் சின்னப் பிளாட்டிங் காகிதத் துண்டின் மேல் குண்டூசியைப் படுக்க வைத்துத் தண்ணீரில் மெள்ள வையுங்கள். கொஞ்ச நேரத்தில் பிளாட்டிங் காகிதம் ஊறித் தண்ணீரில் அமுங்கி விடும். குண்டூசி மாத்திரம் மிதக்கும் ஆச்சரியத்தைப் பார்க்கலாம்.



கிராப் வெட்டும் முயல் :— எப்படியப்பா வெட்ட வேண்டும்?

குட்டி முயல் :—காதை மட்டும் விட்டுவிட்டு எப்படி வேண்டுமானாலும் வெட்டுங்கள். காது ஜாக்கிரதை!

பற்களில் சொத்தை யாவதை தடுக்க

ஆக்டிவ் க்ளோரோபில் சேர்ந்த அற்புதமான பச்சை 'கோலினாஸ்' டூத்பேஸ்ட்

* பற்களில் சொத்தையாக்கும் கிருமிகளை ஒழிக்கிறது
* பற்களைச் சுத்தமாகவும் பிரகாசத்துடனும் வைக்கிறது
* வாய் நாற்றத்தை அகற்றுகிறது
* ஈறுகளுக்குப் பலமளிக்கிறது



'கோலினாஸ்' நுரை

தனிச் சிறப்பு வாய்ந்தது

GK. 3039

ஜெப்ரீ மானேர்ஸ் அண்டு கம்பெனி பிரைவேட் லிமிடெட் ரிஜிஸ்தர் செய்து கொண்டு உபயோகிப்பவர்கள்

# மாயப் பந்து



## 10. பெட்டி திறந்தது!

அறையினுள்ளே சென்ற கிழவி சற்று நேரத்துக் கெல்லாம் வெளியே வந்தாள். அவள் கையில் ஒரு துணி முடிச்சு இருந்தது. மிகவும் சிரமப்பட்டு அவிழ்த்தாள். அவிழ்த்து அதில் இருந்த ஒரு முருங்கை விதையைப் போலச் சற்றுப் பெரிதாக உள்ள ஒரு விதையை மால்கோஷினிடம் கொடுக்க எடுத்தாள். "மால்கோஷ்! இது சாதாரண விதை அல்ல. என்னிடம் உள்ள மிகவும் மந்திர சக்தி வாய்ந்த பொருள்களில் இந்த விதை மிகவும் முக்கியமானது. இந்த விதையைத் தவறிக் கீழே போட்டுவிடாதே. இந்த விதை பூமியில் விழுந்தால் உடனே மரமாக முளைத்து விடும். இந்த விதையை நீ ஜாக்கிரதையாக உன் பையில் எப்பொழுதும் வைத்துக் கொள். உனக்கு ஆபத்து ஏதாவது ஏற்பட்டால் நீ அதை மனத்தில் நினைத்துக் கொண்டு இந்த விதையைப் பூமியில் போட்டால் உனது எண்ணம் கை கூடும். ஆனால் இந்த விதையினுடைய மகிமை ஒரு முறை உபயோகப்பட்டபின் பிறகு பிரயோசனப்படாது!" என்று கூறிக் கிழவி அந்த விதையை அவனிடம் கொடுத்தாள்.

"மால்கோஷ்' உனது தங்கைக்குச் சுரங்கத்திலுள்ள ஆபரணங்களையும் விலை உயர்ந்த ஆடைகளையும், கொடுக்கப் போகிறேன். எனக்கோ வயதாகிவிட்டது. எனக்கு உற்றார் உறவினர்கள் ஒருவரும் கிடையாது. ஏதோ பணத்தில் வெறி பிடித்துத் திரிந்து சுரங்கத்தில் பொருள்களைச் சேகரித்தேன். இனிமேல் அவைகளுக்கு நீங்கள் இரண்டு பேர்களும்தான் சொந்தக்காரர்கள். உங்களிடம் அவை சேர்ந்தால்தான் எனக்குச் சந்தோஷமாக இருக்கும்" என்றாள் கிழவி.

கிழவி சொல்லியதைக் கேட்ட மால்கோஷ், "தாங்கள் சொல்லியபடி மற்ற விஷயத்தில் நடக்கிறேன். ஆனால் எங்களுக்கு அந்தப் பொருள்கள் வேண்டாம். நாங்கள் பொருள் தேடுவதற்கு வெளியில் கிளம்பவில்லை. அப்பா சொல்லியபடி பெயரும், புகழும் சம்பாதிக்கத்தான் வந்தோம். நீங்கள் உடனே போலீஸ் அதிகாரியிடம் சென்று உங்களது சுரங்கத்தின் இரகசிய அறையிலுள்ள பொருள்கள் யாவையும் அவரிடம் கொடுத்து விடுங்கள். அவர் அந்தப் பொருள்களை அடையாளம் கண்டு பிடித்து யார் யாரிடம் சேர்க்க வேண்டுமோ அவர்களிடம் சேர்த்து விடும்படியும் சொல்லி விடுங்கள். அப்படிச் செய்தால் நானும் என் தங்கையும் சந்தோஷமடைவோம்" என்றான்.

கிழவி, "உடனே அப்படியே செய்ய நான் சித்தமாக இருக்கிறேன். அது மாத்திரம் அல்ல; நான் இனிமேல் இந்த ஊர்வாசிகளுக்கு மனத்தினால் கூடக் கெடுதல் நினைக்க மாட்டேன்" என்று உறுதியான குரலில் கூறினாள்.

பிறகு மால்கோஷும் கலாவும் மந்திர ஜமக்காளத்தின் உதவியால், போலீஸ் அதிகாரியின் வீட்டுக்கு வந்தார்கள். மந்திரக் கிழவியும் அங்கே வந்தாள். போலீஸ் அதிகாரிக்கு ஆனந்தம் தாங்கவில்லை. மால்கோஷைக் கட்டித் தழுவிக் கொண்டார்.

மந்திரக் கிழவி சுரங்கத்திலுள்ள ஆபரணங்கள், ஆடைகள், பொன் வெள்ளி நாணயங்கள் யாவற்றையும் போலீஸ் அதிகாரியின் விருப்பப்படி அவ்வூர் போலீஸ் ஸ்டேஷனில் சேர்த்தாள்.

இந்த விஷயம் காட்டுத் தீபோல் பட்டணம் முழுவதும் பரவியது. ஏராளமான ஜனங்கள் மால்கோஷையும், கலாவையும் பார்க்கக் கூடினார்கள். பொது ஜனங்களின் வேண்டுகோளின் பேரில் போலீஸ் அதிகாரி பெரிய தேநீர் விருந்து

ஒன்று ஏற்பாடு செய்தார். மால்கோஷின் விருப்பப்படி ஒரு சிறந்த சங்கீதக் கச்சேரியும், கலாவின் பிரியப்படி ஒரு உயர்ந்த நாட்டியக் கச்சேரியும் ஏற்பாடாகி யிருந்தன. பல சங்கங்களின் சார்பில் மால்கோஷுக்கும், கலாவுக்கும் மலர் மாலைகள் போடப்பட்டன. மறுநாள் காலையில் மால்கோஷும் கலாவும் அவ்வூர் ஜனங்கள் யாவரும் வழி அனுப்ப அந்தப் பட்டணத்தை விட்டு 'ஜம்' என்று மந்திர ஜமக்காளத்தில் புறப்பட்டார்கள்.

மந்திர ஜமக்காளத்தைப் பல வேறு திக்குகளிலும் மனம் போனவாறு பறக்க விட்டுக் கொண்டிருக்கும் பொழுது ஒரு பெரிய பாலைவனத்தைக் குறுக்கிட்டார்கள். அப்பொழுது பாலைவனத்திலிருந்து ஏதோ ஒரு பெரிய வீடு பற்றி எரிவதுபோல் நெருப்பும், புகையும் வானத்தை அளாவின. "இது என்ன? ஏதோ நெருப்பு பெரிதாக எரிகிறதே. நாம் கீழே சென்று நம்மால் ஆன உபகாரத்தைச் செய்யலாம், கலா! ஜாக்கிரதையாக இடத்தைப் பார்த்துக் கீழே இறங்கு" என்று மால்கோஷ் சொன்னான். இரண்டு பேரும் மெதுவாகக் கீழே இறங்கினார்கள்.

அவர்கள் கீழே இறங்கிப் பார்த்த பொழுது அவர்கள் எதிர்பார்த்தபடி வீடுகள் ஒன்றும் பற்றி எரியவில்லை. ஆனால் ஒரு பெரிய வைக்கோல் போர்




ஒன்று எரிந்து கொண்டிருந்தது. எரிகின்ற வைக்கோல் போரை அணைக்க அங்கு கூடி இருந்த ஜனங்கள் ஒருவராவது முயற்சி செய்யாமல் சந்தோஷத்தினால் கத்திக் கொண்டும் குதித்துக் கொண்டும் இருந்தார்கள்.

"ஓஹோ! பாலைவனத்தில் தண்ணீருக்கு எங்கே போவது? அதனால்தான் எல்லோரும் பேசாமல் இருக்கிறார்கள். இதோ நான் என் பந்தை உபயோகித்து வைக்கோல் போரில் பற்றி இருக்கும் தீயை இப்பொழுதே

அணைத்து விடுகிறேன்" என்று மால்கோஷ் வைக்கோல் போருக்கு அருகில் சென்றான். பந்தை உபயோகித்தான். அடுத்த வினாடியில் வைக்கோல் போரில் தீ அணைந்தது.

மால்கோஷ்தான் தீயை அணைத்தான் என்று அறிந்த அங்கே கூடி இருந்த ஜனங்கள் "ஏன் தீயை அணைத்தீர்கள்? வேணுமென்றே தான் இவ்வூர் சிற்றரசனின் கட்டளைப்படி இந்த இடத்தில் ஒரு வைக்கோல் போரை ஏற்படுத்திக் கொளுத்தினோம். வைக்கோல் போருக்கு அடியில் ஒரு பெரிய மரப் பெட்டி வைத்திருக்கிறோம். அம் மரப் பெட்டியில் ஒரு கொடியவன் இருக்கிறான். அவன் மந்திரசக்தி உள்ளவன். அவன் இப்பட்டணத்தில் உள்ள சிறுவர் சிறுமிகளை மிகவும் துன்புறுத்துகிறான். அதனால் எல்லாச் சிறுவர் சிறுமிகளும் கிலி பிடித்திருக்கிறார்கள். நேற்று வரையில்கூட இவன் பொருட்டுப் பள்ளிக்கூடங்கள் மூடி இருந்தன. தெருவில் தைரியமாக ஒரு சிறுவனும் கூட நேற்று வரையிலும் வருவதில்லை. இன்று விடியற் காலையில் தான் அவன் எதிர்பாராதவிதமாக அகப்பட்டான். உடனே அவனைப் பெட்டியில் வைத்துப் பூட்டிப் பெட்டியுடன் அவனைக் கொளுத்தும்படி சிற்றரசன் உத்தரவிட்டான்" என்று சொன்னார்கள்.

"அப்படியா?" என்று மால்கோஷ் வைக்கோல் போரைப் பரிசோதித்து அதில் மறைத்து வைக்கப்பட்டிருந்த பெட்டியை வெளியே எடுக்கச் செய்தான். அந்தப் பெட்டி சுமார் பத்து அடி நீளம் இருந்தது. அந்தப் பெட்டியிலுள்ள சாவித் துவாரம் கூடக் கெட்டியாக அடைத்து வைக்கப் பட்டிருந்தது. "இந்தப் பெட்டியை எப்படித் திறப்பது?" என்று மால்கோஷ் அங்கு கூடியவர்களைக் கேட்டான்.

"ஐயா! நீங்கள் தயவுசெய்து பெட்டியைத் திறந்து எங்கள் பட்டணத்துக் குழந்தைகளுக்குத் தீங்கு ஏற்படுத்தாதீர்கள். அந்தப் பெட்டி நல்ல கெட்டியான மரத்தில் செய்யப் பட்டது. அதைத் திறக்கவும் முடியாது" என்றார்கள்.

"அதைத்தான் பார்ப்போமே" என்று தன்னிடமுள்ள பந்தை உபயோகித்தான். அடுத்த வினாடியில் பெட்டி 'படார்' என்று திறந்தது.

'பெட்டியில் ஒன்றையும் காணவில்லையே' என்று பெட்டியை மால்கோஷ் பார்த்துக் கொண்டிருக்கும்பொழுது பெட்டியின் ஒரு மூலையில் ஒரு நத்தையைப்போல ஒரு உருவம் தெரிந்தது. வெகு சீக்கிரத்தில் அது பெரிதாகி ஒரு மனிதனைப் போல மால்கோஷின் எதிரில் வந்து நின்றது.

வெளியே வந்த அந்தக் கொடியவன் மால்கோஷைப் பார்த்து, "ஐயா, என்னை இந்தப் பெட்டியிலிருந்து விடுவித்ததற்கு மிகவும் வந்தனம். சற்றுத் தாமதித்திருந்தால் வைக்கோல் போரில் உள்ள தீயினால் வெந்து சாம்பலாகப் போயிருப்பேன். இல்லையென்றால் மூச்சுத் திணறி இறந்திருப்பேன். மூச்சே வெளியே போகாமல் பெட்டியில் உள்ள எல்லாச் சந்துகளையும் அடைத்து விட்டார்கள். அதனால் பெட்டி அளவு நீளமாக இருந்த நான் என் உருவத்தை என் சக்தியினால் குறைத்துச் சிறிய உருவமாக ஆக்கிக் கொண்டேன். அப்பொழுதாவது மூச்சுத் திணறாமல் இருக்கலாம் என்றுதான். என்னைப் பற்றிச் சீக்கிரம் தெரிந்துகொள்ளுவீர்கள். நான் உங்களை மறுபடியும் இன்று சந்திக்கிறேன்" என்று சொல்லிக்கொண்டே ஆகாயத்தில் கிளம்பிச் சற்றுத் தூரத்துக்கு அப்பால் குதித்தான்.

அதைப் பார்த்த அங்கிருந்த ஜனங்கள், "இனிமேல் சிறுவர்களுக்கு மறுபடியும் ஆபத்துத்தான்" என்று கோபமாக மால்கோஷைப் பார்த்தார்கள்.

கொடியவன் பெட்டியிலிருந்து தப்பியதிலிருந்து அந்தப் பட்டணம் முழுவதும் ஒரே அமர்க்களப் பட்டது. தாய் தந்தையர்கள் தங்களுடைய சிறுவர் சிறுமிகளை வீட்டுக்குள் அழைத்துக் கொண்டு கொடியவன் கைகளில் அகப்படாமல் பார்த்துக் கொண்டிருந்தனர். கொடியவன் தப்பிய சில நேரத்துக்குள்ளே பள்ளிக்கூடத்துக்குச் சென்று சிறுவர்களை துன்புறுத்தினான். நேரம் ஆக ஆக, அவனது அட்டகாசங்கள் அதிகமாயின.

மாலை சுமார் ஐந்து மணிக்குச் சிற்றரசனின் அரண்மனை வாசலில் சிறுவர், சிறுமிகள் கூட்டம் மிகவும் அதிகமாக இருந்தது. யாவரும் கொடியவனுடைய உபத்திரவத்தைப் பொறுக்க முடியாமல் அரசனிடம் சொல்ல ஓடினார்கள்.

அரண்மனை வாசலில் ஏராளமான சிறுவர்கள் கூட்டமாக வந்திருப்பதின் காரணத்தை அறிந்த அரசன்கோபங்கொண்டு, தன் மந்திரிகளைக் கூப்பிட்டு "ஏன் என் கட்டளைப்படி அக்கொடியவனைப் பெட்டியின்மேல் வைக்கோல் போரை வைத்துக் கொளுத்தவில்லை?" என்று கேட்டான்.

மந்திரிகள் நடந்த சமாசாரத்தைச் சொல்லவே, "அப்படியா, உடனே ஊருக்குப் புதிதாக வந்திருக்கும் மால்கோஷ் கலா இருவரையும் உடனே கைது செய்து வாருங்கள்" என்று உத்தரவிட்டான். தங்களுக்கு என்ன ஆபத்து வரப் போகிறதோ என்று பயந்து போலீஸ் சேவகர்களுடன் அரண்மனைக்கு மால்கோஷும் கலாவும் வந்துசேர்ந்தார்கள். (தொடரும்)

# ஜான்ஸன் அண்ட் ஜான்ஸன்

அழகான குழந்தைகளுக்கு

அற்புதமான பவுடர்




## இலவச புத்தகம்

ஜான்ஸனின் குழந்தை பராமரிப்பு புத்தகத்தினை இலவசப் பிரதிக்கு எழுதுங்கள். பெற்றோர்களுக்கு உபயோகமான அநேக விஷயங்கள் இதில் அடங்கியுள்ளன. இங்கிலீஷ் அல்லது ஹிந்தி பிரதிகளில் எது வேண்டுமென்று குறிப்பிட்டு எழுதவும்.

**ஜான்ஸன் அண்ட் ஜான்ஸன், பி.ஓ. பாக்ஸ் 1076**, டிபார்ட்மெண்ட் 36-ம, பம்பாய்

# மலைச்சாரல்

## அத்தியாயம் 25

## மாதவியின் துயரம்

சிவசங்கரனும், அச்சுதனும் பங்களாவிலும், காட்டைச் சுற்றியும் வெகு நேரம் வரையில் தேடினார்கள். கருணாகரன் சென்ற சுவடே தெரியவில்லை.

சிவசங்கரனுக்கு அவன் நிச்சயமாக வீட்டுக்குத்தான் போயிருப்பான் என்று தோன்றியது. அச்சுதனிடம், ''நான் வீட்டுக்குப் போய் மாதவியை விசாரிக்கிறேன். அங்கு தான் அவன் போயிருப்பான் என்று தோன்றுகிறது'' என்று கூறினார்.

''எப்படி அவன் அவ்வளவு தூரம் நடந்து போக முடியும்? அதுவும் இந்தக் காட்டில், தனியாக, இருட்டு வேளையில் நடந்து போக யாருக்கும் தைரியம் வராது. எங்கேயாவது கொஞ்ச தூரம் உலாவி விட்டு வரலாமென்று



# மாதவி

நாம் எழுந்திருப்பதற்குச் சற்று முன்னால் போயிருக்கலாம். அவன் விட்டுக்கே கிளைப்பி இருக்க மாட்டான்'' என்றான் அச்சுதன்.

''கருணாகரனின் சுபாவத்தை நீ இன்னும் அறிந்து கொள்ளவில்லையே? அவனுக்குக் கோபம் வந்தால் என்ன செய்கிறோம் என்றே தெரிவதில்லை. தனியாகச் செல்லும் துணிவும் அவனுக்கு உண்டு. அவன் கொண்டு வந்த பையும், துப்பாக்கியும் இங்கே இல்லை. அதனால் தான் அவன் போய்விட்டானோ என்று சந்தேகமாக இருக்கிறது'' என்றார் சிவசங்கரன்.

கடைசியாக இருவரும், பகல் ஒரு மணி வரை அவனுக்காகக் காத்திருப்பது என்றும் அதுவரையில் கருணாகரன் வந்து சேரா விட்டால் திரும்பிப் போய்விடுவது என்றும் தீர்மானித்தார்கள்.

ஒருவருக்குமே வேட்டைக்குப் போவதற்கு வேண்டிய உற்சாகம் இல்லாமல் போகவே, சீட்டுக் கட்டைப் பிரித்துச் சீட்டாடத் தொடங்கினார்கள்.

சிவசங்கரன் ஆட்டத்தில் கலந்து கொள்ளவில்லை. அங்கே அவருக்கு இருப்பே கொள்ளவில்லை. 'ஜீப்' காரில் ஏறிக் கொண்டு முடிந்த அளவு காட்டுக்குள் சென்று கருணாகரனைத் தேடிப் பார்த்தார். ஒருவேளை அச்சுதன் சொல்வது போல அசட்டுத் தைரியத்துடன் காட்டில் உலாவச் சென்றுவிட்டு ஏதாவது துஷ்ட மிருகத்தினிடம் அகப்பட்டுக் கொண்டிருந்தால் என்ன செய்வது? என்ற கவலை வேறு அவரை அரித்துக் கொண்டிருந்தது.

பொழுது ஏற ஏற அவரால் அதைத் தாங்க முடியவில்லை. சீக்கிரம் போகலாம் என்று அச்சுதனை வற்புறுத்தினார். அவன் நல்லபடியாகப் போய்ச் சேர்ந்திருக்க வேண்டும் என்று பிரார்த்தனை கூடச் செய்தார்.

கடைசியாக எல்லாரும் சோர்ந்த மனத்துடன் புறப்

ஆனந்தி

பட்டார்கள். வேட்டைக்குப் போக முடியாத வருத்தம் ஒரு பக்கமும், கருணாகரன் இப்படிச் செய்துவிட்டானே என்ற தாபம் ஒரு பக்கமும் சேர்ந்து எல்லாரையுமே மௌனமாக்கி விட்டன. வந்த போது இருந்த கலகலப்பும், சிரிப்பும் ஆனந்தமும் இப்போது யாரிடத்திலும் காணப்படவில்லை.

ஊர் போய்ச் சேர்ந்ததும் சிவசங்கரன் மலைச்சாரல் பங்களாவில் இறங்கினார். அச்சுதன் வந்த ஜீப்பும் அங்கே நின்றது. கருணாகரனைப் பற்றிய சமாசாரம் தெரிந்துகொண்டு போகலாம் என்று அச்சுதன் காத்துக் கொண்டிருந்தான்.

சிவசங்கரன் மாதவியைக் கண்டதும் திடுக்கிட்டுப் போனார். அவளை அந்த மாதிரி நிலையில் அவர் பார்த்ததே இல்லை. மாதவியின் முகம் அழுது அழுது கன்றிப் போயிருந்தது. கண்கள் இடுங்கியிருந்தன. அவளைப் பார்த்தவுடனேயே கருணா-



கரன் இங்கு வந்திருக்க வேண்டும் என்று சிவசங்கரனுக்குப் புலனாகிவிட்டது.

"மாதவி! என்ன இது?" என்று கனிவோடு அருகில் சென்று கேட்டார்.

மாதவியின் கண்களிலிருந்து பொல பொலவென்று கண்ணீர் உதிர்ந்தது.

"கருணாகரன் இங்கே வந்தானா?" என்று கேட்டார் சிவசங்கரன்.

தலையை மட்டும் அசைத்தாள் மாதவி.

"வெளியில் அச்சுதன் இருக்கிறான், அவனை அனுப்பி விட்டு வந்துவிடுகிறேன்" என்று சிவசங்கரன் கூறிவிட்டு வெளியே வந்தார்.

அச்சுதனிடம் கருணாகரன் வந்துவிட்டதைத் தெரிவித்தார். "நீங்கள் இப்போது வரவில்லையா?" என்று அப்துல்லா ஸாஹேபைக் கேட்டார்.

"நீங்கள் எல்லாரும் போய் இறங்கிக் கொண்டு ஜீப்பை வீட்டுக்கு அனுப்பி விடுங்கள். நான் நடந்து போய் விடுகிறேன்" என்று கூறி அவர்களை அனுப்பி விட்டு மறுபடியும் உள்ளே சென்றார்.

மாதவி சோக பிம்பமாக உட்கார்ந்து கொண்டிருந்தாள்.

"என்ன நடந்ததென்று சொல், மாதவி!" என்று கேட்டார் சிவசங்கரன்.

மாதவி கண்களைத் துடைத்துக் கொண்டு கூறினாள்:

"நான் நேற்று முதல் உங்களைப் பற்றி ரொம்பக் கவலைப்பட்டுக் கொண்டிருந்தேன். இன்று ஒரே தலைவலியாக இருந்தபடியால் பள்ளிக்கூடத்துக்கு லீவு கோரி எழுதியனுப்பி விட்டுப் பேசாமல் படுத்துக் கொண்டிருந்தேன்.

பதினொரு மணி சுமாருக்குக் கதவு தட்டும் சத்தம் கேட்டது. எழுந்து போய்த் திறந்தேன். கருணாகரன் நிற்பதைப் பார்த்து விட்டுப் பதறிப் போய் விட்டேன்.

முகம் சிவந்து, தலை கலைந்து, வியர்த்துக் கொட்ட, அழுக்குத் துணிகளுடன் அவன் நின்ற கோலம் என்னைக் கதி கலங்கச் செய்து விட்டது.

"அவர் எங்கே?" என்று மிகுந்த பதற்றத்துடன் கேட்டேன்.

"அவனுக்கு ஏன் அப்படி ரௌத்ராகாரமான கோபம் வந்ததென்று எனக்குப் புரியவில்லை.

'அந்த மனிதரைப் பற்றி என்னிடம் ஒன்றும் கேட்காதே' என்றான்.

'யாரைப் பற்றிச் சொல்கிறாய் தம்பி?'

'எல்லாம் நீ சொல்லும் அந்த 'அவரை'ப் பற்றித்தான்.'

'அவருக்கு என்ன ஆயிற்று? சொல்லேன்' என்று கவலையுடன் கேட்டேன்.

'அவருக்கு என்ன ஆயிற்று, ஒன்றும் ஆகவில்லை. நமக்குத்தான் மானம் போயிற்று. ஆள் இப்படிப்பட்டவர் என்று தெரிந்திருந்தால் நான் அவரிடம் பழகியிருக்கவே மாட்டேன்.'

'எனக்குக் கொஞ்சம் புரியும்படியாகத்தான் சொல்லேன், தம்பி!' என்றேன் அளவற்ற எரிச்சலுடன்.

'அக்கா, நான் சொல்வதைக் கேள். இந்தச் சிவசங்கரன் நமக்கு ஏற்றவர் இல்லை. ரொம்ப விஷமக்காரர். நமக்கும் அவருக்கும் ஒரு நாளும் ஒத்து வராது. நீ அவருடன் பழக்கம் வைத்துக் கொள்ளாதே' என்று தணிந்த குரலில் சொன்னான் கருணாகரன்.

'அவர் அப்படி என்ன செய்து விட்டார்? அதைச் சொல்லமாட்டேன் என்கிறாயே.'

'அங்கே அச்சுதனும் அவனுடைய சிநேகிதர்கள் இரண்டு பேர்களும் வந்திருந்தார்கள். இவர் உடனே அவர்களுடன் உறவு கொண்டாட ஆரம்பித்துவிட்டார். அது போதாது என்று

நீயும் நானும், அவர்களுடன் சிநேகமாக இருந்து இவரைச் சந்தோஷப்படுத்த வேண்டுமாம். இப்படி அவர்கள் எதிரிலேயே சொல்லி என்னை அவமானப் படுத்தினர்.'

'இதற்கா இவ்வளவு ஆர்ப்பாட்டம் செய்கிறாய், தம்பி? நம்முடைய விரோதம் அவரைக் கட்டுப்படுத்துமா? மேலும் அச்சுதன் நம்மை ஒன்றும் செய்யவில்லையே. சித்தப்பாவினால்தானே நமக்குக் கஷ்டம் வந்தது. நம்முடைய இஷ்டப்படியே உலகத்தில் எல்லாரும் நடந்து கொள்வார்களா? அப்படி நாம் எதிர் பார்க்கக் கூடாது. அவருக்குப் பிடித்தால் பழகி விட்டுப் போகிறார். இதற்காக நீ கோபித்துக் கொண்டு தனியாகக் காட்டில் நடந்து வந்தது கொஞ்சங்கூடச் சரியல்ல, தம்பி! உனக்கு ஏதாவது நேர்ந்திருந்தால் என் கதி என்ன? ஜயந்தியின் கதிதான் என்ன? இதை என்னால் ஒப்புக் கொள்ளவே முடியாது' என்றேன்.



அவனுக்கு அளவில்லாத கோபம் வந்து விட்டது. 'நீ ஒருத்திதான் என்னிடம் பிரியமாக இருக்கிறாய் என்று நினைத்துக் கொண்டிருந்தேன். நீயும் எனக்கு விரோதியாகி விட்டாய். நான் எங்கேயாவது தொலைந்து போகிறேன். உன் முகத்திலேயே விழிக்கவில்லை' என்று சொல்லிவிட்டுப் போய் விட்டான். குளிக்கவும் இல்லை. சாப்பிடவும் இல்லை. பாவம் எவ்வளவு தூரம் நடந்து வந்தானோ? எவ்வளவு களைப்பாக இருந்ததோ? இன்னும் வரவில்லை'' என்று சொல்லி முடித்தாள் மாதவி.

சிவசங்கரனுக்கு அவளுடைய மென்மையான சுபாவத்தைக் கண்டு இரக்கம் உண்டாயிற்று.

''இத்தனை பேச்சுப் பேசினவன் குளிக்கவில்லையே, சாப்பிடவில்லையே என்று நீ கவலைப்படுகிறாயே. உன்னைப் பற்றி என்ன நினைப்பது என்றே தெரியவில்லை'' என்றார்.

''அவன் அப்படிப் பேசியது எனக்கு ரொம்ப வருத்தமாகத்தான் இருந்தது. அவன் இத்தமாதிரியெல்லாம் என்னிடம் இதுவரையில் பேசியதே கிடையாது. மேலும் உங்களைப் பற்றிச் சொன்னதைத் தான் என்னால் பொறுக்க முடியவில்லை.''

''இருந்தாலும் நீ தலைவலியோடு இப்படிக் கண்ணீர் விட்டிருக்கக் கூடாது. உனக்குத்தான் அவனைப் பற்றித் தெரியுமே. எதற்காக மனம் கலங்க வேண்டும், மாதவி? நம்முடைய அன்பு இன்னொருவர் சொல்வதற்காக மாறிவிடப் போகிறதா?'' என்றார் சிவசங்கரன்.

பிறகு தம்முடைய கைக்குட்டையை எடுத்து, மண் பானையிலிருந்த தண்ணீரில் நனைத்து மாதவியின் கண்களைத் துடைத்தார். ''நீ பேசாமல் படுத்துக் கொண்டிரு. நான் வீட்டுக்குப் போய் விட்டு வருகிறேன்'' என்று கூறினார்.

''பத்து நிமிஷம் இருந்து விட்டுப் போங்களேன். நீங்கள் அருகில் இருப்பது எனக்கு ஆறுதலாக இருக்கிறது'' என்று மாதவி கெஞ்சும் குரலில் கூறினாள்.

சிவசங்கரன் அவள் அருகில் நெருங்கி உட்கார்ந்து கொண்டார். அவளுடைய கையைத் தம் கரங்களில் எடுத்து, ''நான் எவ்வளவு நேரம் வேண்டுமானாலும் இருக்கத் தயார், மாதவி! நீதான் எப்போதும் என்னைத் துரத்தி விடுகிறாய்'' என்றார்.

''நான் துரத்துகிறேனாக்கும்? இப்போதே எல்லாரும் கண்டபடி பேசுகிறார்கள். கருணாகரனுக்கே பிடிக்கவில்லை. அன்பு என்பது இதயத்தில் இருக்க வேண்டும். வெளியே தெரியும்படி நடந்து கொள்ளக் கூடாது'' என்றாள் மாதவி.

''உன் தம்பியின் விருப்பப்படி எல்லாம் நாம் நடந்து கொண்டிருக்க முடியுமா, மாதவி?''

''அவன் விருப்பப்படித்தான் நாம் நடந்து கொள்ள வேண்டும் என்று சொல்லவில்லை. ஆனால் அவனுடன் விரோதம் செய்து கொள்ள வேண்டாம் அல்லவா? தாயில்லாமல் வளர்ந்த பிள்ளை அவன். கஷ்டப்பட்டதனால் முரட்டுத்தனம் அதிகம். ஆனாலும் அவனிடம் எனக்கு மிகுந்த அன்பு உண்டு. என்னிடம் அவனுக்கும் அளவற்ற பிரியம். தயவுசெய்து எனக்காக அவனுக்குக் கோபம் வரும்படி நடந்து கொள்ளாதீர்கள்'' என்றாள் மாதவி.

''ரொம்ப அழகாக இருக்கிறதே, நீ சொல்வது! முட்டாள்தனமான நடத்தைக்கு நான் பயப்பட முடியுமா? நேற்று அவனிடம் யாரும் விரோதம் பாராட்டிப் பேசவில்லை. அச்சுதன் ரொம்ப நன்றாக நடந்து கொண்டான். என்னிடம் பிரியமாக இருந்தான். கருணாகரனிடமும் அவனுக்கு விரோத பாவமே இல்லை. உங்களிடம் சிநேகம் செய்துகொள்ள விரும்பியே பேசினான். உன் தம்பிதான் ஆத்திரப்பட்டுக்கொண்டு

இரவோடு இரவாக ஓடி வந்தான். அவனுடைய நடத்தைதான் சரியில்லை'' என்றார் சிவசங்கரன். அவருடைய குரலில் சிறிது கோபம் தொனித்தது.

''அவன் முன்கோபி என்பதுதான் தெரிந்திருக்கிறதே. நீங்கள் எல்லாம் தெரிந்தவர். அவனிடம் தர்க்கத்துக்கு இடம் வராமல் பார்த்துக் கொள்ளுங்கள். என்னுடைய ஒரே தம்பியிடம் விரோதம் வளர என்னால் இடம் கொடுக்க முடியாது. நீங்கள் இருவரும் விரோதித்துக் கொண்டால் என் பாடு ரொம்பத் திண்டாட்டமாகப் போய் விடும்'' என்றாள் மாதவி.

## அத்தியாயம் 26

# கருணாகரனின் கலக்கம்

மாதவியிடம் சண்டை போட்டு விட்டு ஆத்திரத்துடன் சென்ற கருணாகரன் நேரே ஜயந்தியைத் தேடிச் சென்றான். கொதிக்கும் தன் உள்ளத்துக்கு இதமாக அவளாவது இரண்டு வார்த்தைகள் சொல்ல மாட்டாளா என்று ஆதங்கமாக இருந்தது அவனுக்கு.

கருணாகரனின் கோலத்தைக் கண்ட ஜயந்தி திக்பிரமை அடைந்து நின்றாள். 'வாருங்கள்' என்று கூட அவளால் சொல்ல முடியவில்லை.

''ஏன் மரம் மாதிரி நிற்கிறாய்? குடிக்க ஏதாவது கொண்டு வா'' என்றான் கருணாகரன்.

ஜயந்தி ஓடிப் போய் அவசரமாக 'டீ' தயாரிக்கச் சொல்லி விட்டு வந்தாள். ஒரு துண்டை எடுத்துக் கொடுத்து, ''நீங்கள் முதலில் குளித்து விட்டு வாருங்கள்'' என்றாள்.

கருணாகரன் தன் பையிலிருந்த துணிமணிகளுடன் மாடிக்குச் சென்றான்.

பச்சைத் தண்ணீரைத் தலையில் கொட்டிக் கொண்ட பிறகு கூட அவன் உள்ளக் கொதிப்பு அடங்கவில்லை. ஜயந்தியின் கையால் அளிக்கப்பட்ட டீயைச் சாப்பிட்டு விட்டு நாற்காலியில் சாய்ந்து சிந்தனையில் ஆழ்ந்தான்.

ஜயந்தி ஒன்றுமே கேட்கவில்லை. கருணாகரன் தானாகவே பேசட்டும் என்று காத்துக் கொண்டிருந்தாள். கருணாகரன் மனத்தை யாரோ புண்படுத்தியிருக்க வேண்டும் என்பது மட்டும் அவளுக்குத் தெரிந்து விட்டது.

கருணாகரன் வெகு நேரம் பேசாமல் இருந்தான். பிறகு ''ஜயந்தி! என்னைப் போன்ற துரதிர்ஷ்டசாலி யாருமே இருக்க முடியாது'' என்றான்.

''அது என்னமாய் உங்களுக்குத் தெரியும்?'' என்று விளையாட்டாகக் கேட்டாள் ஜயந்தி.

''விளையாடாதே. ஜயந்தி! என் மனம் அப்படியே எரிந்துகொண்டிருக்கிறது.''

''அதனால்தான் பச்சைத் தண்ணீரில் குளிக்கச் சொன்னேன்.''

''பார்த்தாயா! நீகூட என்னைப் புரிந்து கொள்ள மாட்டேன் என்கிறாயே! உன்னைச் சொல்லி என்ன பயன்? என் தலைவிதி.''

''நீங்கள் விஷயத்தைச் சொல்லுங்கள். தலைவிதியா இல்லையா என்பதை நான் கண்டு பிடிக்கிறேன்.''

''உனக்கென்ன ஜயந்தி? அருமைத் தந்தை இருக்கிறார். சின்னம்மா கண்ணின் கருமணியாக உன்னைப் பார்த்துக் கொள்கிறாள். பணம், காசு இருக்கிறது. தாங்குவதற்கு வேண்டிய மனிதர்கள் இருக்கிறார்கள். என்னைப் போல அனாதையா நீ?''

ஜயந்தியின் மனம் நெகிழ்ந்தது. வேட்டைக்குப் போன இடத்தில் சிவசங்கரனுடன் ஏதாவது மனஸ்தாபப்பட்டுக் கொண்டீர்களா?'' என்று கேட்டு வைத்தாள். அவன் 'அதெல்லாம் ஒன்றுமில்லை' என்று பதில் சொல்லுவான் என்று எதிர்பார்த்தாள்.

கருணாகரன், ''உனக்கு எப்படித் தெரியும்? எப்படி ஊகித்தாய்?'' என்று வியப்புடன் கேட்டபோது அவளுக்குத் தூக்கிவாரிப் போட்டது.

''நான் ஏதோ கேட்டு வைத்தேன், அவ்வளவுதான். நிஜமாகவே சண்டை போட்டுக் கொண்டீர்களா என்ன?'' என்று பரபரப்போடு கேட்டாள் ஜயந்தி.

பிறகு கருணாகரன் காட்டில் நடந்ததையும், வீட்டில் மாதவியுடன் சண்டை போட்டதையும் விவரமாகக் கூறினான்.

''சிவசங்கரன் அச்சுதனுடன் சிநேகமாக இருந்து விட்டுப் போகட்டும். அதை மாதவி எப்படிச் சரியென்று கூறலாம்? அதிலும் அவன் நம்மைப் பிரிக்கச் சூழ்ச்சி செய்வது அவளுக்குத் தெரியும். அப்படியிருக்கும்போது அச்சுதன் நமக்கு ஒரு துரோகமும் செய்யவில்லை என்று சொன்னாளே. இந்தச் சிவசங்கரன்தான் அப்படி அவள் மனத்தைக் கெடுத்து விட்டார்'' என்று பொருமினான்.

''இதைப் பாருங்கள்! நான் சொல்வது உங்களுக்குப் பிடிக்காது. ஆனாலும்

# ஐஸ் டீயை

நீங்கள் ஏன் முயற்சித்துப் பார்க்கக்கூடாது?



அமெரிக்காவில் மக்கள் ஐஸ் டீயை காலன் காலன்களாக அருந்துகிறார்கள்! ஏன்? ஏனென்றால் அது உங்களை சாந்தப்படுத்தி, புத்துணர்வூட்டி உங்கள் வேலைகளை புதுத் தெம்புடன் எதிர்பார்க்கச் செய்கிறது.

**மேலும் அதை தயாரிப்பது எளிது**

1 கெட்டிலை புதிய நீரால் நிரப்பி, கொதிக்க வையுங்கள்.

2 ஆவி வந்தவுடன் கெட்டிலை அடுப்பிலிருந்து அகற்றி தேநீர் பாத்திரத்தை வெந்நீரால் அலசிக் கழுவுங்கள்.

3 நம்பகமான வியாபாரியிடம் வாங்கிய தேயிலையில் மூன்று தேக்கரண்டிகள் தேநீர் பாத்திரத்தில் (12 அவுன்ஸ் பிடிக்கும்) போட்டு, ஐந்து நிமிஷங்கள் வரை ஊற வைக்கவும்.

4 இப்பொழுது, ஊறிய தேநீரை ஐஸ் துண்டுகள் நிறைந்த ஒரு கண்ணாடி டம்ளரில் வடிகட்டியின் மூலம் வடிகட்டிக் கொள்ளுங்கள். ருசிக்கு ஏற்ப சர்க்கரையையும், எலுமிச்சம்பழத்துண்டுகளையும் சேர்த்துக் கொள்ளுங்கள். ஆனால் பால் வேண்டாம்.

5 சில நிமிஷங்கள் குளிரவைத்து கலக்கி ஆனந்தமாக அருந்துங்கள்.



நான்தான் டீ - ஐஸுடன் மிகச் சிறந்தவன்




நீங்கள் அதிகப்படியான ஐஸ் டீ தயாரிக்க விரும்பினால் ஒவ்வொரு 6 அவுன்ஸ் பிடிக்கும் கோப்பைக்கு 1 தேக்கரண்டி வீதமும், உருகும் ஐஸுக்காக அரைக்கரண்டி வீதமும் கணக்கிட்டுப் போடவும்.

# உங்கள் கேசத்தை அதிக கருமையுடனும் பகட்டுடனும் வைக்க குளிர்ச்சியான வெண்ணிற ப்ரில்க்ரீம் உபயோகியுங்கள்






* ப்ரில்க்ரீமின் சுத்தமான க்ரீமாக்கப்பட்ட எண்ணெய்கள் உங்கள் கேசத்தின் இயற்கை கருமை நிறத்தை சோபிக்கச் செய்கின்றன. சுத்தமான வெண்ணிற ப்ரில்க்ரீமை உங்கள் தலையில் தினந்தோறும் அழுத்தித் தேயுங்கள். பொடுகுகள் ஏற்படுவதை இது தடுத்து உங்கள் கேசத்தை சுத்தமாயும் ஆரோக்கியத்துடனும் வைக்கிறது.

* சிறிதளவு ப்ரில்க்ரீம் நீடித்த உபயோகத்திற்கு வருகிறது! இன்றே ஒரு ப்ரில்க்ரீம் ஜாடியை வாங்கி எவ்வளவு காலம் அது நீடித்த உபயோகத்திற்கு வருகிறதென்று பாருங்கள்.

வாழ்க்கையில் வெற்றிபெற்றவர்கள்

# ப்ரில்க்ரீம் BRYLCREEM

உபயோகிக்கிறார்கள்

குரூப் லாபரேட்டரீஸ் (இந்தியா) பிரைவேட் லிமிடெட்

சொல்லித்தான் ஆகவேண்டும். நீங்கள் முன் கோபத்தை ஒழித்தால் ஒழியச் சந்தோஷமாக இருக்க மாட்டீர்கள்.''

''சிவசங்கரனுக்கு என்னைப்பற்றி அப்படிப் பரிகாசமாகப் பேச என்ன உரிமை இருக்கிறது?''

''அவர் ஒன்றும் உங்களைப் பரிகாசம் செய்ய வில்லை. விரோதத்தை விட்டு விடவேண்டும் என்று தானே சொன்னார்? யாரும் சொல்லக் கூடிய வார்த்தைகள் தானே அவை? இப்போது நானும் அதையேதான் உங்களுக்குச் சொல்கிறேன்'' என்றாள் ஜயந்தி.

''உன்னிடம் புத்திமதி கேட்க நான் இங்கு வரவில்லை.''

''நீங்கள் கேட்டாலும் கேட்காவிட்டாலும், சொல்ல வேண்டியது என்னுடைய கடமை.''

''ரொம்பக் கடமையின் கரையைக் கண்டு விட்டவள்தான். உனக்கு எப்படி என்மீது அனுதாபம் ஏற்படும்? உன்னிடம் தான் அதை எதிர்பார்ப்பது முட்டாள்தனம். என்ன இருந்தாலும் உன் அப்பாவிடம் வேலை பார்ப்பவன் தானே நான்? நாளைக்கு உன்னிடமே வேலை பார்க்க வேண்டி வரும்.''

''உங்களுக்கு வேண்டியது அன்பா? அனுதாபமா? அனுதாபம் யாரிடம் வேண்டுமானாலும் பிறக்கும். யார் கஷ்டப்பட்டாலும் 'ஐயோ, பாவம்!' என்று இரக்கம் ஏற்படும். ஆனால் அன்பு சுரப்பது மிக அபூர்வம். உங்களிடம் நான் அன்பைச் சொரிந்து கொண்டிருக்கிறேன். அதனால்தான் உரிமையுடன் சொல்கிறேன். நீங்கள் எவ்வளவு வித்தியாசமாகப் பேசினாலும் அது என்னைப் பாதிக்காது'' என்றாள் ஜயந்தி அழுத்தமான குரலில். இதைக் கேட்டதும் கருணாகரனின் மனம் குழைந்து விட்டது.

''ஜயந்தி! உன்னிடம் அன்பை எதிர்பார்க்க நான் தகுதியில்லாதவன். அதை அறிந்துகொண்டே உன்னைக் கோபித்துக் கொள்கிறேன். உன்னைக் காதலிப்பதற்கு நான் தகுதியற்றவன் என்ற எண்ணமே எனக்கு ஆத்திரமூட்டுகிறது. நான் எரிந்து விழுவதைப் பொறுத்துக் கொள்வாயா?''

''நீங்கள் என்னிடம் ஆத்திரப்படும் போதெல்லாம் நான் மகிழ்ச்சி அடைகிறேன். ஏன் தெரியுமா?''

''உம்?''

''அப்போதுதான் நான் தேங்காய் எண்ணெய் ஆலை முதலாளியின் மகள் என்பதை மறந்து, உங்களுடைய ஜயந்தியாக நினைத்துப் பேசுகிறீர்கள். ஆனால் 'நீ பணக்காரி' என்று குத்திக் காட்டுவது ஒன்று தான் என்னுடைய மனத்தை நோகச் செய்கிறது.''

கருணாகரன் ஜயந்தியின் கரங்களைச் சேர்த்துப் பிடித்துக் கொண்டான்.

''ஜயந்தி! உன்னுடைய தூய அன்பை நினைத்து நினைத்து நான் பல தடவைகள் ஆச்சரியப் பட்டிருக்கிறேன். பெருமிதமும் அடைந்திருக்கிறேன். ஆனால் நம் இருவரையும் பிரிக்க ஏதோ ஒரு மாய சக்தி சூழ்ச்சி செய்து கொண்டிருப்பது போலவே தோன்றுகிறது. உன்னை நான் அடைய முடியாது என்றே தோன்றுகிறது. உனக்கு நான் எந்தவிதத்திலும் ஏற்றவன் இல்லை என்ற எண்ணம் என்னைச் சித்திரவதை செய்கிறது. அப்படியிருந்தும் நீ என்னை மனப்பூர்வமாக நேசிக்கிறாய். உன் தந்தையும் நாம் பழகுவதைத் தடுக்கவில்லை...''

''அவர் உங்களிடம் ஆழ்ந்த நம்பிக்கை வைத்திருக்கிறார். உங்களுடைய நல்ல நடத்தையிலும், அறிவுத் திறமையிலும் அவருக்குச் சந்தேகம் ஏற்பட்டதில்லை.''

''அதுதான் ரொம்ப ஆச்சரியமான விஷயம், ஜயந்தி! உன்னை எனக்கு விவாகம் செய்து கொடுத்த பின்னர் 'இந்தக் காட்டில் விறகு வெட்டித்தான் பிழைப்பேன். என் மனைவி தான் அதைச் சுமக்க வேண்டும்' என்று நான் கூறினாலும், நீ சந்தோஷமாக அதை ஏற்றுக் கொண்டால் அதைத் தடுக்க மாட்டார். அவர் மனம் விசாலமானது. சிறுமைத்தனம் என்பதை அவர் அறிய மாட்டார். ஆனால்...''

''ஆனாலும் என்ன? இத்தனை விவரமாக எல்லாவற்றையும் தெரிந்து கொண்டிருந்தும் ஏன் வீணாக மனத்தை அலட்டிக் கொள்கிறீர்கள்? ஆனாலுக்கே இங்கு இடமில்லையே?''

''இல்லை, ஜயந்தி! நான் உன்னை மனைவியாக அடைய மாட்டேனென்று தோன்றுகிறது. நான் துரதிர்ஷ்டம் பிறந்த வேளையில் அதனுடன் கூடப் பிறந்தவன். அதிருஷ்ட தேவதையின் முகத்தைப் பார்க்கக் கூட நான் அதிர்ஷ்டம் செய்ய வில்லை.''

''ஏன் இப்படியெல்லாம் பேசுகிறீர்கள்? மாதவி அக்கா நம்மைப் பற்றி ஏதாவது கூறினாரா?''

''இல்லை, ஜயந்தி! அவளுக்கு உன்னைப் பற்றி நன்றாகத் தெரியும். உன்னை மனைவியாக அடைய நான் தவம் செய்திருக்க வேண்டாமா? அதை அவள் நன்றாக அறிவாள்.''

''பின்னே என்ன தடை?''

''அதுதான் எனக்கே புரியவில்லை!''

ஜயந்தி சிரித்தாள்.

''அப்பா என்னை நேற்றிரவு கூப்பிட்டு 'விவாகத்தை எப்போது நடத்தலாம்?' என்று கேட்டார். 'எனக்கு என்ன தெரியும்? உங்கள் இஷ்டப்படி செய்யுங்கள்'





செல்வி: சீதாலக்ஷ்மி — திரு சிவகுமாரன்      செல்வி: சந்திராதேவி — திரு நடராஜன்

திருவிடைமருதூர் நாகசுர இசை மன்னர் திரு பி. எஸ். வீருசாமி பிள்ளை அவர்கள் தமது அருமைப் புதல்வர்களின் திருமணத்தை மே மாதம் 5ந் தேதி வெகு விமரிசையாக நடத்தி வைத்தார். திருமணத்துக்குப் பல பிரமுகர்களும் சங்கீத வித்வான்களும், உறவினர்களும் நண்பர்களும் விஜயம் செய்து மணமக்களை ஆசீர்வதித்தனர். — வாழ்க மணமக்கள்!

---

என்றேன். 'கருணாகரனைக் கேட்கலாமென்றிருக்கிறேன். கேட்கட்டுமா?' என்று கேட்டார். நான் 'சரி' யென்று சொன்னேன். ஆகவே இன்றோநாளையோ அப்பா உங்களைக் கேட்கப் போகிறார்.''

''நிஜமாகவா?''

''ஆமாம்! உங்கள் சந்தேகங்கள் தீர்ந்து விட்டனவா?''

''அதற்கும் இதற்கும் என்ன சம்பந்தம்? ஆனால் நாம் அதற்குள் திருமணம் செய்து கொள்ள முடியாது.''

''அதுவும் உண்மைதான்.''

''எது உண்மை?''

''நீங்கள் சொல்லித்தான் எனக்குத் தெரிய வேண்டுமா? மாதவி அக்கா மணம் செய்து கொள்வதற்கு முன்னால் நீங்கள் எப்படித் திருமணம் செய்து கொள்ள முடியும்?''

''நீ ரொம்பச் சமர்த்து, ஜயந்தி!''

''ஆமாம். இதற்குச் சமர்த்தாக இருக்க வேண்டுமா என்ன? அவருக்கு விவாகம் செய்து வைக்க வேண்டியது உங்கள் பொறுப்பு என்பதைக்கூட நான் உணரவில்லை என்று நினைத்தீர்களா?''

''மாதவி அக்காவின் திருமணத்தைப் பற்றி நான் பல சமயம் யோசனை செய்திருக்கிறேன். ஆனால் அக்காவிடம் நீ திருமணம் செய்துகொள் என்று சொல்ல எனக்குத் துணிவு வந்ததில்லை. அவளிடம் எனக்கு ஒரு தனி மரியாதை. என்னைப் பற்றி அவளிடம் துணிவாகப் பேசுகிறேன். ஆனால் அவளுடைய சொந்த விஷயத்தைப் பற்றிப் பேசக் கூச்சமாக இருக்கிறது. சிவசங்கரனுடன் மாதவி பழகியதைப் பார்த்து நான் சந்தோஷப்பட்டேன். அவளுக்கு அன்பான கணவன் கிடைக்க வேண்டுமென்று விரும்பினேன். ஆனால் இன்று முதல் தடவையாக அக்காவிடம் எரிந்து விழுந்தேன். சிவசங்கரனை மறந்துவிடு என்று கூறினேன். எனக்கு என்ன நேர்ந்து விட்டதென்றே புரியவில்லை.''

''நீங்கள் அப்படிப் பேசியிருக்கவே கூடாது.''

''அச்சுதனோடு உறவு கொண்டாடுபவன் என் அக்காவை மணந்துகொள்ளக் கூடாது. அதில் ஏதோ சூழ்ச்சி இருக்கத்தான் வேண்டும்.''

''உங்களுக்கு எப்படித்தான் இந்தப் பைத்தியக்கார எண்ணங்கள் தோன்றுகின்றனவோ தெரியவில்லை. அப்படியே சிவசங்கரன் உங்கள் தமக்கையை மணந்து கொண்டு அதனால் உங்கள் குடும்ப விரோதம் தீர்ந்து போனால் நல்லதுதானே?''

''விரோதம் பாராட்டக் கூடாது என்று எனக்குத் தெரியாதா, ஜயந்தி? அச்சுதனைக் கண்டால் எனக்கு ஆங்காரம் பற்றிக் கொண்டு வருகிறதே. என்னைப் போல ஒரு பைத்தியக்காரனை மணந்து கொள்வதாகச் சொல்கிறாயே. பின்னால் வருத்தப் படுவாயோ என்னவோ?''

ஜயந்தி எழுந்து நின்றாள். ''இத்தனை பேசிய பிறகும், இவ்வளவு தூரம் நான் மனத்தைத் திறந்து காட்டிய பிறகும் நீங்கள் புரிந்து கொள்ளாவிட்டால் அது என்னுடைய துரதிர்ஷ்டம் தான். நான் போகிறேன்'' என்று சொல்லி விட்டு ஜன்னலருகில் கோபத்துடன் போய் நின்றாள் ஜயந்தி.

''என்னுடைய சகவாசத்தினால் உனக்கும் கோபம் வருகிறது பார்த்தாயா?'' என்றான் கருணாகரன். **(தொடரும்)**

# குறைந்த காலத்தில்
## உடம்பைத் தேற்றுவதெப்படி

உடம்பைத் தேற்றுவதற்கு முதல் தேவை, சுலபமாக ஜீர்ணிக்கக் கூடியதும், புஷ்டியான வலுவூட்டும் ஆகாரமேயாகும். 'ஓவல்டின்' அம்மாதிரியானதோரு ஆகாரம். இதன் ருசிமிக்க மணம் அயர்ந்துபோன பசியைத் தூண்டுகிறது; இதன் ஒருமித்த போஷாக்கு நரம்புகளையும், தசைகளையும் மீண்டும் புதுப்பிக்கிறது.

'ஓவல்டின்' மிகச் சிறந்த இயற்கை ஆகாராதிகள் மற்றும் புதுப்பிக்கப் பெற்ற வைடமின் 'பி' 'டி' இவைகளினால் தயாரிக்கப்பெற்றது. இதன வைடமின் பொருள்கள் அதி முக்கியமானதென ஒப்புக்கொள்ளப் பெற்றுள்ளது.

எங்குமுள்ள டாக்டர்களும் நர்ஸுகளும் விரைவில் உடம்பு தேற 'ஓவல்டின்'னை சிபார்சு செய்கிறனர். குறிப்பாக, நோயாளி இரவு படுக்குமுன் ஒரு கப் சாப்பிட்டு படுப்பது நிம்மதியான துயிலை அளிக்கும் ஆக்கத்திற்கு ஏதுவாகிறது.




ரேடியோ சிலோன் ஓவல்டின் அபேக்ஷி நேரத்தைக் கேளுங்கள் :(அலைக்கதிர் 41.72 மீட்டர்கள்) சனிக்கிழமைகளில் இரவு 8 முதல் 8.30 மணி வரை. (ஆங்கிலம்—9520 கிலோசைக்கிள், 31 மீட்டர்கள்) ஞாயிற்றுக்கிழமைகளில் இரவு 8 முதல் 8.30 மணி வரை

# ஓவல்டின்

பிரதியொரு டின்னும்
ஆரோக்கியமயமானது

விநியோகஸ்தர்கள்:
ரெஹாம்ஸ் டிரேடிங் கோ. (இந்தியா)
பிரைவேட் லிட்.



IV. 495




நட்ட நடுநிசியில் கேட்ட அரவம் ஒன்றிக் கிடந்த இமைகளை இரு கூறாக்கியது. முகத்தில் விழிப்பும், அகத்தே பயமும்!

தாழ்வாரத்து அறையில் இந்த எதிர்பாராத வேளையில் யாராவது நடமாடுகிறார்களோ என்ற ஐயம் சிந்தனையில் தைத்த போது போர்வையினுள் கிடந்த உடல் வெட வெடக்கத் தொடங்கியது. மார்கழி மாதத்துப் பனிக் காற்று முற்றத்தின் வழியாக உள்ளே படர்ந்து மேலும் குளிரை மிகைப்படுத்தியது.

சுவாமி அறையில் சுடர் விட்ட அகல் விளக்கு எப்பொழுதோ அணைந்து விட்டதில் இருளுக்குக் கொண்டாட்டம். என்னைச் சுற்றிலும் அறையெங்கிலும் செறிந்த இருள். இல்லத்தில் அடியெடுத்து வைத்தபோதே சூழ்ந்த இருள், என்னை விட்டு எப்போது தான் பிரிந்திருக்கிறது?

தினம் என் பக்கத்தில் படுத்துக் கொள்ளும் அம்பி—அக்கா ராஜத்தின் கடைக்குட்டி—இன்று அருகில் இல்லை. குழந்தையின் உடம்பு இரவு கதகதவென்று இருந்ததால் முற்றத்துக் குளிர் காற்று தாக்குமெனப் பயந்து கூடத்து அறையில் ராஜம் தன் அருகே போட்டுக் கொண்டு விட்டாள். பதினைந்து வருடங்களாகத் தனிமையில் தவித்துப் போன இந்த ஆத்மாவுக்கு ராஜத்தின் வயிற்றில் உதித்த குழந்தைகள்தாம் மனச் சுமையை ஆற்றும் சாதனங்கள். 'சித்தியிடந்தான் படுத்துப் பேன்' என்று பிடிவாதம் பிடிக்கும் அன்புக் குழந்தைகளின் பிஞ்சுக் கரங்கள் எனது கழுத்தை வளைத்துக் கொண்டு என்னோடு இணைந்து கிடப்பதில்தான் எனது வாழ்வின் ஆறுதல் சேமித்துக் கிடந்தது.

மறுபடியும் ஏதோ நடமாடும் ஓசை.

தாழ்வாரத்து அறையின் கிழக்கு மூலையில் மொட்டை மாடியினின்று மச்சுப்படி வந்து சேருகிறது. மேற்கு ஓரத்தில் நெற்குதிர் இருக்கிறது. அப்படியானால் நெல்லைத் திருடும் முயற்சி நடக்கிறதோ?

தலைகாணியிலிருந்து கழுத்தை உயர்த்திச் செவியைத் நீட்டிக் கொண்டு கவனித்தேன், அத்திசையில் பார்ப்பதற்கு. அச்சம் உலை உறுக்கிய போதிலும், நெஞ்சில் தைரியத்தை வரவழைத்துக் கொண்டு கண்களைக் கதவுப் புறம் ஓட விட்டேன். இருளிலே என்ன தெளிவு இருக்கும்? கதவு மூலையில் சாத்தப் பட்டிருந்த உலக்கைகூடத் திருடன் உருவமாகத்தான் பயந்த கண்களுக்குத் தோன்றியது. படுக்கையிலிருந்து எழுந்து பார்க்கும் திடம் எனக்கு இல்லை.

''அக்காவையும் அத்திம்பேரையும் கூடத்திலிருந்து எழுப்பிப் பார்க்கச் சொல்லலாமா? சீ, காற்றின் சலசலப்போ, பூனையின் விஷமமாகவோ இருந்து விட்டால் அவர்கள் தூக்கத்தைக் கெடுத்தது போல் ஆகாதா? மனம் ஏன் இவ்வளவு கோழையாக இருக்கிறது? இந்தக் கிராமத்தில் பஞ்சாபகேசய்யர் வீட்டில் வந்து கொள்ளை யடிக்கும் தைரியம் யாருக்கு இருக்கிறது? வெறும் மனப் பிரமையாகத்தான் இருக்கும்! கதவைத் திறந்து நாமே பார்த்து விடலாமா!''

இந்த முடிவு வந்து சேரவும், மனத்திலும் உடலிலும் உறுதி தோன்றவும் ஒன்றாக இருந்தன. அடிமேல் அடி வைத்து, கதவை நெருங்கி, டிர நாதாங்கியை மெதுவாக நகர்த்திக் கதவை ஒருக்களித்துப் பார்வையைப் படர விட்டேன்.

இதென்ன பயங்கரம்! தலையில் கூடையுடன் மச்சுப் படியினின்று இறங்கி ஒரு உருவம் குதிர் இருக்குமிடத்தை அடைந்தது! இரத்தத்தில் சிதறிக் கிடந்த தைரிய அணுக்களை ஒன்று திரட்டி 'அத்திம்பேரே' என்று கூவினேன். ஆனால் சத்தம் தொண்டையிலே பிறந்து அங்கேயே புதைந்து விட்டது. நடுங்கும் என் விரல்கள் பற்றுக்கோடைத் தேடிய பரபரப்பில், உலக்கை தடுமாறிப் பருத்திக்கொட்டை ஊறிக்கொண்டிருந்த பித்தளைப் பாத்திரத்தில் 'தங்' கென்று விழுந்தது.

அத்திம்பேர் கழியுடன் ஓடி வந்தார். ராஜம் அரிக்கன் விளக்கை ஏந்தி வந்தாள். கூடையைப் போட்டுவிட்டு ஓட முனைந்த உருவத்தை அத்திம்பேர் பாய்ந்து அமுக்கி விட்டார். வயது ஆனாலும் கிராமாந்தரத்துச் சூழ்நிலையில் வளர்ந்த கட்டுமஸ்தான உடல் அவருக்கு.

திண்ணையில் தூங்கி வழிந்த வண்டிக்காரப் பொன்னன் அதற்குள் வந்து விட்டான்.

''யாரடா, திருட்டுப் பயலே?''—பிடியிலிருந்து திமிறும் உருவத்தின் கையை முறுக்கியபடி ஓங்கி ஒரு குத்து விட்டார், அத்திம்பேர். ராஜம் கையிலிருந்து பொன்னன் லாந்தரை வாங்கித் திருடன் முகத்தினருகே பிடித்தான்.

''ஐயோ, சந்துரு!''—ராஜம் பலமாக அலறி விட்டாள்.

சந்துரு. மிராசுதார் சாமாவையருக்குத் தூரத்து உறவு. சிறு வயதிலே ஊரை விட்டு ஓடிவிட்டு ஹோட்டல் தொழிலில் அடிபட்டுத் திரும்பிய வாலிபன். இந்தத் திருப்பத்தின் காரணமாக அவனது குணத்தில் திருத்தம்

ஏற்படாவிடினும், பாசத்தின் தூண்டுகோலால் சாமாவையர் வாங்கித் தந்த நிலக் குத்தகையை ஏற்று ஜீவித்து வந்தான். 'பாவம் பிழைத்துப் போகட்டும்; பக்கத்து வீட்டுக்காரனுயிற்றே' என்று பஞ்சாபகேசய்யரும் அக்கரையிலுள்ள மாந்தோப்புக் குத்தகையைச் சந்துரு வசம் ஒப்புவித்தார்.

அவனு இந்த வீட்டில் கன்னம் வைக்கத் துணிந்தான்! ஆமாம்; திருடன் என்று தனி இனமா என்ன? அத்தொழிலே மேற்கொள்பவர்கள் தாங்கள் கள்ள சாதி என்று சொல்லிக்கொண்டா இறங்குகிறுர்கள்? நல்ல ஆடை அணிந்து கொண்டு பரம யோக்கியர்களாகக் காட்சி அளிப்பவர்களும் இந்த ஈனத் தொழிலில் ஈடுபடுவதில்லையா?

உண்ட வீட்டில் கன்னம் வைக்க முனைந்தான் என்பதற்காகச் சந்துருவை வியப்பானேன்! கொண்ட வீட்டிலே திருடிச் சென்ற கொடியவனைக் காணவில்லையா?

வாஸ்தவந்தான்; என் வாழ்க்கையிலும் இத்தகைய திருடன் எதிர்ப்படத்தான் செய்தான். அவன் வெறும் 'உள்ளங் கவர் கள்வன்' மட்டுமல்ல; கணவனும் கூட. எனது உள்ளத்தையும், உடலையும், வாழ்க்கையின் பிரகாசத்தையும் கவர்ந்து சென்ற கொடிய திருடன்! 'திருடர்கள் ஜாக்கிரதை' என்ற எச்சரிக்கைப் பலகைகள் தொங்கும் ரயில் வண்டியிலும், தபாலாபீஸ் 'க்யூ'வில் மட்டுமா அவர்கள் மறைந்து கிடக்கிறுர்கள்? பார்க்கப் போனுல் இந்த வாழ்க்கை முழுவதுமே அவர்கள் நிரம்பி இருக்கிறுர்கள். அதில் ஒரு பாவி வந்து என்னை 'இரண்டுங் கெட்டானுக'ச் செய்து விட்டுப் போன துக்கத்தை விடவா இன்றையத் திருட்டு பெரிது!

'சாமண்ணு!' என்று அத்திம்பேர் கூவினுர். ராஜம் என் உடலை அணைத்து நடுக்கத்தை ஆற்ற முயன்றுள்.

★

ஆனுல் அது ஆறக் கூடிய துக்கமல்ல.

அப்போது பதினைந்து வயதுப் பெண்ணுக, 'இன்னும் கல்யாணத்துக்கு ஏற்பாடு செய்யவில்லையா?' என்று ஊராரின் புருவங்கள் உயரும் விழிப்புக்கு ஆளாகும் கன்னிப் பெண்ணுக எங்கள் கிராமத்தில் வளர்ந்து வந்தேன். எனக்கு வரனைத் தேடும் முயற்சியில் என் தகப்பனுர் மும்முரமாக இறங்குவதற்கும் தஞ்சாவூர் 'கிட்டா'வின் அறிமுகம் ஏற்படுவதற்கும் ஒன்றுக இருந்தது. பக்கத்துக் கிராமங்களில் நெல், வாழை இலை பிடித்துத் தஞ்சையில் மொத்த வியாபாரம் செய்து வந்தார். ஆறு மாதங்களாகத்தான் அப்பாவுடன் வர்த்தக உறவு. கிராமத்துக்கு அலுவலாக வந்தால் எங்கள் வீட்டில் தங்கி இரண்டொரு வேளை சாப்பிட்டுச் செல்வார்.

''ஏண்டி! நம்ம ஞானத்துக்குக் 'கிட்டா'வைப் பார்க்கலாமா?'' என்று அப்பா ஆரம்பித்தார் ஒருநாள்.

ராஜத்தைச் சம்சாரியான வீட்டில் கொடுத்து அவளைப் படுத்துகின்ற அனுபவத்தைக் கண்டது முதல் என்னை எங்கேயாவது பிக்கல் பிடுங்கல் இல்லாத இடத்தில் கொடுக்க வேண்டு மென்பது அவரது ஆவல். கிட்டா



வுக்கு நெருங்கிய உறவினர்கள், பெற்றோர் கூட இல்லை. ஒன்று விட்ட மாமா வளர்த்து அனுபவப் படிப்பு கொண்டு இன்று உலகில் தன் கால்களில் ஊன்றக் கூடிய தெம்பைச் சுயேச்சையாகத் தேடிக் கொண்ட அவரை அப்பாவுக்குப் பிடித்ததில் ஆச்சரியமில்லை.

''கல்யாணம் ஆயிரம் காலத்துப் பயிர். முன்பின் தெரியாமல் எப்படிக் கொண்டு கொடுக்கிறது!'' என்று அம்மா மிகவும் கவலைப்பட்டாள்.

''என்னடி தெரியவேணும்? கண் முன்னுலே 'ஜே ஜே'ன்னு வியாபாரம் நடக்கிறது. ஆறு மாசமா வந்து போய்க் கொண்டிருக்கிறுனே, ஏதாவது ஆற்றம் குறை சொல்ல முடியுமா? தாய் தகப்பனுர் உயிரோடு இல்லாவிட்டால் பெண் கொடுக்கக் கூடாதா? தஞ்சாவூரிலே நாலு இடத்தில் விசாரித்ததிலே நன்றுகத்தான் சொல்கிறுர்கள்....''

அப்பா இத்தமாதிரி அடித்துப் பேசினதை நான் கேட்டதே இல்லை. இவ்வளவு உறுதியாக முடிவு செய்யவும், அதை ஊர்ஜிதப் படுத்தவும் அவருக்கு எங்கிருந்து துணிச்சல் வந்தது? அவருடைய இந்த ஆணித்தரமான வார்த்தைகள் என் செவிகளில் இன்பத் தேனுகவே பாய்ந்தன. ஏனெனில் 'கிட்டா'வைத் தூரத்தே நின்று ரஸித்து அவரது அழகிலும் பேச்சிலும் இதயத்தைப் பறி கொடுத்தவள் நான். கண்ணுக்கு நிறைவான ஒரு இளைஞன் கரம் பற்றி, கட்டுப்பாடு மிக்க அக்கிரமத்தின் திருஷ்டியிலிருந்து தப்பி விட வேண்டுமென்ற அவசரமும் ஆவலும் எனக்கு. அது விரைவிலேயே நிறைவேறியது

அறுவடை முடிந்து பணம் கைக்கு வந்ததும் அப்பா விவாகத் தேதி குறித்து விட்டார். எதிர் எதிராக நாலு வீடுகளை வளைத்துப் போடப்பட்ட கீற்றுப் பந்தலிலே மேளம் முழங்கிற்று. அக்னி சாட்சியாகக் கிட்டா என் கரம் பற்றினார்.

என் கணவர் என் கழுத்திலே முடிச்சிட்ட நகை என்னிடம் அவரது உரிமையை நிலை நாட்டும் பிணைப்பாக, இல்லறத்தின் எல்லைக்குள் என்னை இழுத்துச் செல்லும் பந்தக் கயிறாக இலங்கியது.

கல்யாணமாகி இரண்டு வாரங்கள் எங்கள் வீட்டிலேயே தங்கி இருந்தார். சோதிடர்கள் குறிப்பிட்ட ஒரு சுபதினத்தில் என்னைத் தஞ்சைக்கு அழைத்துச் சென்று குடித்தனம் துவங்குவதாக ஏற்பாடாகி யிருந்தது.

அன்றைக்கு முதல் நாள் இரவு...?

அதனைப் போன்று இன்பம் கலந்த இரவு என் நினைவில் இல்லை; அதனைப் போல் துன்பத்தைச் சுமந்து வந்த இரவு வேறு என் அனுபவத்தில் இல்லை. கணவனது அதீதமான அன்புச் சொற்களிலே மூழ்கிய பெண் என்னைப் போன்று இருக்க முடியாது. ஆனால் அதன் நிழலாகப் படர்ந்த சோகத்தை வாழ்வு முழுவதும் அனுபவித்த அபாக்கியவதி என்னைப் போல இருக்க இயலாது. அன்று அவரைப் போன்று கணவன் என்ற சொல்லுக்கு இலக்கணமாக அமைந்து, தனது துணைவியின் மீது காதலை வருஷித்த கணவனைக் காண்பது அரிது; ஆனால் காதல் கசியும் அத்துணை மென்மையான இதயத்தின் ஒரு கோடியில் அவ்வளவு கொடுமையை மறைத்து வைத்த நடிகனைக் கண்டு பிடிப்பதும் துர்லபம்.

வெள்ள நீர் வடிந்தது போன்று அன்றைய வீங்கிருள் விடிந்து, வைகறைப் போது எத்தகைய முடிவின் ஆரம்பத்தை எனக்கு அளிக்கப் போகிறது என்ற பிரக்ஞையின்றி நிறைந்த நெஞ்சுடன் அன்று கண்ணயர்ந்தேன்.

பொழுது புலர்ந்தது.



அது என் வாழ்க்கை அஸ்தமனத்தின் புலர்வாக இருந்தது. விடிவு எத்தகைய இடியைக் கொணர்ந்தது! கண் மலர விழித்தேன்.

கணவனைக் காணவில்லை!

எனது அங்கங்களிலே ஒன்றிக் கிடந்த ஆபரணங்களைக் காணவில்லை. தாழிடப்பட்டிருந்த கதவு திறந்து கிடந்தது.

வேதச் சுடர்த் தீ முன் வேண்டி மணம் செய்து கொண்ட பாவி இன்று பரிசழிய நிற்கச் செய்து விட்டான். தாலி என்னும் நகையுடன் உரிமையோடு கரம்பற்றிய கணவன், எனது பொன் ஆபரணங்களை மட்டுமா அபகரித்துச் சென்றான்....?

* * *

கிராமம் கிராமமாகத் தேடினார்கள். சல்லடை போட்டுச் சலித்தார்கள். கிட்டா எட்டாமல் போய் விட்டார். தஞ்சாவூர்க் கடையும் கலியாணம் கழிந்து கைமாறிப் போயிருந்தது!

அப்படியானால் எனது நகைகளுக்கும் வரதக்ஷிணைப் பணத்துக்குமா எனது கரங்களைப் பற்றினார்? அவரது கண்களில் வழிந்த காதல் என்று எண்ணி நான் இறுமாந்ததெல்லாம் வெறும் நிழலாட்டம்தானா? கணவன் என்ற உருவத்தில் வந்து என்னை ஆட்கொண்ட தெய்வம் என நம்பி நான் அன்பை வர்ஷித்த புருஷர் நயவஞ்சகப் பிசாசுதானா?

இரண்டு வாரங்கள் கணவனாக இருந்து விட்டுப் போனவர்தான்; அதற்குப் பிறகு அவரைக் கண்டவர் எவருமில்லை. ஒரு வேளை மீண்டும் ஒரு பெண்ணின் கரத்தைப் பற்றி இல்வாழ்க்கையில் ஈடுபட்டிருக்கலாம்; யாருக்குத் தெரியும்! ஆனால் எனக்கு நேர்ந்த அனுபவம் அவளுக்கு ஏற்படாமல் அவளாவது நல்வாழ்வு பெற்றுச் சுகமாக வாழ்ந்தால் திருப்திதான். இதோ பதினைந்து நீள் வருடங்கள், பாலைவனத்துப் பிரயாணி போல் வறண்ட பாதையிலே கழித்து விட்டேன். 'இரண்டும் கெட்டானாகி' விட்ட என் துன்பத்தைக் காணக் காணத் தகப்பனாரது உள்ளம் சாம்பியது. நடுநிசியில் சத்தம் கேட்டு விழித்துக் கொள்வேன். மகளுக்கு ஏற்பட்ட மாறாத துயரத்தைப் பொறாத தந்தையார் அவ்விரா வேளைகளில் தூக்கம் வராமல் சுவாமி சன்னிதியிலே நெஞ்சின் துக்கம் கண்ணீராக உருப்பதைக் காணும் போதெல்லாம் என் இதயமும் வெடித்து விடும்.

"தெரிந்து தீர விசாரியாமல் பாழுங் கிணற்றில் தள்ளிவிட்டேன், அம்மா!" என்று வாய் ஓயாமல் அரற்றுவார். தாயின் சோகமோ எல்லைக்குள் அடங்கா. எந்த இளைஞனாவது துணிச்சலாக வந்திருந்தால் என் தந்தை கிராமக் கட்டுப்பாடுகளை உதறி என் மறுமணத்துக்கு ஏற்பாடுசெய்திருப்பார். ஆனால் ஒழித்துப் பண்பிலே ஊறிய என் உள்ளத்திலே விரக்தியும் தெய்வ பக்தியும்தான் இடம் பெற்றிருந்தன.

ஐந்து வருடங்களில் எனது பெற்றோர்கள் மறைந்து விட்டனர். நானும் ராஜத்தின் ஆதரவில் வந்து விட்டேன். அவளது மாமியார் காலமாகும் வரையில் என்னைக் கரித்துக் கொண்டுதான் இருந்தாள். ராஜத்தின் குழந்தைகள் - அவற்றின் அன்புப் பிணைப்பு இல்லாமலிருந்தால், நான் என்றோ இல்லாதவளாகி இருக்க வேண்டும். எனது திருமணத்தை முடித்து வைத்த தகப்பனாருக்கு வரனைப் பற்றிய முழுக் கண்ணோட்டம் ஏற்படவில்லை. ஆனால் இம்மண்ணிலே சிசுவாகப் பிறந்த போது நாமகரணம் இடுகையில் ஒரு தீர்க்க தர்சனத்துடன்தான் பெயரிட்டு இருக்கவேண்டும்....ஞானம்!....

உண்மைதான்; விவாகம் என்பது என்னைப் பொறுத்தவரையில் மக்னீஷியம் கம்பி போல க்ஷண நேரம் கொழுந்து விட்டு எரிந்து அவிந்து விட்ட காட்சிதான். அதற்குப் பிறகு நான் ஞானியாகி விட்டேன். அவ்வப்போது இளமையின் வேகமும் பருவத்தின் உணர்ச்சிகளும் மனத்திலே ஒரு பின்னகால விகாரத்தை ஏற்படுத்தவே செய்தன. ஆனால் குழந்தைகளின் 'சித்தி' என்கிற தீஞ்சுவைச் சொல்லிலே, கொஞ்சும் மலர்ச் சிரிப்பிலே, அவை கரைந்து விட்டன.

பதினைந்து வருடங்களுக்குப் பிறகு என் ஆயுளிலே மீண்டுமொரு திருட்டு அனுபவம். நெற்குதிரை மட்டும் பாதிக்கும் சம்பவம்! ஆனால் இரண்டிலுமே திருடத் துணிந்தவர்கள் நாணய வாழ்க்கைத் தோற்றம் படைத்த சமூக அந்தஸ்து பெற்றவர்கள்தாம்!

சாமண்ணா வந்து சேர்ந்தார். வண்டிக்காரப் பொன்னன் காணாமற்போன நெல்லைச் சந்துருவின் வீட்டில் குவிந்திருப்பதைக் கண்டெடுத்து வந்து அளந்தான். சாமண்ணா வாயடைத்து விட்டார். அவரது மருமான் சீதாராமன் அத்திம்பேரை அணுகினான்.

"பஞ்சாமி மாமா! மன்னிச்சிடுங்கோ. அவன் அப்படிச் செய்தது குடும்பத்துக்கே ஈனமாக இருக்கு. அவனுக்கு நல்ல புத்தி நாங்கள் சொல்லிறோம். நீங்கள் தயவுசெய்து இதை மறந்திட வேணும்!"

"அந்த அயோக்கியனை அப்படியெல்லாம் விடமாட்டேண்டா. இன்னைக்கு அவனைச் சும்மா விட்டு விட்டால் என் வீட்டையே கொள்ளை அடிச்சுடுவான். காலையில் திருவையாற்றுக்குப் போய் போலீசிலே 'ரிப்போர்ட்' செய்து விட்டுத்தான் மறு வேலை. ஒரு சூடு போட்டால்தான் அவனுக்குப் புத்திவரும்!" அத்திம்பேர் சூடு தணியவில்லை.

சாமாவையருக்குப் பளீரென்று கோபம் வந்துவிட்டது. "ஏண்டா! எங்க மானத்தைக் கெடுக்கிறாய்!" என்று கூக்குரலிட்டுக்கொண்டு அவன் கன்னத்தில் படபடவென்று வஜ்ர அடிகளை உதிர்த்தார். சீதாராமன் விழுந்து தடுக்காவிடில் என்ன ஆகியிருக்குமோ!

பதற்றம் குறையாத சாமாவின் உடல் சீற்றத்தால் ஆடிக் கொண்டே இருந்தது.

"என்னத்துக்குப் போலீசும் வழக்கும்! நம்ம நெல் நமக்கு வந்து விட்டது. வீணாக ஊரைக் கூட்டினால் எல்லோருக்கும் தான் கேவலம்" என்று ராஜம் விவகாரத்தை முடிக்கப் பார்த்தாள்.

"நீ போ உள்ளே. உன்னை யாரு கேட்டார்கள்?"—ஒரு சிம்ம கர்ஜனை கேட்டது. அத்திம்பேரின் நெற்றிக்குக் கீழே இரு நெருப்புக் கோளங்கள்.

"பஞ்சாமி! பாக்கி விவகாரத்தைக் காலையில் பேசிக் கொள்ளலாம்" என்று சாமா

# மார்கோ சோப்



நீங்கள் ஸ்னானம்
செய்யும்போது
உங்கள்

## மார்கோ சோப்பை




மறந்து
விடாதீர்கள்

ஆரோக்யமான, இனிய நறுமண முள்ள மார்கோ சோப்பின் மிருது வான, செழிப்பான நுரை, சருமத் துவாரத்தினூடே புகுந்து சென்று, சருமம் ஆரோக்கியமாக இளமை எழிலுடன் துலங்குவதை உறுதிப் படுத்துகிறது. குடும்ப முழுவதற் கும் இணையற்ற சோப். இளஞ் சருமத்திற்கும் ஹானியற்றது.

தயாரிப்பவர்:
தி கல்கத்தா கெமிகல் கோ. லிட்.,
கல்கத்தா-29.

CMC-6 R-TM

தென் இந்திய ஆபீஸ்: 5/149, பிராட்வே, சென்னை-1

வையர் சம்பவத்தின் உஷ்ணத்தைத் தணிக்க முயன்றார். சிதாராமன் சந்துருவை இழந்துக் கொண்டு போனான். கூடிவிட்ட ஊரும் கலையத் தொடங்கிற்று.

விடிவதற்கு முன்னே அத்திம்பேர் சீக்கிரம் எழுந்து விட்டார்.

"பொன்னு! திருவையாற்றுக்கு வண்டியைக் கட்டுடா!"

திண்ணைக் கொரட்டில் பஞ்சாயத்துப் போர்டு தலைவர் சீனிவாசன் வீட்டுப் பண்ணையாள் வந்து குரல் கொடுத்தான்.

"யாருடா அது?"

"எசமான் உங்களைக் கூட்டி வரும்படி சொன்னாருங்க!"

"ஊரிலுள்ள திருட்டுப் பசங்களுக்குப் பரிந்து மத்தியஸ்தம் செய்யக் கூப்பிடுகிறானே!" என்றார் அத்திம்பேர்.

"என்னத்துக்குப் பதற்றப்படுகிறீர்கள். அவரையும் பார்த்து ஒரு வார்த்தை யோசனை கேட்டுவிட்டு வாங்களேன்." ராஜம் சமரதானத்துக்கு வழி தேடினாள்.

"தெரியும், எல்லாம் ஒருகூடை செங்கல்!"

"எதற்கென்று ஒரு வார்த்தை கேட்டு விட்டுத்தான் வாங்களேன்." — ராஜத்தின் தூண்டுகோல் அத்திம்பேரை அக்ரகாரத்தின் மேலக்கோடிக்கு அனுப்பி வைத்தது.

அத்திம்பேர் திரும்பிவந்த போது முகத்தில் சோர்வு; நிமிர்ந்த நடையிலும் ஒரு தளர்ச்சி ஏற்பட்டது.

"என்னவாம்!"—ராஜம் சென்று வந்த சேதியை விசாரித்தாள்.

"மண்ணாங்கட்டி!" — நடையை அடுத்துள்ள ஆபீஸ் அறையின் சாய்வு நாற்காலியின் மடியிலே அவரது உடல் ஆதரவைத் தேடி விழுந்தது.

"எசமான் வண்டியைக் கட்டட்டுங்களா?"

"உன்னுடைய வேலையைப் பார்த்துக் கிட்டுப் போடா!"

பொன்னன் அசந்து விட்டான்.

ஒரு மணி நேரம் அவர் அறையை விட்டு வரவே இல்லை. இரண்டாம் வேளை காப்பியை எடுத்துக் கொண்டு ராஜம் அறைக்குள் நுழைந்தாள். அத்திம்பேரது மன உளைச்சலின் காரணம் அறிய நடையோரமாக நானும் மறைந்து நின்றேன்.

"அந்தப் போக்கிரிப் பயலை மரத்தில் கட்டி உரிப்பேன். திருடினதுமல்லாமல் என்ன சொன்னான் தெரியுமா? 'போலீஸுக்குப் போகட்டும்: கோர்ட்டுக்குத்தான் போகட்டும். உண்மையை அங்கு சொல்லிக் கொள்கிறேன்' என்கிறானாம். அந்தப் பயலுக்கு எத்தனை நெஞ்சு உரம் இருக்கவேணும்?"

"என்னவாம்...?"

"தடிப் பயல் சொல்கிறானாம்! 'நான் திருடவே வரவில்லே. அவர்கள் வீட்டு ஞானம் கூப்பிட்டாள். நான் சென்றேன்'னு வாய் கூசாமல் சொல்கிறானாம்!"

"அட பாவி! அவன் தலையில் இடி விழவில்லேயோ!" என்றாள் ராஜம். ஆனால் அந்தச் சொல்லின் அதிர்ச்சி என்னைத் தாக்கிவிட்டது.

தட்டுத் தடுமாறிச் சமையலறை எல்லைக்குள் வருவதற்குள் தலையைச் சுற்றிக் கொண்டு உடல் கிரங்கி வந்தது!

எத்தகைய அபாண்டமான சொல்! தான் செய்த தகாத திருட்டை மறைப்பதற்காக வாழ்க்கைச் சூறாவளியில் அடிபட்டுப் போன ஒரு அபலையை இப்படியா நடுச்சந்திக்கு இழுப்பது? ராஜமும் அத்திம்பேரும் எனது நடத்தையில் சந்தேகம் கொள்ளாவிடினும் ஊரார் அப்படி இருப்பார்களா?

பதினைந்து வருடங்களுக்கு முன்பு நடைபெற்ற களவிலே எனது நகைகள் மட்டும் பறிபோயின; ஆபரணம் இழந்த எனது வெற்றுடல் போல் என் வாழ்வும் வெறுமையாயிற்று. ஆனால் நேற்றையத் திருட்டோ..! அநாதரவான நிலையிலும் போற்றி வரும் பெண்மைக்கே உயர்வான கற்பு என்னும் ஆபரணத்தைப் பொக்கிஷம் போல் காப்பாற்றிவரும் மதிப்பற்ற நகையை அல்லவா என்னிடம் இருந்து அபகரிக்கப் பார்க்கிறது? களவுடன் கள்ள நட்பையும் பிணைத்து அது விட்டுச் செல்லும் மரு அழிக்க இயலாத கறை அன்றோ?

அந்தப் பொன்னகை மறைந்தபோது வாழ்வின் புன்னகை மறைந்தது. ஆனால் இந்நகையைப் பற்றிப் பதில் சொல்ல வந்தால்?.. நமக்கொரு இழிவு வரின் வாழாமைதான் சாலச் சிறந்தது. மண்ணை ஒரு தடவை சுட வைத்தால் உறுதிப் படுகிறது. மறுபடியும் சுட வைத்தால் வெடிப்பு ஏற்படுகிறது. இரண்டாம் முறை திருட்டால் எனக்கு நேர்ந்த அநுபவம் இதனைப் போன்றதுதான்.

அடுப்பிலே உலை கொதித்தது. உலை வாயை மூடினேன். ஆனால் ஊர் வாயை மூட முடியுமா? அத்திம்பேர் அபவாதத்துக்கு அஞ்சி நடவடிக்கை எடுக்காமல் விட்டால், சந்துருவின் கூற்று உண்மையெனச் சமூகம் எண்ணிவிடும். சத்தியத்துக்குத் துணையாகக் கொண்டு போராடினால் அவனது பொய் உரைக்குத் தலை நிமிர்ந்து பதில் உரைக்கும் தெம்பு வேண்டாமா? இதில் எந்தப் பாதையின் வழி நான் நடப்பது?

புறக்கடைக் கதவின்று தென்னந் தோப்பைக் கிழித்துக் கொண்டு தெளிந்த ஒற்றையடிப் பாதை காவேரிக் கரையின் ஓரத்திலே முடிவடைந்தது. அங்கு ஓடிக் கொண்டிருந்த பொன்னியின் சலசலப்பு பேரழைப்பாக என் காதில் விழுந்தது.

தொழுவத்திலிருந்த 'கௌரி' யாவது இரக்கத்துடன் என்னைப் பார்த்ததே! தென்னை மரத்துடன் ஒட்ட முடியாமற் போன குரும்பை ஒன்று தன் பற்று நெகிழப் பூமித் தாயைச் சரணமடைந்து கொண்டிருந்தது.

குடத்தை எடுத்துக் கொண்டு காவேரிக்குக் கிளம்பினேன். 'சித்தி' என்ற குரல் உரக்கக் கேட்டது.

அம்பிதான்! ஒரே தாவில் என்னிடம் ஓடி வந்து என் கழுத்தைச் சுற்றி வளைத்து இறுக அணைத்து கொண்டான். உள்ளம் உடைந்து தவித்த என்னைத் தொடர்ந்து வாழச் செய்யும் அன்பின் ஸ்பரிசமாக இருந்தது. அம்பியின் பிணைப்பு.



# அன்னம் ஊட்டிய கை

மெ. ரங்கநாயகி

"இதோ பாருங்கள், சும்மா இப்படி மசமசன்னு யோசனை செய்து கொண்டிருந்தால் ஏமாளியாக இருக்க வேண்டியதுதான்" என்று கூறிக் கொண்டே காப்பியைக் கையில் கொடுத்தாள் கீதா.

"நீ என்னவோ சுலபமாகச் சொல்லி விட்டாய். ஆனால் எனக்கு அவ்வளவு சுலபமாகத் தோன்றவில்லை. மூன்று வருஷங்களாக நாமும் இப்படி ஏமாற்றிக் கொண்டு வருகிறோம். அது இனிமேலும் முடியும் என்று எனக்குத் தோன்றவில்லை" என்றான் சேகர்.

"வேண்டுமென்றா நாம் ஏமாற்றிக் கொண்டு வருகிறோம்? நம் கையில் இருந்தால் நாம் இல்லை என்று சொல்லுவோமா! ஏதோ போதாத காலம் கடன்பட்டோம். இப்பொழுது அல்லல்படுகிறோம். கையில் பணம் சேர்ந்து விட்டால் கொடுத்துவிடத் தானே போகிறோம்?" என்று கீதா வாதாடினாள்.

சேகருக்கு மனம் உறுத்தியது. அவன் கை காலியாகவா இருக்கிறது? இல்லை என்பது அவனுக்கு நன்றாகத் தெரியும். கடனைத் தீர்ப்பதற்கு வேண்டிய பணத்துக்கு மேலேயே இருக்கிறது என்பதை அவன் நன்றாக அறிவான்.

"நம் வாய் வேண்டுமானால் கையில் பணமில்லை என்று சொல்லுகிறது. ஆனால் மனச்சாட்சி அவ் வார்த்தைகளை ஒப்புக்கொள்ள மறுக்கிறது!" என்றான் அவன் மெதுவாக.

"நீங்கள் சொல்வது எனக்குப் புரிகிறது. பெட்டியில் நானூறு ரூபாய் வைத்திருப்பதைத்தானே சொல்லுகிறீர்கள்? நான் அதை எனக்காகவா சேர்த்து வைத்திருக்கிறேன்? நமக்கு இருப்பது கண்ணின் மணிபோல் ஒரே ஒரு பெண் லீலாதான். அவளுக்கு வளைகாப்புக்கும் சீமந்தத்துக்குமாக இரண்டு ஜதை வளையல்கள் செய்து போடலாமென்றிருக்கிறேன். பாவம், நம் குழந்தைக்கு வருடாந்திரப் பண்டிகைச் சீர் என்று நாம் என்ன செய்தோம்? நல்ல சம்பந்திகளும், மாப்பிள்ளையுமாக லீலாவின் அதிர்ஷ்டத்துக்குக் கிடைத்திருக்கிறார்கள். வேறு யாராவதாக இருந்தால் நம்மைத் துளைத்துத் தள்ளி விருப்பார்கள். அப்படி இருக்கும்போது நாமாக



ஆசைப்பட்டு நம் குழந்தைக்கு ஏதாவது செய்ய வேண்டாமா?'' என்று அன்புப் பெருக்குடன் கூறினாள் சீதா.

சேகருக்கும் அவள் விருப்பம் நேர்மையானதாகத்தான் தோன்றியது. சேகர் மத்தியதர வகுப்பைச் சேர்ந்தவன். சம்பளத்தைத் தவிர நிலம் நீர் என்று ஒருவித வரும்படியும் கிடையாது. வரும் சம்பளத்தில் வாடகையும், பால் பணமும் சுளையாக இழுத்துவிட, வீட்டுச் செலவுக்கு என்று ஐம்பது அறுபது ரூபாய் மீதமாகும். அதை வைத்துக் கொண்டு மாதத்தைத் தள்ளுவது தம்பதிகளுக்குப் பெரும் போராட்டமாக இருக்கும். சம்பத்து வேண்டும் என்று விரும்பியது போல் அவர்கள் சந்தானம் வேண்டும் என்று விரும்பவில்லை. கடவுளாகப் பார்த்து ஒரே ஒரு குழந்தை கொடுத்தார். லீலாவை அன்போடு வளர்த்தனர் சேகரும் சீதாவும். படிக்கவும் வைத்தனர். லீலா விவாக வயதை எட்டியபோதுதான் பணப் பிரச்னை குறுக்கிட்டது.

காதலே உலகம் என்னும் இந்நாளில் லீலா தன் மணாளனைத் தானே தேர்ந்தெடுத்துக் கொண்டாள். நல்ல பணமும் பதவியும் உள்ள பையனை அவள் தன் காதலனாகத் தேர்ந்தெடுத்ததும் சேகரும் சீதாவும் தங்கள் சம்மதத்தைக் கொடுக்கத் தயங்கவில்லை. அத்துடன் லீலா மிக்க அழகாக இருந்ததால் அவள் காதலன் ரமணனுடைய பெற்றோர்களும் தங்கள் சம்மதத்தைத் தெரிவித்து விட்டனர். பணப் பிரச்னையும் ஒரே நிமிடத்தில் தீர்ந்து விட்டது.

விவாகத்தைத் திருப்பதியில் முடித்துக் கொண்டதால் விவாகச் செலவு அதிகமாகவில்லை. தன் விவாகத்துக்கு வந்த பாத்திரங்களை வைத்துக் கொண்டு மகளின் கல்யாணத்தை ஈடேற்றினாள் சீதா. நகை போடும் விஷயத்தைச் சம்பந்திகளே ஏற்றுக் கொண்டனர். இவ்வளவு இருந்தும் கடன் வாங்காமல் இருக்க முடியவில்லை. ஆபீஸிலிருந்து சேகர் மொத்தமாகக் கடன் வாங்கினான். அதுவும் போதாமல் லீலாவைப் புக்ககத்தில் கொண்டு விடும்போது அவசரமாக முந்நூறு ரூபாய் வேண்டியிருந்தது. ஆபீஸிலிருந்து மேலும் பணம் கேட்க முடியவில்லை. அதனால் சகோதரன் சங்கரனைப் பணத்துக்கு அண்டினான். சங்கரனும் தயங்காமல் பணத்தைத் தூக்கிக் கொடுத்து விட்டார். ஆனால் அந்தப் பணம் கடனாகத்தான் கையில் கிடைத்தது. லீலா புக்ககம் சென்று மூன்று வருடங்கள் ஆகின்றன. ஒரு பண்டிகைக்காவது அவள் பிறந்த வீடு நாடி வரவில்லை. அதனால் அச்செலவு மீதமாயிற்று. இப்பொழுது அவள் கர்ப்பமாக இருக்கிறாள். அவளுக்கு ஏதாவது நகை செய்து போட வேண்டுமென்று சீதாவுக்கு நிரம்ப ஆசை.

விவாகத்துக்காக ஆபீஸில் கடன் வாங்கிய பணமெல்லாம் மெதுவாகச் சம்பளப் பிடிப்பின் மூலமாக அடைபட்டு விட்டது. இப்பொழுது சேகருக்குச் சம்பளமும் கொஞ்சம் அதிகரித்தது. சீதா முயன்றிருந்தால் சம்பளப் பணத்தில் கட்டுப்பாடாக மீதம் பிடித்துச் சங்கரனின் கடனை அடைத்திருக்கலாம். ஆனால் அவள் முனையவில்லை. சேகரும் அதைப் பற்றிக் கவலை கொள்ளவில்லை.

சங்கரன் கையிலேயே வளர்ந்தவன் சேகர். சிறுவயதிலேயே பெற்றோர்களை இழந்ததும், நாட்கள் கழித்து பிறந்த தம்பியை வளர்க்கும் பொறுப்பைச் சங்கரனே ஏற்றுக் கொண்டு வளர்த்தார். விவாகமும் செய்து வைத்தார். சேகரை நன்றாகப் படிக்க வைத்தார். ஆனால் அதற்குப் பிறகு சேகரைத் தம் வீட்டில் வைத்துக்கொள்ள அவர் விரும்பவில்லை. அவனுக்கு வேலை தேடிக் கொடுத்தார். பிறகு தனிக் குடித்தனத்துக்கும் ஏற்பாடு செய்துவிட்டார்.

அண்ணனும் தம்பியும் ஒரே ஊரில் இருந்தனர். சங்கரன் ஊரின் வடகோடியிலும், தம்பி தென் கோடியிலும் குடும்பம் நடத்திக் கொண்டிருந்தனர். அதனால் இரு குடும்பங்களுக்கும் போக்குவரவு ரொம்பக் குறைவு. மாதத்தில் இருவரும் ஒரு தடவை பார்த்துக் கொண்டால் அதிகம். பெண்கள் விஷயத்தில் சந்திக்கும் காலவரை இன்னும் அதிகம்.

சேகர் வந்து பணம் கேட்டபோது சங்கரன் கடனாகத்தான் கொடுக்க முடியும் என்று கண்டிப்பாகக் கூறி விட்டார். பணமுடையின் காரணமாகச் சேகரும் அப்பொழுது ஒப்புக் கொண்டான். ஆனால் லீலாவின் விவாகத்துக்குப் பிறகு கடனை அடைக்க வேண்டுமே என்ற கவலையே சேகருக்



கும் சீதாவுக்கும் தோன்றவில்லை. சங்கரன் பணத்தைப் பற்றி மறப்பவராக இல்லை. கடிதங்கள் மூலமாகவும் ஆட்கள் மூலமாகவும் பணத்தைக் கேட்டு அனுப்பினார். ஓரொரு சமயம் நேரிலும் வந்தார். ஆனால் சேகரும் சீதாவும் ஏதோ காரணங்கள் சொல்லி அனுப்பி விட்டார்கள். இன்று கண்டிப்பாகப் பணத்தை வாங்கிக் கொண்டு போகச் சங்கரன் தங்கள் வீட்டுக்கு வரப் போவதாகச் சிநேகிதி அனுசூயாவின் மூலம் சீதா அறிந்தாள்.

"என்ன, நான் சொல்வது புரிகிறதா? வேண்டுமென்றே பிடிவாதத்துடன் நம்மிடமிருந்து பணத்தை வாங்கிவிட உங்கள் அண்ணா பார்க்கிறார். இல்லாவிடில் அவருக்குப் பணத்துக்கு என்ன முடை? இந்தப் பீத்தல் முந்நூறு ரூபாய் இல்லாமலே அவர் எவ்வளவோ சுகமாக இருக்கலாம். இனாமாகக் கூட இந்தப் பணத்தை அவர் உங்களுக்குக் கொடுக்கலாமே!" என்றாள் சீதா.

"சே, சே அப்படியெல்லாம் சொல்லாதே. என்னைவிட அவனுக்குச் சம்பளம் குறைவு."

"சம்பளம் குறைவாக இருந்தால் என்ன? குழந்தை குட்டி என்று ஒன்றுமே கிடையாது. அவருக்கு என்ன செலவு? நம் லீலாவையே தன் குழந்தையாக நினைத்துக் கூட அவர் அந்தப் பணத்தைக் கேட்காமல் இருக்கலாமே!" என்று வாதாடினாள் சீதா.

ஆனாலும், "எல்லாம் கிடக்கட்டும். அவன் வந்தால் பணம் கொடுக்க முடியாது என்று சண்டை போட முடியுமா? பணம், கடனாகக் கேட்டு வாங்கியது ஆயிற்றே!" என்றான்.

"நான் சண்டையா போடச் சொன்னேன்? எல்லாவற்றுக்கும் ஒரு வழி இருக்கிறது. வருபவர் வாயைத் திறந்து பணம் கேட்க வழி இல்லாமல் கூடச் செய்து விடலாம்."

"தேவலையே, அப்படிப்பட்ட மந்திரம் என்ன வைத்திருக்கிறாய்?"

உடனே சீதா தன் மனத்தில் தயாராக வைத்திருந்த உபாயத்தைக் கூறினாள். சங்கரன் வரும்போது சேகர் கடுமையான ஜுரத்தால் தவிப்பவன்போல் நல்ல நாடகம் ஒன்று நடிக்க வேண்டும். அதைப் பார்த்துச் சங்கரன் கல்லாகச் சமைந்து வந்த காரியத்தையும் மறந்து, உள்ளம் உருகிவிடுவான். சகோதரர்கள் ஒருவரை யொருவர் நேரிடையாகப் பார்த்து மாதம் ஒன்றாகி விட்டதால் ஜுரமாக நடிக்கச் சந்தர்ப்பம் இருக்கிறது.

"பிளான் எல்லாம் சரிதான். ஆனால் எனக்கு ஜுரமென்று அண்ணா நம்ப வேண்டுமே?" என்றான் சங்கரன்.

"நாம் நடிக்கிற நடிப்பில், அவர் உங்களுக்கு ஜுரமென்று நம்பிப் பாகாக உருகும்படி செய்ய வேண்டும்."

"சரி! எனக்கு ஜுரம் என்று நம்புவதாகவே இருக்கட்டும். ஆனால் அவன் பணமே கேட்காமல் போய் விடுவான் என்பது என்ன நிச்சயம்?" என்று கேட்டான்.

"ராம ராமா, உங்களுக்கு இவ்வளவு சந்தேகமா? சகோதர பாசம் நடுவில் குறுக்கிட்டு உங்களிடம் பணத்தைக் கேட்கும்படி செய்யாது. சகோதர பாசத்துக்கு அவ்வளவு மகத்துவம்" என்று அடித்துப் பேசினாள் சீதா.

சேகர் அவள் பேச்சில் மயங்கி விட்டான். அண்ணா சங்கரன் வரும்போது ஜுரமாக நடிக்கத் திட்ட மிட்டான்.

வாசலில் செருப்புச் சத்தம் கேட்டது. உடனே சீதா அவசரம் அவசரமாகச் சேகரைக் கட்டிலில் படுக்கச் சொல்லி மேலே கம்பளியைப் போர்த்தி விட்டாள். தலைக்கு மப்ளரைக் கட்டி விட்டாள். தன் முகத்தையும் அதற்கேற்றபடி சோகமாக மாற்றிக் கொண்டு சங்கரனை வரவேற்றாள்.

"ச், அம்மா, அ..ப்பா!" சேகர் தலையில் கையை வைத்தபடி முனகினான்.

சங்கரன் மெதுவாக உள்ளே நுழைந்து, "ஐயையோ, என்னடா இது?" என்று கேட்டுக்கொண்டே அருகில் இருந்த நாற்காலி ஒன்றைக் கட்டிலுக்கு அருகில் இழுத்துப் போட்டுக் கொண்டு உட்கார்ந்தார்.

சேகர் பதில் சொல்லுவதற்குப் பதிலாக மேலும் முனக ஆரம்பித்தான். சீதாதான் பதில் சொன்னாள்: "இரண்டு நாட்களாகத் திடீரென்று ஒரே தலைவலியும் ஜுரமுமாக இருக்கிறது. கண்ணைத் திறக்கவில்லை. இரவு முழுவதும் தூக்கமில்லை." சீதாவின் முகத்தில் சோகக் கோடுகள் மேலும் பரவின.

"அட, ராமா! எனக்கு ஒரு வார்த்தை சொல்லி அனுப்பி இருக்கக் கூடாதா? சேகர் நீ இப்படிச் சும்மா இருந்தால் பிரயோசனமில்லை. முதலில் அந்த டாக்டர் வாசுதேவனை அழைத்து வந்து காட்ட வேண்டும். அவர்தான் இந்த ஊரில் பெரிய டாக்டர். பணத்தைப் பற்றி யோசிக்கக் கூடாது. இரு, நான் போய்க் கூப்பிட்டுக் கொண்டு வருகிறேன்" என்றார் சங்கரன்.

"அண்ணா! நீ கஷ்டப்படுத்திக் கொள்ளாதே! க்..ஹா...அப்பா...ஐயோ தலையைப் போட்டு இடிக்கிறதே...அண்ணா, டாக்டர் வாசுதேவன்தான் வந்து என்னைப் பார்த்தார். ஆ...அம்மா!..." சேகர் முக்கி முனகிக் கொண்டே கூறினான்.

"ஏண்டா அப்பா, நான் வேண்டுமானால் கொஞ்சம் தலையைப் பிடித்து விடட்டுமா?... மருந்து வாங்கிச் சாப்பிட்டாயா? சீதா, சேகருக்கு மருந்து கொடுத்தாயா? என்ன டெம்பரச்சர் இருக்கிறது?" என்று கூறியபடி சங்கரன் சேகரைத் தொட்டுப் பார்த்தார்.

சீதா சட்டென்று சமாளித்துக் கொண்டபடி "டெம்பரச்சர் நேற்றுக் காலை 104° கூட ஏறிவிட்டது. நேற்று மாலையும் இறங்கவில்லை. இன்று காலை 103°க்கு இறங்கியது. நீங்கள் வருவதற்குச் சற்று முன்தான் மறுபடியும் டெம்பரச்சர் வைத்துப் பார்த்தேன். 'நார்மலை' எட்டியிருக்கிறது. அதுவே இப்பொழுது ஒரு திகிலாகி விட்டது. டாக்டர் கொஞ்சம், கொஞ்சமாகத்தான் டெம்பரச்சர் இறங்க வேண்டுமென்றும் திடீரென்று நார்மலுக்கு வந்தால் அபாயம் என்றும் சொன்னார்" என்றாள்.

சங்கரன் கலங்கிப் போய் விட்டார். "அப்படியானால் நான் இப்பொழுதே போய் டாக்டரைக் கேட்டுவிட்டு வருகிறேன்" என்று கூறிவிட்டுக் கிளம்பினார்.

இப்பொழுதும் சீதாதான் பதில் கூறி அவரைப் போகவிடாமல் தடுத்தாள். "வேண்

குடும்ப நண்பன்

# டஸ்ஸரூல்

இருமலுக்கும் புண்பட்ட தொண்டைக்கும்

---

# B. I. S. N. கம்பெனி லிமிடெட்



## S. S. ரஜுலா

**சென்னை - நாகப்பட்டினம் - பினாங்கு - சிங்கப்பூர்**

மேற்படி கப்பல் கீழ்க்கண்ட தேதி வாக்கில் புறப்படும்

| சென்னையிலிருந்து | நாகப்பட்டினத்திலிருந்து |
|---|---|
| 1957 ஜூன் 19 | 1957 ஜூன் 20 |

பிரயாணத்திற்குரிய தஸ்தாவேஜுகளைக் காண்பித்து வேண்டிய அளவு "பங்க்" வசதியுள்ள டிக்கட்டுகளையும், 'பர்த்' வசதியற்ற டிக்கட்டுகளையும், "சாப்பாட்டுடனோ" அல்லது "சாப்பாடின்றியோ" எங்கள் கம்பெனியின் ஏஜெண்டிடமிருந்து நேரடியாகப் பெற்றுக் கொள்ளலாம்.

'ரஜுலா' கப்பல் சமீபத்தில் புதுப்பிக்கப் பட்டிருக்கிறது. பங்க் வசதி பெற்றுள்ள பிரயாணிகளும் பெர்த் வசதியற்ற பிரயாணிகளும் இப்பொழுது நிறைய விளக்கு வசதிகளையும், அதிகப்படியான பங்காக்களையும், புதுக் காற்று புளோயர்களையும், ஷவர், வாட்டர்கூலர் ஆகிய வசதிகளையும், சைவ உணவுக்காரர்களுக்குத் தனி வசதிகளுடன் கூடிய ஒரு பெரிய சாப்பாடு அறையும் பெறலாம். எல்லா பிரயாணிகளும் தமிழ் மற்றும் ஹிந்தி சினிமா படங்களையும் பார்க்கலாம்.

பினாங், போர்ட் ஸ்வெட்டன்ஹாம், சிங்கப்பூர் முதலிய இடங்களுக்கு நேரடியாக ஏற்றிச் செல்லவும் சிங்கப்பூரில் கப்பல் மாற்றி பாங்காக்கிற்கு அனுப்பவும் சரக்குகள் ஏற்றுக் கொள்ளப்படும்.

*பிரயாணிகள் மற்றும் சாமான்கள் ஏற்றுமதி விவரங்களுக்குத் தயவுசெய்து எழுதவும்*

**பின்னி & கோ., (மதராஸ்) லிமிடெட்**
**7, அரமனைக்காரத் தெரு, சென்னை-1**

**மதுரா கம்பெனி பிரைவேட் லிமிடெட்**
**முதல் லைன் பீச் ரோடு, நாகப்பட்டினம்**

**அருள் வாக்கு**

நாம் மனிதர், உலகில் வேறு பல பிராணிகளும் இருக்கின்றன. அவையெல்லாம் குறுக்காக வளர்ந்திருக்கின்றன. மனிதர்கள் மாத்திரம் மேல் நோக்கி வளர்ந்திருக்கிறார்கள். மனிதன் மேல் நோக்க வேண்டும் என்பதே ஈசுவரனுடைய உத்தேசம்.

**ஸ்ரீ சங்கராச்சாரியார், காமகோடி பீடம்**

டாம், வேண்டாம். இப்பொழுது நீங்கள் வீணாக அலைய வேண்டாம். டாக்டர் இப்பொழுது கிடைக்க மாட்டார். தாம்பரம் டிஸ்பென்ஸரிக்கு இந்த நேரத்தில் போய் விடுவார். ஒருவேளை அவர் கொடுத்த மருந்தினாலும் இப்படிச் சட்டென்று இறங்கி ஏறினாலும் ஏறலாம். பாவம், நீங்கள் வீணாகப் போக வேண்டாம்'' என்றாள்.

இதற்குள் சேகர் அஷ்ட கோணங்கள் கோணிக் கொண்டான்.

சங்கரனுக்கு உண்மையில் கண்களில் ஜலம் கூட வந்து விட்டது. தன் இடது கையினால் கண்களைத் துடைத்துக்கொண்டார். ''ஐயோ, சேகர், உன் கஷ்டத்தை என்னால் பார்க்கவே முடியவில்லையே. ஒரு நாள்கூடத் தலைவலி ஜுரமென்று நீ படுத்துக்கொள்ள மாட்டாயே! உனக்குப் போய் எப்படியடா இப்படி வந்தது? எந்தப் பாவி திருஷ்டி போட்டானோ!'' என்று அங்கலாய்த்தார்.

வந்த விஷயத்தைக் கூறாமலே அவர் புறப்படும்போது கீதா மரியாதைக்காக ''வீட்டில் மன்னி சௌக்கியம்தானே? நீங்கள் உடம்பு ஒன்றுமில்லாமல் இருக்கிறீர்களா?'' என்று கேட்டு வைத்தாள்.

''அதை ஏனம்மா கேட்கிறாய்? பத்து நாட்களாக இந்த வலது கையில் தான் பாரிசவாயு மாதிரி இருக்கிறது. கையை நீட்டி மடக்க முடியவில்லை. உன் மன்னிதான் உருவி விடுகிறாள்'' என்றார் சங்கரன்.

ஒரு நிமிஷம் தன் நடிப்பை மறந்து சேகர் சகோதரனின் கைகளைப் பார்த்தான். ஆம்! அவர் கூறியது உண்மையாகத்தான் இருந்தது. வலது கை தனியாக ஒட்ட வைத்துத் தொங்கியதுபோல் அசைவு இல்லாமல் இருந்தது. நீட்டவும் முடியாமல், மடக்கவும் முடியாமல் சங்கரன் தவித்துத் திண்டாடிக் கொண்டிருந்தார்.

''என்ன அண்ணா இது. சாப்பாடு கூடச் சாப்பிட முடியாது போலிருக்கிறதே!'' என்று சேகர் கேட்டே விட்டான்.

''ஆமாண்டா, இலை போட்டுச் சாப்பிடுவதில்லை. கரைத்து டம்ளரில் சாப்பிடுகிறேன்.''

''ஐயையோ, நிஜமாகவா? அப்படியானால் டாக்டரிடம் காட்டக் கூடாதோ? உருவி விட்டால் போகாதே'' என்று கீதா ரொம்பவும் உருகுவதுபோல் நடித்துக் கேட்டாள்.

''காட்டாமல் என்னம்மா? காட்டினேன். இதெல்லாம் மலையாளத்துக்குப் போய் நவரக்கிழி சிகித்சை எடுத்துக் கொண்டால் தான் தீருமாம். அங்கு போய்ச் சிகித்சை எடுத்துக் கொள்ளச் செலவுக்குப் பணம் வேண்டாமா?... இப்போதெல்லாம் அதைப் பற்றி என்ன! நீங்கள் கவலைப்படாதீர்கள். நான் போய் வரட்டுமா? உடம்பைப் பற்றிச் சொல்லி அனுப்பு'' என்று கூறிய சங்கரன் சேகரையே சிறிது நேரம் பார்த்தார். சேகரின் நடிப்பை அவர் உண்மை என்றே எண்ணியதால், ரத்தபாசத்தின் காரணமாகச் சேகரின் உடம்புகூட இளைத்து விட்டதுபோல் அவர் கண்களுக்குப் புலப்பட்டது.

சங்கரன் சென்ற பிறகு சேகர் கம்பளியைத் தூக்கி எறிந்தான். தலையில் கட்டியிருந்த மப்ளர் மூலையில் போய் விழுந்தது. மின்சார விசிறியை நன்றாகச் சுற்றவிட்டு அதன் கீழ் வெற்றிப் புன்னகையுடன் உட்கார்ந்தான். கீதா கதவைத் தாளிட்டுவிட்டு வந்தாள்.

''தேவலையே, கீதா! உன்னுடைய தந்திரம் பலித்து விட்டதே!''

''பார்த்தீர்களா, இந்த உபாயத்தால் எவ்வளவு வெற்றி என்று? பணம் கேட்க வந்தவர் அதைப் பற்றிப் பிரஸ்தாபிக்கக்கூட இல்லை. உங்கள் நடிப்பும் அபாரமாகத்தான் இருந்தது. பாவம், உங்கள் அண்ணாவின் கண்களில் கண்ணீர்கூட வந்து விட்டது. என்ன இருந்தாலும் ரத்தபாசமில்லையா?''

சேகருக்குச் சட்டென்று தன் ரத்தத்தில் ஏதோ ஒரு உணர்ச்சி மின்னோட்டம் ஓடுவது போல் இருந்தது.

கீதாபாட்டுக்கு மேலும் சொல்லிக் கொண்டே போனாள்: ''ரத்தபாசத்தின் காரணமாகக் கல்லான மனம்கூட ஒரே நிமிடத்தில் கரைந்து உருகிவிடும். உங்களுக்கு ஜுரம் என்று கேட்டதும் உங்கள் அண்ணாவின் கல்லான மனம் எப்படி உருகி விட்டது, பாருங்கள். சாதாரணமாகவே ரத்தபாசத்தின் காரணமாக அண்ணன் தம்பிகள் இணைந்து விடுவார்கள். உங்கள் அண்ணாவோ தன் கையினாலேயே உங்களை ஊட்டி வளர்த்தவராயிற்றே!''

சேகருக்குச் சட்டென்று பழைய கால நிகழ்ச்சி ஏடுகள் தோன்றி மறைந்தன. இதே சங்கரன், சேகருக்கு உண்மையாகவே குழந்தைப் பருவத்தில் ஒரு சமயம் நல்ல ஜுரம் வந்திருந்தபோது, தன் மடியிலேயே இரவு பகலாகப் படுக்க வைத்துக்கொண்டு உடம்பு நேராகும் வரையில் வைத்திருந்தார். சேகருக்குக் கஞ்சி யென்றால் பிடிக்காது. சங்கரன் தான் மெதுவாக இடது கையினால் அவன் தலையைக் கோதிக் கொடுத்து வலக்கையினால் மெதுவாகக் கஞ்சியை வாயில் ஊற்றியபடி ஆயிரம் கதைகள் சொல்வார்... அதுவும் ரத்த பாசத்தின் காரணமோ?

''என்ன, எந்தக் கோட்டையைப் பிடிக்கப் பலத்த யோசனையில் ஆழ்ந்து விட்டீர்கள்? நான்தான் தீர்மானமாகச் சொல்கிறேனே? ரத்தபாசம் என்பது அழிக்க முடியாத, ஆழம் காணாத சமுத்திர ஜலம் போன்றது. அதனால் சாதிக்கக் கூடாததையும் சாதித்து விடலாம். பொய்யானாலும் உண்மையென்று நம்பும்படி செய்து விடலாம்.'' கீதா தன்னுடைய வெற்றியின் போதையில் தற்பெருமையுடன் கூறிக்கொண்டே போனாள். அவளுடைய ஒவ்வொரு வார்த்தையும் சேகருடைய ரத்தத்தைக் கலக்கியது. ஒரு சமயம் குழந்தைப் பருவம் தாண்டி இளமைப்

# தெரியுமா உங்களுக்கு?

உலகப் புகழ் பெற்ற கதைகளில் பூதம்போல் பிரம்மாண்டமான ராக்ஷச மனிதர்கள் இருந்ததாகக் கூறப்படுகிறது அல்லவா? அவை வெறும் கட்டுக் கதைகள் அல்ல, உண்மையாகவே அத்தகைய மனிதர்கள் இருந்திருக்கக்கூடும் என்பது விஞ்ஞான ஆராய்ச்சி நிபுணர்களின் முடிவாகும். மூளைக்குக் கீழே 'பிட்யூடரி' என்ற நுட்பமான கோளம் இருக்கிறது. அதிலிருந்து உற்பத்தி செய்யப்படும் ஹார்மோன் ரசத்தினால், எலும்புகள் ஆச்சரியமாக வளர்கின்றன. மேற்படி ரசத்தைக் கொண்டு சாதாரண மனிதர்களை ராக்ஷச மனிதர்களாக மாற்றி விடலாம் என்று விஞ்ஞான நிபுணர்கள் கூறுகின்றனர். வளர்ச்சியற்றுக் கிடந்த சிறிய எலிகளை, அவர்கள் அந்த ரசத்தினால் மிகப் பெரிய எலிகளாக மாற்றி விட்டார்கள். அந்த எலிகள் பயங்கரமான ஒரு வகை மிருகங்களைப் போல் காட்சியளிக்கின்றனவாம். பிட்யூடரி கோளத்தை அகற்றி விட்டால், எலும்பு வளர்ச்சியும் உடல் வளர்ச்சியும் அறவே நின்றுவிடுகின்றன. முறிந்த எலும்புகளுக்கும் ஹார்மோன் ரசம் பலம் அளிக்கும் சக்தி வாய்ந்ததாக இருக்கிறது. அணுகுண்டுகளைச் சிருஷ்டித்த விஞ்ஞானிகள் இந்த ரசத்தைக் கொண்டு ராக்ஷச ஜாதி மனிதர்களைச் சிருஷ்டிக்க முற்படலாம். ஒரு வேளை விஞ்ஞானிகள் தங்கள் நாட்டில் உள்ள சாதாரணச் சிப்பாய்களை ராக்ஷச மனிதர்களாக மாற்றி இராணுவத்தைப் பலப்படுத்த முற்படலாம். கற்பனைக்கு எட்டாத விதத்தில் விஞ்ஞானம் வளர்ச்சி அடைந்துவரும் இந்தக் காலத்தில் அவ்விதம் நிகழ்ந்தாலும் அதைக் குறித்து ஆச்சரியப்படுவதற்கில்லை. ஆனால், அதிலும் எதிர்பாராத கஷ்டங்கள் ஏற்படக் கூடும் என்று கருதுகிறார்கள். அவ்விதம் வளரும் மனிதனின் பலம் அதிகமாவதுடன், மிருகத்தனமும் அதிகமாகிறதாம். அதே ரசத்தைக் கொண்டு மிருகங்களின் வளர்ச்சியையும் அதிகமாக்கி விடலாம். அத்தகைய மனிதர்கள், மிருகங்களின் சந்ததிகள் எப்படியெல்லாம் இருக்கும் என்றும் சொல்லுவதற்கில்லை. அணு குண்டு ஆராய்ச்சி, ஹைட்ரஜன் குண்டு உற்பத்தியில் வந்து முடிந்திருப்பது போல், மேற்படி ஆராய்ச்சியின் முடிவு எப்படியாகுமோ என்ற திகிலும் மானிட வர்க்கத்தின் நலத்தில் அக்கறை கொண்ட விஞ்ஞானிகளுக்கு இருந்து வருகிறது. அது எப்படியாயினும், இந்த ஆராய்ச்சியின் பயனாகக் கொடிய நோயான பிளவைக்கு மருந்து கண்டு பிடிக்கப்படலாம் என்றும் ஆராய்ச்சியாளர்கள் கருதுகிறார்கள். ஜீவ அணுக்களின் வளர்ச்சிக்கு ஹார்மோன் ரசம் உதவுகிறது அல்லவா? ஜீவ அணுக்களின் கோளாறினாலேயே பிளவை நோய் ஏற்படுகிறது. எனவே, இவ்விரண்டுக்கும் சம்பந்தம் இருக்கலாம் என்பதும், இது பற்றிய ஆராய்ச்சியின் மூலம் வைத்திய நிபுணர்களைத் திக்குமுக்காடச் செய்யும் பிளவை நோயைக் கட்டுப்படுத்த வழி பிறக்கலாம் என்பதும் நிபுணர்களின் கருத்தாகும்.



பருவத்திலும்கூட, விவாகமாவதற்கு முன்பு சேகர் எங்கேயோ விழுந்து கை நரம்பு பிசகிச் சாப்பிட முடியாமல் திண்டாடிய போது, சங்கரன் கடக்கடச் சாதம் பிசைந்து ரசமும், தயிரும் ஊற்றி அறுசுவை உணவு ஊட்டினது சேகருக்கு நினைவுக்கு வந்தது. சேகருக்குச் சட்டென்று அன்னம் ஊட்டிய கை எதிரே தோன்றி மறைந்தது. அந்தக் கை இன்று மடங்கி நின்று அவர் வயிற்றுக்குக்கூடச் சாப்பாடு போட இயலாத நிலைமையில் இருந்தது. 'அவர் கையைச் சிகித்ஸை செய்வதற்கு உபயோகப்படாத உன் பணமும் பணமா?' என்று மனத்தில் ஒரு குரல் எழும்பியது. அண்ணாவுக்கு இருக்கும் ரத்தபாசம் தம்பிக்கு இல்லையா? சேகரின் ரத்தம் கொதித்து அவனை எங்கோ செல்லத் தூண்டியது.

உடனே சேகர் பெட்டியைத் திறந்து, பணத்தை எடுத்துக் கொண்டு வாசல் பக்கம் ஓடினான். சீதா திகைத்து, "எதற்காக இப்பொழுது அந்த ரூபாயை எடுத்துக் கொண்டு ஓடுகிறீர்கள்?" என்று கேட்டாள்.

"பணம் அண்ணாவுக்கு, என்னை வளர்த்த அண்ணாவின் கைக்கு."

"ஐயையோ, பணம், சீமந்தத்துக்காக..."

"ச், நீ சும்மா இரு. ரத்த பாசத்தின் அருமை உனக்குத் தெரியாமல் பேசாதே!" என்றான் சேகர் தெருவில் ஓடிக் கொண்டே.

சீதா அவனைப் பார்த்து ஸ்தம்பித்து நின்ற அதே சமயத்தில், தெருவில் "அண்ணா! அண்ணா!" என்று கூப்பிட்டுக் கொண்டே ஓடி வரும் தம்பியைப் பார்த்துச் சங்கரனும் திகைத்து நின்று விட்டார்.

# இந்திய பொருள் வாங்கு கூட்டுறவைக்

தேயிலை, காப்பி, தீப்பெட்டிகள், சர்க்கரை, காகிதம், தாவர எண்ணெய்கள் இவைகளின் மீது இப்போது இருந்து வருகிற யூனியன் எக்சைஸ் தீர்வையை சிறிய அளவில் அதிகரிப்பது என்று 1957-58 பட்ஜெட்டில் உத்தேசிக்கப் பட்டுள்ளது. இந்த அதிகரிப்பு மிகவும் சிறியதே என்பதைக் கீழ்க் கொடுத்துள்ள தீர்வை ஏற்ற புள்ளி விவரங்களிலிருந்தே காணலாம்.

**தேயிலை** - ஒவ்வொரு பவுண்டுக்கும் 20 ந. பை.
**காப்பி** - ஒவ்வொரு பவுண்டுக்கும் 16.25 ந. பை.
**சர்க்கரை** - ஒவ்வொரு பவுண்டுக்கும் 5 ந. பை.
**சாதாரண எழுதும் காகிதம்** - ஒவ்வொரு கொயருக்கும் 1½ ந. பை.
**தீப்பெட்டி** - 40 குச்சிகள் கொண்ட பெட்டி ஒன்றுக்கு 9/10 ந.பை.
60 குச்சிகள் கொண்ட பெட்டி ஒன்றுக்கு 1 2/5 ந.பை.
**தாவர எண்ணெய்கள்** - ஒவ்வொரு பவுண்டுக்கும் 2 ந. பை.
**புகையிலை** - பொதுவாக ஒவ்வொரு பவுண்டுக்கும் 13 ந.பை.
(ந. பை. என்பது நயே பைசேயின் சுருக்கம்)

## கொள்ளை லாபத்தைத் தடுக்கவும்– நியாய விலையையே கொடுக்கவும்

**தேயிலையும், காப்பியும்:** ஒரு கப் தேநீர், காப்பியின் தீர்வை அதிகரிப்பு முறையே 1/3 ந. பை., ½ ந.பைக்கு மேலில்லை. இதில் சர்க்கரையின் அதிகரித்த விலையும் அடங்கி விடுகிறது. எனவே ஒவ்வொரு கப்பிலும் நேர்மையான லாபத்தை எதிர்பார்த்து உங்களுக்கு தேநீரும், காப்பியும் விற்கும் சில்லறைக் கடைக்காரர் இவைகளின் விலையை அதிகரிக்கக் காரணமே இல்லை.

**சர்க்கரை :** ஒவ்வொரு பவுண்டுக்கும் 5 ந.பை. அல்லது ஒவ்வொரு சேருக்கும் 10 ந. பை. அல்லது ஒவ்வொரு விசைக்கும் 16 ந. பை. தீர்வை அதிகரிக்கப்பட்டிருக்கிறது. சில்லறை விலையில் இதற்கு மேல் அதிகம் சேர்க்கக் கூடாது. எப்படியிருப்பினும் நீங்கள் சர்க்கரை உபயோகிப்பதைக் கொஞ்சம் குறைத்துக் கொள்ளுங்கள்.

## அன்றாட கொடுக்கல் வாங்கலில் மக்களின் நன்னல முன்னேற்றத்திற்கு

# சர்க்கார்
# வோர், விற்போரின்
# கோருகிறார்கள்

**தீப்பெட்டிகள் :** 40 குச்சிகள் கொண்ட ஒரு பெட்டியின் மேல் 9/10 ந. பை. 60 குச்சிகள் கொண்ட ஒரு பெட்டியின் மேல் 1 2/5 ந. பை. தீர்வை உயர்த்தப் பட்டிருக்கிறது. தயாரிப்பாளர்களுக்கும், வர்த்தகத் திற்கும் கணிசமான லாபத்தை ஒதுக்கிவிட்டு பார்த்தாலும் சில்லறை யாக விற்கும்போது 40 குச்சிகள் கொண்ட பெட்டியின் விலை 4 ந. பையும், 60 குச்சிகள் கொண்ட பெட்டியின் விலை 6 ந.பையும்தான் இருக்கவேண்டும்.

**காகிதம் :** சாதாரண எழுதும் காகிதத்தின் மேல் அதிகரிக்கப்பட்ட தீர்வை ஒவ்வொரு கோயருக்கும் சுமார் 1½ ந. பை. காகிதத்தின் விலை உயர்த்தப்பட்டாலும் விலையில் இதற்குமேல் அதிகம் வைக்கக்கூடாது.

**தாவர எண்ணெய்கள் :** புதுத் தீர்வையின் காரணமாக ஒவ்வொரு பவுண்டுக்கும் 2 ந. பை. உயர்த்தப்பட்டிருக்கிறது. ஆனால் கிராமங்கள், சிறு டவுன்களில் செக்குகளில் ஆட்டப்படும் எண்ணெய் அல்லது ஆண்டுக்கு 75 டன்கள் தயாரிக்கும் சிறு ரக தயாரிப்பாளரின் எண்ணெய்மீது தீர்வை விதிக்கப்படமாட்டா. எனவே இவ்வகைகளில் தயாரிக்கப்படும் எண்ணெய் மீது தீர்வை அதிகரிக்கப் படவில்லை.

நகர் பகுதிகளில் கடந்த ஆண்டில் சில தாவர எண்ணெய்கள் விலை ஒவ்வொரு பவுண்டும் 10 முதல் 20 ந.பை. வரை அதிகரித்திருக்கிறது. இதன் காரண மாக இத்தொழிலிலும் வியாபாரத்திலும் உள்ள பல்வேறு ரகத்தினருக்கும் போதுமான லாபம் ஏற்கெனவே கிடைத்து வருகிறது. எனவே ஒவ்வொரு பவுண்டிலும் அதிகரித்த இந்த 2 ந. பையை தயாரிப்பாளர்களும் வியாபாரி களும் தங்கள் லாபத்தில் ஏன் ஈடு கட்டிக்கொள்ளக் கூடாது?

**புகையிலை :** ஹுக்கா புகையிலையின் விலை ஒவ்வொரு பவுண்டுக்கும் 13 ந.பைக்கு மேல் அதிகரிக்கக்கூடாது. 10 பீடிகள் கொண்ட ஒவ்வொரு கட்டின் விலையின்மேல் 1/10 ந.பை தான் அதிகரிக்கவேண்டும். இந்திய புகை யிலையினால் மட்டுமே தயாரிக்கப்படும் ''சார்மினார்'' அல்லது ''ஷாஹி-டெக்கான்'' போன்ற சிகரெட்டுகளையே இந்த அதிகரித்த தீர்வை பாதிக் கும். 10 சிகரெட்டுகள் கொண்ட இத்தகைய ஒவ்வொரு பாக்கெட்டின் மேல் ½ முதல் 1 ந.பை. தீர்வை விதிக்கப்படும். மற்ற ரகங்களின்மேல் தீர்வை அதிகரிக்காததால் அவைகளின் விலையையும் அதிகரிக்கக்கூடாது.

## உங்கள் சிறியதோர் தியாகமும் பொது வழியமைக்கப் பெரிதும் உதவுகிறது

DA 57-46




## 18. அறநெறி

"தம்பி! ஊரிலே நல்லார்—பெரியவர் நாலு பேர் 'சரி'ன்னு ஒப்புகிறபடி நடந்துக்கிடணும் மவனே.." என்கிறார் வயதான தந்தை. உடனே குதித்தெழுகிறான் மகன் நவீனன்.

"பிறன் மதிப்புரைக்காக நான் கவலைப்படவில்லை. பிறன் சாப்பிட்டால் எனது பசிப்பிணி தீருமா? நான் ஒரு மனிதன். எனக்கொரு தன்மையுண்டு. எனக்கொரு உரிமை யுண்டு. என் உரிமையை ஒருவருக்காக நான் தியாகம் செய்ய வேண்டியதில்லை. ஒருவன் உரிமையைப்பறிக்க இன்னொருவனுக்கு அதிகாரமில்லை. ஜனநாயக தத்துவத்தை அடிப்படையாகக் கொண்டு நிர்மாணிக்கப் பட்டுள்ள இந்திய அரசியல் சட்டம் தனி நபர் ஒவ்வொருவனுக்குமுள்ள இவ்வுரிமைக்குப் பாதுகாப்பு அளிக்கிறது. நல்லார் என்றும் தீயார் என்றும் மனிதரைப் பிரித்துப் பேசுவது உயர்வு தாழ்வு என்னும் பாகுபாடுகளைப் போன்றது. ஒரே பொருளை அல்லது போக்கைச் சில காரணங்களுக்காக ஒருவன் அல்லது ஒரு சிலர் உயர்ந்தது எனக் கருதலாம். அதே பொருளை அல்லது போக்கை வேறொருவன் அல்லது வேறு சிலர் மற்றுஞ் சில காரணங்களுக்காகத் தாழ்ந்தது எனக் கருதலாம். இவன்தான் நல்லான், பெரியோன் சான்றோன் என்றோ, இவன் தான் தீயோன் என்றோ, இதுதான் உயர்ந்தது இதுதான் தாழ்ந்தது என்றோ வரையறுத்து நிச்சயித்தல் சாத்தியமல்ல. அவ்வாறு நிச்சயிக்க, வேறொருவனின் மதிப்புரையை விரும்பி ஒருவன் தனது போக்கை நிச்சயிப்பது, அவன் தனக்குத் தவதென்று சொல்லக் கூடிய அறிவும்—ஆற்றலும், சிந்தனையும் பகுத்தறிவுமில்லை யென்று ஒப்புக் கொள்வதாகும். இவ்வகைச் செம்மறியாட்டின் இனத்தில் சேர யார்தான் விரும்புவார்? இந்த அநியாயத்தை நான் எனது முழு பலத்துடன் கண்டிக்கிறேன். அவனவனுக்குமுள்ள தனியுரிமையைப் பிறனுக்காக விட்டுக் கொடுக்கும் மடமை ஒழிய நான் போராடுவேன்...." இப்படிப் பதில் சொல்கிறான் மகன் நவீனன்.

"ஆமாம், மகனே! ஜனநாயகமென்று சொன்னயே! ஒவ்வொருத்தனும் 'என் உரிமை'—'என் போக்கு'—என்று சொல்லிக் கொண்டால் ஒற்றுமை எப்படியப்பா உண்டாகும்? ஒற்றுமை இல்லாவிட்டால் ஜனநாயகம் ஏதப்பா?...." என்கிறார் தந்தை.

"இந்த அகடவிகடப் பேச்சுக்களைப் பேசவும்—செக்கு மாடு சுற்றிச் சுற்றி வருவது போன்ற முடிவில்லாத வாக்குவாதங்களில் பங்கெடுத்துக் கொண்டு எனது பொன்னுன நேரத்தை வீணுக்கவும் நான் விரும்பவில்லை" என்று பேச்சுக்கு முத்தாய்ப்பு வைக்கிறான் நவீனன்.

நாம் செய்யும் கருமங்கள், சிந்திக்கும் எண்ணங்கள், சொல்லும் சொற்கள் யாவும் ஒன்று நல்வினை அல்லது தீவினையைப் பயக்கும். தீவினை துன்பத்தையும், நல்வினை இன்பத்தையும் பயக்குவிக்குமென்பது யாவரும்—மேல் நாட்டு மெய்ஞான விஞ்ஞான மேதைகளான வசிஷ்டர்களும்—ஒப்புக் கொண்ட விஷயம். நாம் செய்யும் கருமங்கள் நல்வினைப் பயனையே யளிப்பவைகளாயிருப்பின்-அவை உயிர்களுக்கு இன்பத்தையே நல்கும். இஃது மானிடராய்ப் பிறந்தோருக்கெல்லாம் உடன்பாடாயினும், உயிர்களின் இன்னலைத் துடைக்கும் தொழிலை மேற்கொண்ட மருத்துவருக்குச் சிறிதும் வழுவாது பிறழாது கடைப் பிடித்தொழுகுதல் முக்கியத்திலும் முக்கியமாகும். இன்பம் தரும் செயல்களெல்லாம் அறத்தின்பாற் பட்டவையாகும். அறநெறி பிடித்தொழுகுவதால் மனத்தூய்மை யுண்டாகும்; மனத்துடன் இரண்டற்ற தொடர்பு பெற்ற உடலும் ஆரோக்கிய நிலையில் நிற்கும். ஆகவே ஒவ்வொருவனும் அறஞ் செய விரும்புவது அவசியமென்று தமிழ்ச் சித்தர் தென்மொழியில் ஆற்றிய வைத்திய நூல்களும், ஒவ்வொருவனும் தர்மபரனுயிருத்தல் வேண்டுமென்று வடமொழியில் வகுத்த வைத்திய நூல்களும் போதிக்கின்றன.

இதற்காக இவர்கள் வகுத்துள்ள நெறிகளில் வடமொழி நூல்கள் வலியுறுத்தும் முதல் நெறி "**பந்த்யா கல்யாண மித்ராணி ஸேவேத!**" என்பதாகும். உலகத்து வாழ் உயிர்களனைத்துக்கும் தமது அன்பைச் சொரியும் நல்லார்—எல்லோ

ரும் இன்புற்று வாழவேணு மென்ற லட்சியத்தையே குறிக்கோளாக ஏற்றுத் தம் வாழ்க்கைத் தரத்தை வகுத்துக் கொண்ட நல்லோர் உலகம் யாவற்றுக்குமே மித்திரர் — நன்மை பயக்கும் கல்யாண மித்திரர். இவர்களுடன் அன்பும் பணிவும் மிளிரத் தொடர்பு பெற்றிருத்தல் வேண்டும். '' நல்லாரைக் காண்பதுவும் நன்றே..'' என்று தொடங்கும் பாவிலுள்ள பொன் மொழிகள் வேதங்கள் துலக்கிய தரும தத்துவத்தைத் தெளிவு படுத்துகின்றன என்று அறியக் கிடக்கிறது. இவ் வகையில், நல்லார் தொடர்பைப் பெற்றால் மட்டும் போதாது. '' ததிதரகா :'' என்றும் விதித்து, தீயாரைத் தூரவிலக்கு என்றும் தெளிவு படுத்தியுள்ளன வடமொழி வைத்திய நூல்கள். தென் மொழியில் சமைத்த வைத்திய நூல்களும் '' உத்தமர் உறவு '' என்பதைத் தான் முதல் விதியாக ஒரு தர்ம பரனுக்குத் தெரிவிக்கின்றன.

உத்தமர் உறவு: உத்தம குணசீலரான நல்லாருடன் இணங்கி நேசித்து, அவர்களோடு அன்புடன் கூடி வாழ்தல் நலம். தீயவருடன் கலவாமல் தான் விலகி இருப்பதும் அவசியம்.

தீக் குணங்களை நீக்குதல்: மனத்தாலும் மொழியாலும் செயலாலும் நாம் பத்துவித தீமைகளைப் புரியக் கூடும். இவற்றை அறவே நீக்கவேண்டு மென்பது அறநெறியின் இரண்டாவது விதி. கொலை செய்ய நினைத்தல், காமபற்று, கண்டதை யெல்லாம் தான் பெற வேணுமென்று விரும்பும் பேராசை இம் மூன்றும் மனத்தின் தீக் குணங்கள். பொய் சொல்லல், கோள் சொல்லல், சினந்து - கடுசொல் பேசல், பயனில சொல்லல்—இந் நான்கும் மொழியின் தீக்குணங்கள். களவாடல், வீணான தொழில் புரிதல், கொலை செய்தல் இவை செயலின் தீக்குணங்கள்.

நலிந்தார்பாற் கனிவு: வறுமை, உடற் பிணி, மனத்துயரங்களால் நலிந்தார்க்கு நாம் நமது சக்திக்கியன்ற அளவில் கனிந்துதவுதல், அடுத்த விதி.

மன்னுயிரில் தன்னுயிரைக் காணல்: ஈ, எறும்பு, புழு பூச்சி முதலிய அஃறிணை உயிர்ப் பொருள்களிலும் தன்னுயிரிலுள்ளதே போல் உயிரினுக்குயிராய் நிற்கும் எங்கும் நிறைந்த பரம்பொருள்களையும் தன்னுயிரைப் போலவே பாதுகாத்தல் வேண்டும்.

வழிபாட்டுக் குரியோர் : — தேவதைகள், பசுக்கள், அந்தணர், வயதாலும் அறிவாலும் ஆசாரத்தாலும் மேம்பட்டவர்கள், வைத்தியன், அரசன், விருந்தினர் ஆசான் ஆகியோர் நமது வழிபாட்டுக்குரியவராவர்.

இரந்தார்க்கிலை எனுமை: எளிந்து வந்திரந்தவர்க்கு 'இல்லை' என்று சொல்லாமல் இயன்றதை ஈதல் வேண்டும். ஈவதைக் கனிவுடன் ஈதல் வேண்டும், அவமதிப்பாய்ப் பேசி வேண்டா வெறுப்புடன் எரிந்து விழுந்து கொடுத்தனுப்புதல் கொடிய பாபம்.

பகைப்போருக்கும் நன்மை செயல்: தனக்குப் பகைவனென்போரே இல்லாமலிருக்கும் பண்பு பெற்றிருப்பினும், தன்னைப் பகைத்துத் தனக்கு எண்ணற்ற இன்னல்களைப் புரியும் கொடிய தீயோனாயினும், அவனுக்கும் உதவி செய்திடும் இயல்பைப் பெருக்கிக் கொள்ளல் வேண்டும்.

மனத்திட்பம்: செல்வம் வந்தெய்திடினும் வறுமையே வந்திடினும் கெக்கலித்தலோ—சோர்வடைதலோ இன்றிச் சமநிலையில் புத்தியுள்ளவனா யிருத்தல் அவசியம்.

அழுக்காறு அகற்றிடல்: உயர்நிலை, அதை அடைந்தாரைக் கண்டு பொறாமை கொண்டு மனம் வெதும்புதல் கூடாது. அவரைப் போல, அந்நிலையையடைய நாம் போதுமான முயற்சி செய்யவில்லை என்ற உண்மையைத் தெளிந்து ஆற்றாமையைத் தவிர்த்தல் வேண்டும்.

ஆரோக்கிய நிலையைத் தாங்கி நிற்கும் நான்கு தூண்களைப் பற்றியும் விளக்கியாயிற்று.

பிறவியின் பயன் நான்கில் 'வீடு' தான் கிடைத்தற்கரிய பெரும் பேறு. இதை ஈசனருளால்தான் பெற முடியும். ஈசனருளைப்பெற சரியை கிரியை யோகம் ஞானம் பக்தி பிரபத்தி எந்த உபாயத்தை அனுஷ்டிப்பதாயினும் உடல் மனம் இரண்டிற்கும் ஆரோக்கியம் அவசியம்.

இந்த ஆரோக்கியத் திருக்கோயிலின் வெளிப்புறக் கோபுர வாயில்தான் விஞ்ஞானம். அதைக் கடந்த பின் வெளிப்புறப் பிராகாரம் அங்குள்ளமண்டபங்கள் அவற்றின் சிற்ப சித்திரங்களைக் காண்பதோடு நின்று விடாமல், அப்பிராகாரத்தையும் கடந்து உள்ளே சென்றால் கர்ப்பக் கிருஹத்தின் வாயிலென இருப்பது மெய்ஞ்ஞானம். இக் கதவு திறந்தால் தான், மெய்ஞானம் பிறந்தால்தான்— ஈசனின் தரிசனம்; பிறவிப் பயன்களில் இங்குள்ள மூன்றையும் பின்புள்ள வீடென்னும் பேற்றையும் பெறல் சாத்தியமாகும். விஞ்ஞானம் மெய்ஞானம் இரண்டையும் பெற்று-அறநெறியைக் கடைப்பிடித்தல்தான் ஆரோக்கியத்தை நிலைநிறுத்த உதவும் உபாயம்.

# பாவப் பிரிவினை

எஸ். பூமிநாதன்

பாத்திரங்கள் :

தாமோதரன்
தரணிபதி
ரங்கதுரை
சௌந்திரவடிவு
கைலாசம்

## காட்சி 1

[பூங்குளம் ஒரு கிராமம். அங்கே ஒரு வீடு. காலை எட்டு மணி. சகோதரர்கள் இருவர் பேசிக் கொண்டிருக்கிறார்கள்.]

**தாமோதரன்** (நிதானமாக): தரணி! நன்றாக யோசித்துத்தான் இந்த முடிவுக்கு நீ வந்திருக்கிறாயா ?

**தரணிபதி :** ஆமாம் அண்ணா! படித்தவன் விவசாயம் பார்ப்பது நாகரிகமாகாது என்று கருதியது என் முதல் தவறு. ஊர்ஊராகச் சுற்றித் திரிய வேண்டுமென்ற ஆசையில் ராணுவத்தில் சேர்ந்தது இரண்டாவது தவறு. அங்கிருந்து விடுபட்டு வந்தபிறகாவது கிராமத்தில் தங்கினேனா?

**தாமோதரன் :** (குறுக்கிட்டு) பட்டணத்தில் ஒரு நண்பன் இருப்பதாகச் சொன்னாய். போய்ப் பார். சென்னையிலே வேலை கிடைக்கலாம் என்றேன். நீயும் போனாய். உன் திறமைக்குத் தகுந்த வேலையும் கிடைத்தது. கை நிறையப் பணமும் சம்பாதித்தாய். (மெதுவான குரலில்) அதுவும் தவறா, தம்பி?

**தரணி :** என் மூன்றாவது தவறே பட்டணம் போனதுதானே, அண்ணா?

**தாமோ :** அப்படியா?

**தரணி :** எல்லாவற்றையும் காட்டிலும் பெரிய தவறு கல்யாணம் செய்த பிறகும் பட்டணத்திலேயே தங்கியது. அங்கேயே குடித்தனம் நடத்தியது !

**தாமோ :** ஓ! அதுவும் தவறுதானா?...ம்... அப்புறம்...?

**தரணி :** (அவரைப் பாராமல், தரையைப் பார்த்தபடி உறுதி தொனிக்கும் குரலில்) மதராஸுக்குப் போனதும் வேலைக்கு ராஜினாமா கொடுத்துவிட்டுச் சௌந்திரவடிவோடு திரும்புவேன். வந்ததும் பண்ணையைப் பார்க்க ஆரம்பிப்பேன். வடிவுக்கும் அதில் இஷ்டந்தான் அண்ணா !

**தாமோ :** (தம்பியை உற்றுப் பார்த்து) இதற்கெல்லாம் காரணமாக நான் ஏதாவது ஒரு பெரிய தவறு செய்திருக்க வேண்டும் !

**தரணி :** இல்லை அண்ணா! பட்டாளம், பட்டணம் என்று அலைந்தது போதும் என்று பார்க்கிறேன். வேறொன்றுமில்லை.

**தாமோ:** தம்பி, தரணி! மனசில் இருப்பதை மறைத்துப் பேசுகிறாய்.

**தரணி :** (தலையை அசைத்து) ஹூம்!..ம்... இல்லை, அண்ணா !

**தாமோ :** (சிறிது யோசனையில் ஆழ்ந்த பிறகு) ..உன் இஷ்டம்... (தனக்குள்) சரியான சமயத்தில் எனக்கு நஷ்டம் அல்லவா ஏற்படுகிறது !

**தரணி :** அண்ணா! என்ன சொல்கிறீர்கள்?

[தாமோதரன் பதில் சொல்லாமல் நெஞ்சைத் தடவுகிறார். மெல்ல இருமுகிறார்.]

**தரணி :** (பரிவு நிறைந்த குரலில்) பார்த்தீர்களா? உங்களுக்கு இந்தக் களைப்பும் இருமலும் ஒரு பக்கம்; அந்த பிராஞ்ச் போஸ்ட் மாஸ்டர் உத்தியோகம் மறு பக்கம்: இடையே காடு கரையைப் பார்க்கும் கஷ்டமான வேலை. இவை ரொம்பவும் பளுவானவை. அவற்றில் ஒரு பகுதியைக் குறைக்கவாவது நான் வந்தாக வேண்டும். அண்ணா! என்னை அனுமதியுங்கள்!

**தாமோ :** (தொண்டையைக் கனைத்து) ஒரு பகுதி ! ஆமாம் உன் பாகத்தைப் பிரித்து விட்டால் ஒரு பகுதிதான் ! (தம்பியை உற்றுப் பார்க்கிறார்.)

**தரணி** (நிதானமாக): எப்போதாவது பாகம் பிரித்துத்தானே ஆகவேண்டும்!

**தாமோ :** ஆமாம்....ஆமாம்! நிச்சயமாக! இத்தனை காலம் பொது நிர்வாகத்தில் இருந்தது போதும் என்ற முடிவுக்கு வந்திருக்கிறாய், நீ! அப்படியே நடக்கட்டும் !

[மேலே பேசாமல் தாமோதரன் சட்டென்று திரும்பி வீட்டுக்குள் போகிறார். அவரைக் கூப்பிட வாயெடுத்த தரணிபதியும் எதையோ நினைத்துப் பேசாமல் நிற்கிறான்.]

## காட்சி 2

[சில தினங்களுக்குப் பிறகு. சென்னையில் ஒரு தொழில் ஸ்தாபனம். அங்கே இடைவேளை ஓய்வு நேரம். தரணிபதியும் ரங்கதுரையும் பேசிக் கொண்டிருக்கிறார்கள்.]

**ரங்கதுரை** (நகைத்து): மிஸ்டர், தரணிபதி! நீங்க பட்டாளத்திலே சிப்பாய், பட்டணத்திலே மெக்கானிக், இப்ப..

**தரணி** (குறுக்கிட்டு) : ஒரு பட்டிக்காட்டிலே பண்ணை பார்க்கப் போறேன், சார் !

**ரங்க :** சார் ! உங்க திறமைக்கு நீங்க எந்த வேலையும் பார்க்க முடியும்...ஏதோ சொந்த ஊருக்குப் போறீங்க...மெட்ராஸை மறந்துடாதீங்க சார்..!

**தரணி :** கண்டிப்பா வருவேன் சார்! நீங்களும் பூங்குளம் பக்கமா வரணும்!... (நகைத்து) ஆனால், அங்கே பேபி டாக்ஸி, சைக்கிள் ரிக்ஷா இவை இல்லே !

**ரங்க** (நகைத்து): அவை யெல்லாம் எதற்கு சார்? இப்ப எல்லாம் "கிராமத்துக்குப் போவோம்" என்பதுதானே நாகரிகம்...? இனி மேல், 'நான் ஒரு கிராமத்தான்' அப்படின்னு சொல்றவங்களுக்குத் தான் மதிப்பு,



அந்தஸ்து எல்லாம் நிறைய உண்டு. பூங்குளத்துக்கு நிஜமாக வரேன்!

**தரணி:** கண்டிப்பா வரணும்! இதோ இதைப் பாருங்க...எப்படிப் பணமாக மாற்றுகிறதுன்னு சொல்லுங்க.

**[சட்டைப் பையிலிருந்து இரண்டு சிறிய காகிதங்களை எடுத்து ரங்கதுரையிடம் நீட்டுகிறான்.]**

**ரங்க** (அவற்றைப் பார்த்து): ஓ! போஸ்டல் ஆர்டர்களா? இதுலே ஒரு தொந்தரவும் இல்லே. இங்கே இந்த இடத்திலே உங்க பெயரைப் பூர்த்தி பண்ணி எந்த போஸ்டாபீஸிலே நீட்டினாலும் பணமாயிடும்!

**தரணி:** இவ்வளவுதானா? முன்னே, பின்னே இவைகளை மாற்றியிருந்தால் அல்லவா தெரியும்! (அவற்றை வாங்கிப் பையில் வைத்து) ஊரிலே யிருந்து வந்திருக்கு சார்! மாற்றிப் பணத்தைக் கொண்டு போகணும்.

## காட்சி 3

**[இரண்டு வருஷங்களுக்குப் பிறகு. பூங்குளத்தில் தரணிபதியின் வீடு.]**

**தரணிபதி** (தலையை அசைத்து அழுத்தமான குரலில்): உண்மை தெரிந்திருந்தால்



இப்படிச் செய்திருக்கவே மாட்டேன், வடிவு! கண்டிப்பாகச் செய்திருக்கவே மாட்டேன்!

**வடிவு:** பிறருக்கு வந்ததைப் பெரியவர் உங்களுக்கு அனுப்பினார் என்பது உங்களுக்குத் தெரிந்திருந்தால் தானே?

**தரணி:** இது பெருத்த மோசடி! (யோசனையாக) யாரோ, எவருக்கோ பணமாக அனுப்புவதற்குப் பதிலாக போஸ்டல் ஆர்டராக அனுப்புவது. அதை அண்ணா எடுத்து எனக்கு அனுப்புவது! (வறண்ட குரலில் நகைத்து) அதை என் பெயர் விலாசத்தோடும் உண்மையான என் அசல் கையெழுத்தோடும் நான் மாற்றிப் பணம் பெறுவது...அந்த மோசடி இரண்டு வருஷங்களுக்குப் பிறகு இப்படி அம்பலத்துக்கு வந்து கோர்ட்டில் நான் குற்றவாளியாக நிற்பது.....வடிவு! பட்டாளத்தில் சிப்பாயாக இருந்தவன் நான்! ராணுவ ஒழுங்கு, கட்டுப்பாடு, கண்யம் எல்லாம் தெரிந்தவன்; புரிந்து அதன்படி நடந்தவன்...(வெறுப்பு நிறைந்த குரலில்) இப்போது நான் ஒரு மோசடிக்காரன்...

**வடிவு:** இது எப்படி முடியுமோ?...

**தரணி:** தன் கையில் ஒப்புவிக்கப்பட்ட அதிகாரத்தைத் துஷ்பிரயோகம் செய்யும் ஊழியனை அரசாங்கம் சும்மா விட்டுவிடாது. வடிவு! அந்த மோசடிக்கு உடந்தையாக இருந்த என்னையுந்தான் சும்மா விடுமா? (மெல்ல நகைத்து) அண்ணன் முதல் குற்றவாளி; தம்பி இரண்டாவது குற்றவாளி! வேடிக்கை! ஏழுவருஷக் கடுங்காவல் தண்டனை கிடைக்கலாமாம் இந்தக் குற்றத்துக்கு!

**வடிவு:** (திடுக்கிட்டு) ஐயய்யோ! அப்படியானால் எங்கள் கதி?

**தரணி:** (கவலை கப்பிய குரலில்) வடிவு! அந்த நினைவுதான் என்னை வதைக்கிறது. என்ன செய்வது என்றே புரியாமல் திண்டாட வைக்கிறது. வடிவு! பாகப் பிரிவினை செய்ததால் வந்த பாவம் இது. பாவம்! (உணர்ச்சிவசப்பட்டு) நிலம் அண்ணாவின் பொறுப்பில் இருந்தபோது நடந்த வரவு செலவுக்குக் கணக்கு கேட்டேனா? அவற்றில் வந்த பணத்தை எப்படி யெப்படியோ விரயப்படுத்தினாரே, அதையாவது ஏனென்று தடுத்தேனா? அண்ணி, உயிரோடு இருந்த வரையில் பாகப்பிரிவினை பற்றிக் கருதக்கூட வில்லையே!

**வடிவு:** உங்கள் பங்கைத்தானே நீங்கள் அவரிடம் கேட்டீர்கள்?

**தரணி:** (அதைக் கவனியாமல்) அண்ணி காலமானதும் தனியாக வேலையையும், பெண் குழந்தையையும், நிலங்களையும் கவனிப்பதில் அண்ணா சிரமப்படுகிறாரே, அதைச் சிறிது குறைப்பதற்காகக் கிராமத்துக்கு வந்துவிட முடிவு செய்தேன். அந்த முடிவுக்காக இப்படி மோசடி செய்யும் பாதகனுக்கப்படுவேன் என்று இப்போதல்லவா தெரிகிறது? (நகைத்து) ஊர் வந்த அன்றே மாற்றிய பணத்தை அவரிடம் எண்ணி அல்லவா கொடுத்தேன்.

**வடிவு:** என்ன பணம் அது? ஐம்பது ரூபாய்!

**தரணி:** ம்...ஐம்பது ரூபாய்க்கு ஆசைப்பட்டா அண்ணா அந்த போஸ்டல் ஆர்டரைக் கவர்ந்தார்! இல்லே, என்னை இக்கட்டில் சிக்க வைக்கவா? அவருந்தான் இப்போது அகப்பட்டுக் கொண்டிருக்கிறாரே? ஒரே குழப்பமாக இருக்கிறது. வடிவு! பிறருக்கு உரிமையான பணத்தைத் திருட்டுத்தனமானவழியில் பெறுகிறோம் என்பதே அறியாமல், களங்கமற்ற மனத்தோடுதான் அந்தப் போஸ்டல் ஆர்டர்களை மாற்றினேன். மாற்றும் வழிகூடத் தெரியாமல் ரங்கதுரையை அல்லவா கேட்டேன்! இப்போது அதற்காகப் பலர் பார்க்க நீதி மன்றத்தில் குற்றவாளிக் கூண்டில் மோசடிக்காரனாக நிற்கப் போகிறேன்! ஏதோ சொத்துள்ளவன் என்ற காரணத்தால் ஜாமீனில் விடப்பட்டிருக்கிறேன்.

**வடிவு** (விம்மியபடி): உங்களுக்கா இதெல்லாம் வர வேண்டும்?

**தரணி:** அழாதே வடிவு! கர்ப்பிணியான உனக்கு இந்தக் கவலைமெல்லாம் கூடாது! வக்கீல் வைத்திருக்கிறோம். நடப்பது நடக்கும்.

**வடிவு:** பெரியவர் என்ன சொல்கிறார்?

**தரணி:** என்ன சொல்வார்? சஸ்பென்ஷனில் இருக்கிறார். அந்த இளைப்பும் இருமலும் அதிகமாக இருக்கிறது. அவர் முகத்தையே என்னால் பார்க்க முடியவில்லே வடிவு!

வடிவு: இப்படி ஏன் செய்தாராம்?

தரணி: அதை எங்கே அவர் சொன்னார்? அடிக்கடி 'கால வித்தியாசம்' என்கிறார், அவ்வளவுதான்! பார்ப்போம்! நீ விசாரப்படாமல் இரு. நான் போய் வக்கீலைப் பார்த்து வருகிறேன். [தரணிபதி போகிறான்]

## காட்சி 4

[வக்கீல் கைலாசத்தின் வீடு]

கைலாசம்: மிஸ்டர் தரணிபதி! அந்தப் போஸ்டல் ஆர்டர்களை நீங்கள் சென்னையில் மாற்றிப் பணம் பெற்றதற்குத்தான் சாட்சியங்கள் நிறைய இருக்கின்றன. எப்படி மாற்றுவது என்று கேட்டதற்கு ரங்கதுரை என்பவரின் சாட்சியம்; அந்தத் தொழில் ஸ்தாபனத்தில் நீங்கள் வேலை செய்ததற்குச் சாட்சி; போஸ்டல் ஆர்டர்களை மாற்றிய ஆபீஸ் குமாஸ்தாக்கள் சாட்சி என்று நிறைய இருக்கின்றன. ஆனால்......

தரணிபதி: ஆனால் என்றால்....சார்!

கைலாசம்: பிரஸ்தாபப்பட்ட போஸ்டல் ஆர்டர்களைத் தங்களுக்கு மிஸ்டர் தாமோதரன்தான் அனுப்பினார் என்பதற்கு ஆதார பூர்வமாகச் சாட்சியங்கள் இருக்கின்றனவா?

தரணிபதி: ஆதார பூர்வமாகவா?

கைலாசம்: உதாரணமாக அவர் அனுப்பியதற்கு ஆதாரமாக ஏதேனும் கடிதம்....?

தரணி: அனுப்பினார் சார்! ஆனால் இப்படி இரண்டு வருஷங்களுக்குப் பின் ஒரு வழக்குக்கு அது சாட்சியமாகத் தேவைப்படும் என்று கடுகளவாவது யூகிக்க முடிந்திருந்தால் கூட அதைப் பத்திரப்படுத்தி இருந்திருப்பேன். 'இந்தப் போஸ்டல் ஆர்டர்களைச் சென்னையில் மாற்றுவது சுலபம். மாற்றிப் பணத்தைக் கொண்டு வரவும்' என்று வெள்ளையாக எழுதியிருந்ததில் மோசடியைக் கண்டு பிடிக்கத் தெரியவில்லை, சார்!

கைலாசம்: மிஸ்டர் தரணிபதி! தாங்கள் சில சமயம் பூங்குளம் வந்திருந்தபோது அவசர வேலையாக வெளியூர் போக வேண்டியிருந்த மிஸ்டர் தாமோதரன் தங்களை அவர் ஸ்தானத்தில் 'பிராஞ்சு போஸ்ட் மாஸ்டராக' நியமித்துப் போனதுண்டு, இல்லையா?

தரணி: ஆமாம் சார்! ஆனால் இந்தப் போஸ்டல் ஆர்டர்கள் வந்த சமயம் நான் மதராஸில் அல்லவா இருந்தேன்?

கைலாசம்: அதில்லை சார்! உங்களுக்கு அந்தப் பிராஞ்சு போஸ்ட் ஆபீஸில் தாராள அனுமதி உண்டு என்பதற்காக இதைச் சொன்னேன்!

தரணி: (ஒரு மாதிரியாக) சார்!....

கைலாசம்: விஷயம் இதுதான்! நீங்கள் குறிப்பிட்ட ஒரு நாள் இரவு சென்னையிலிருந்து பூங்குளம் வந்திருக்கலாம். அண்ணனைப் பார்க்க பிராஞ்ச் ஆபீசுக்குப் போயிருக்கலாம். அங்கே, சம்பந்தப்பட்ட போஸ்டல் ஆர்டர்கள் வந்திருப்பதை எப்படியோ கண்டு பிடித்திருக்கலாம். குடும்பச் சொத்து விஷயமாகத் தமையன் மீது இருந்த கோபத்தைத் தீர்த்துக் கொள்ளவும், அவரைத் தண்டனை அடையச் செய்யவும் பிரஸ்தாப போஸ்டல் ஆர்டர்களைக் கவர்ந்து சென்னைக்கு எடுத்துப் போய் மாற்றி விருக்கலாம். ஊரிலிருந்து வந்தது என்பதற்குச் சாட்சியமாக உங்கள் நண்பர் ரங்கதுரையிடம் அவற்றைக் காட்டி மாற்றும் வழியும் கேட்டிருக்கலாம்.

தரணி: (விருட்டென்று எழுந்து நின்று) சார்! இப்படியெல்லாம் நடந்திருக்கும் என்று நினைக்கிறீர்கள்?

கைலாசம்: இல்லை, மிஸ்டர் தரணிபதி! இப்படி ஏதாவது உங்கள் அண்ணன் கோர்ட்டில் சொல்ல நினைத்தால்.....சொன்னால்?

தரணி: சொல்லலாம் சார்! ஆனால் அப்படி அவர் சொல்லக் கூடாது! மனச்சாட்சியை மறந்து தாம் அனுப்பவில்லை என்று சொன்னால், என் கதி?....

கைலாசம்: தண்டனை கிடைக்கலாம். வாதப் பிரதிவாதத்தால் தண்டனையின் அளவு குறையலாம்!

தரணி: வக்கீல் சார்! திடீரென்று போவதற்காக என்னை மன்னியுங்கள். இதோ வந்து விடுகிறேன்.

[அங்கிருந்து வேகமாக நடக்கிறான்.]



## காட்சி 5

[தாமோதரன் வீடு. மாலை ஐந்து மணி அளவு. தரணிபதியும் தாமோதரனும் இருக்கிறார்கள். தாமோதரன் நாற்காலியில் ஆடாது அசையாது அமர்ந்திருக்கிறார்.]

தரணி: (நின்றபடி அண்ணனை உற்றுப் பார்த்து) அண்ணா! உங்களைக் கெஞ்சுகிறேன். என்னைப் பார்க்கா விட்டாலும் வடிவைப் பாருங்கள். அவள் வயிற்றில் தாங்கி இருக்கும் சிசுவின் நிலையை எண்ணுங்கள். தன்னைச் சின்னம்மா என்றழைக்கக் கூடாது, அம்மா என்றே அழைத்துப் பழக வேண்டும் என்று உங்கள் திலகவதிக்கு அன்புக் கட்டளையிட்டு அப்படியே நடந்து வரும் வடிவின் நல்ல இதயத்தை உணருங்கள். பட்டாளம், பட்டணம் என்று சுற்றித் திரிந்தாலும் திரிந்திருப்பேன். அதனால் உங்களுக்குத் தொந்தரவாக இருந்தது இல்லையே!

தாமோ: (நிதானமாக) நீ என்னதான் சொல்கிறாய், தரணி!

தரணி: அதிகமாகச் சொல்வதற்கு ஒன்றும் இல்லை அண்ணா! இந்த வழக்கில் என்னைச் சிக்க வைத்துக் குறைந்த காலதண்டனை,

இல்லை, அபராதத்தோடு தாங்கள் தப்ப வழி உண்டு. அண்ணா! அந்தப் போஸ்டல் ஆர்டர்களை நீங்கள்தான் எனக்கு அனுப்பினீர்கள். வேறு எவருக்குமே இது தெரியாது. உங்கள் மனசைத் தவிர, வேறு சாட்சியமும் இதற்கு இல்லை. அதை வெளியே எடுத்துச் சொல்வீர்களோ, இல்லையோ! உங்கள் வார்த்தையில் இருக்கிறது. என் எதிர்காலமும், என் குடும்பத்தின் நல் வாழ்வும். நான் கடுங் காவல் கைதியாகச் சிறை போக நேர்ந்தால், அது நன்றாக எனக்குத் தெரிந்து விட்டது.



வடிவு தாங்கவே மாட்டாள் அண்ணா! மானம் போனால்....(தாமோதரனை உற்றுப் பார்த்து) மரணம் பெரிதல்ல. நினைவில் வையுங்கள்.

*[வேகமாக வந்த வழியே திரும்பிப் போகிறான்.]*

## காட்சி 6

*[அன்றிரவு...... தாமோதரன் வீடு. இரவு பத்து மணி சமயம். தாழ்வாரத்தில் சிலர் நிற்கிறார்கள்...... அவர்களிடையே பீதியும், பரபரப்பும் தென்படுகின்றன. தரணிபதி வருகிறான். ஒரு கட்டிலில் தாமோதரன் படுத்துக் கிடக்கிறார். பக்கத்தில் போலீஸ் அதிகாரியும் வைத்தியரும் வேறு சிலரும் நிற்கிறார்கள்.]*

**தரணி :** (பாய்ந்து சென்று அண்ணன் கைகளைப் பிடித்து) அண்ணா! அண்ணா! இதென்ன கோலம்?

**தாமோ :** (பலஹீனமான குரலில்) ஒன்றுமில்லை, தரணி! என்னுடைய பெரிய குற்றத்துக்கு நானே தண்டனை அளித்துக் கொண்டேன். தற்கொலை பாவம் என்றுதான் சொல்கிறார்கள். ஆனால் அடாது செய்தவன் படாது பட்டுத்தான் தீர வேண்டும்.

**தரணி :** அண்ணா!

**தாமோ :** பாகப் பிரிவினை செய்து விடலாமே என்று நீ சொன்னது எனக்கு வஞ்சக புத்தியை உண்டாக்கியதே தவிர வாழ்வின் நியதியைப் போதிக்க வில்லை. உன்னைத் தொல்லையில் சிக்க வைக்க முடிவு செய்தேன். மோசடி செய்து அந்தப் போஸ்டல் ஆர்டர்களை உனக்கு அனுப்பினேன். நாணயக் குறைவான செயலில் ஈடுபடுகிறோம், இல்லை ஈடுபடுத்துகிறோம் என்பது தெரியாத மாசற்ற மனசோடு நீ அவற்றை மாற்றிப் பணத்தையும் கொண்டு வந்து என்னிடம் கொடுத்தாய். அகப்பட்டாய் நீ என்று பரம சந்தோஷப்பட்டேன், தரணிபதி!

**தரணி :** அண்ணா!

**தாமோ :** பாகப் பிரிவினையின்போது பழைய கணக்குகளைக் கேட்பாயே என்று எதிர்பார்த்தேன். அப்படிக் கேட்டு என்னைச் சிரமப்படுத்துவாய் என்று நினைத்தேன். அதற்காகவே உன்னை ஒரு சங்கடத்தில் ஆழ்த்த வேண்டுமென்று தீர்மானித்தேன்.

*[இருமுகிறார். பயங்கரமாக விழிக்கிறார்.]*

**தரணி :** அண்ணா! ஏன் இப்படி விழித்துப் பார்க்கிறீர்கள்?

**தாமோ :** (சமாளித்து) நீயோ நடந்தது எதையுமே கேளாமல் உன் பங்கை நிர்வகிக்க ஆரம்பித்தாய். என்னோடு எப்போதும் போலவே சுமுகமாகவே பழகினாய். அதைப் பார்த்ததுமே என் மனசை வேதனை பிழிந்தெடுத்தது. குற்றம் என்றைக்கு வெளிப்படுமோ என்று எதிர்பார்த்துப் பயந்து கிடந்தேன். அதுவும் வெளிப்பட்டது. நானும் நீயும் அகப்பட்டோம். உன்னைப் பொறுத்த வரையில் என் வஞ்சம் நிறைவேறி இருக்கும். ஆனால் பயன்? இப்போது நான் ஒண்டிக் கட்டை. நீ அப்படியல்ல. குடும்பஸ்தன். வாழ வேண்டியவன். (இருமியபடி) பாகப் பிரிவினையால் கோபம் அடைந்து நான் செய்த பாவத்தையும் பங்கு பிரித்து நாம் இருவரும் அதைச் சுமக்க வேண்டு மென்று எப்படித்தான் நினைத்தேனோ? எந்த மனசோடுதான் திட்டமிட்டேனோ? வேண்டாம். அந்த பாவத்தை நானே சுமந்து செல்கிறேன்!

**தரணி :** அண்ணா!

**தாமோ :** (இன்ஸ்பெக்டரைப் பார்த்து) சார்! என் தம்பி நிரபராதி. மனமறியக் குற்றம் செய்யாதவன். நிஜமான விலாசம், கையெழுத்தோடு அந்தப் போஸ்டல் ஆர்டர்களை அவன் மாற்றியதே அதற்குப் போதுமான சாட்சியாகும்! போஸ்டல் ஆர்டர்களை அனுப்பியது நான்தான். குற்றவாளியும் நானேதான். என் தம்பியை விட்டு விட ஏற்பாடு செய்யுங்கள். என்னைத் தாற்காலிகமாக வேலையிலிருந்து நீக்கி வைத்து வழக்கும் தொடுத்திருக்கிறார்கள். நான் சிறை சென்று மீண்டு வந்தாலும் நாணயக் குறைவானவன் என்ற பெயரோடுதான் நடமாட வேண்டும். என் குடும்பத்துக்கே அதனால் அவமானம். அது கூடாது. இந்த உலகத்திலிருந்தே என்னை நீக்கிக் கொள்கிறேன்.. தரணி! என் கடனுக்குப் போக மீதப்படும் சொத்துக்களை உனக்கே விட்டுப் போகிறேன். திலகவதியை உன் மகளாகவே வளர்த்து நல்ல வாழ்வைத் தேடிக் கொடு! எல்லோரும் சுகமாக இருங்கள். தரணி!...திலகம்!...

*[தலை கவிழ்கிறது. மறு விநாடி உயிர் பிரிகிறது. தரணிபதி கதறுகிறான்.]*

Printed and Published by T. Sadasivam at the Kalki Press, Kilpauk, Madras-10
for the Proprietors Messrs Bharathan Publications Private Limited
Managing Editor: T. Sadasivam.

ஸ்நானத்தின் புதுமை யின்பத்தை
நாள் முழுதும் அனுபவித்திட

# ஹிமாலயா புக்கே

டால்கம் பவுடர்




லண்டனிலுள்ள இராஸ்மிக் கம்பெனி
லிமிடெடுக்காக இந்தியாவில் தயாரித்தது

HB. 10-50 TM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon





# பூவைப் போல...
# உங்கள் மேனியை
## மலரச் செய்வது
# ரெக்ஸோனா





ரெக்ஸோனா சோப்பில் இருப்பது கேடில் —சருமத்திற்கு ஊட்டமளித்து உங்கள் இயற்கையழகை வெளிக் கொணரத் துணைபுரியும் எண்ணெய்கள் கலந்த விசேஷத் தைலமே கேடில்!




**கேடில் கலந்துள்ள சோப் இது ஒன்றே**

RP. 148-50 TM

ரெக்ஸோனா ப்ரொப்ரைடரி லிமிடெடுக்காக இந்தியாவில் தயாரித்தது.